# அருமைப் புதல்வர்க்கு

எஸ். சத்தியமூர்த்தி

தமிழாக்கியவர்
எஸ். நீலமேகம்



கலைமகள் காரியாலயம்,
மயிலாப்பூர் :: சென்னை-4.

# முகவுரை

பெருமைப்படக்கூடிய பிதுரார்ஜிதத்தை என் தகப்பனாரிடமிருந்து அடையும் அரிய வாய்ப்பு எனக்குக் கிடைத்திருக்கிறது. அழிவற்றதும் ஒருவராலும் அபகரிக்க முடியாததுமான ஓர் ஆன்மிகமான சம்பத்து இது. இப்பாரம்பரியத்தின் சாரம் முழுவதும் இக் கடிதங்களில் உருப் பெற்றிருக்கின்றன என்றே எனக்குத் தோன்றுகிறது.

மற்றச் சொத்துக்களைப்போல் அல்லாது ஆன்மிக சம்பத்தானது, பிறருடன் பகிர்ந்துகொண்டாலும் குறைந்துவிடுவதில்லை. அதற்கு நேர் எதிராக, பெருகத்தான் பெருகுகிறது. எனவே பிரத்தியேக சந்தோஷத்துடன் எனது தகப்பனாரின் கடிதங்களின் இந்த இரண்டாவது பதிப்பைத் தென்னிந்திய இளைஞர்களுக்கு அறிமுகப்படுத்துகிறேன். பல இளம் உள்ளங்களில் இப் புத்தகம் ஒரு சிறிய ஜோதியை ஏற்றி வைக்கும் என்று திண்ணமாக நம்புகிறேன். இதன் ஒளி வாழ்வின் மேடு பள்ளங்களுக்கு இடையேயும் ஆடாமல் அசையாமல் சுடர் விட்டுப் பிரகாசித்து, வாழ்க்கை ஓர் உன்னதமான சுவாரஸ்யப் பிரயாணம் என்றும், வாழ்வைத் தனக்காகவும் பிறருக்காகவும் ஒவ்வொருவரும் ஒரு கலையாகப் பேணிப் போற்றுங்கள் என்றும் அவர்களுக்கு எடுத்துக் கூறும்.

கோட்டயம்
5-7-'56.

லக்ஷ்மி கிருஷ்ணமூர்த்தி.

# பதிப்புரை

சுதந்தரப் போராட்டக் காலத்தில் காங்கிரஸ் மகாசபையின் வெண்கலக் குரலாக விளங்கியவர், தேச பக்தர் எஸ். சத்தியமூர்த்தி. அவருடைய பேச்சு வல்லமை மட்டுமல்லாமல், இலக்கியத் தேர்ச்சியும் மிகவும் பிரசித்தமானது. கடைசி மூச்சு வரைக்கும் அவர் நாட்டுக்குச் செய்துள்ள தியாகம், சரித்திரப் பெருமை வாய்ந்தது.

1941-இல் சென்னைச் சிறையில் புகுந்த காலத்தில், அவர் தம் அருமைப் புதல்வி ஸ்ரீ லக்ஷ்மி (கிருஷ்ணமூர்த்தி)க்குப் பலவேறு விஷயங்களைப்பற்றி 68-கடிதங்கள் எழுதினார். இந்தக் கடிதங்கள், ஸ்ரீ சத்திய மூர்த்தியவர்களின் கருத்துக்களையும் இயல்புகளையும் சிறப்புக்களையும் தெளிவாக உணர்த்துகின்றன. இவற்றைப் படிக்கும்போது அவர் நேரே தம் புதல்வியோடு பேசுவதை நாம் காண்கிறோம். அவர் ஆங்கிலத்தில் எழுதிய கடிதங்களை ஸ்ரீ நீலமேகம் தமிழில் மொழிபெயர்த்துச் சுதேசமித்திரன் வாரப் பதிப்பில் தொடர்ச்சியாக வெளியிட்டார். இந்தப் புத்தகத்தின் முதற் பதிப்பு, 1945-இல் வெளிவந்தது.

தமிழில் கடித இலக்கியம் மிகவும் குறைவு. அந்தக் குறையை நீக்க முயலும் இந்தத் தொகுதி, நம் காலத்து மக்கள் வாழ்வைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாகத் திகழ்கிறது. கலைமகள் வெளியீடாக இரண்டாம் பதிப்பைப் பிரசுரிக்க அநுமதியளித்த ஸ்ரீமதி லக்ஷ்மி கிருஷ்ணமூர்த்தி அவர்களுக்கு நன்றி.

மயிலாப்பூர்,
சென்னை 4,
19-7-'56

—பதிப்பாளர்

# பொருளடக்கம்


| | | பக்கம் |
|---|---|---|
| 1. | கல்யாண விஷயம் | .. 3 |
| 2. | ஓய்வுநேர உல்லாஸ வேலை | .. 6 |
| 3. | தேகாப்பியாசம் | .. 10 |
| 4. | நட்பு | .. 14 |
| 5. | சம்பாஷணை | .. 18 |
| 6. | விருந்தினருக்கு உபசாரம் | .. 22 |
| 7. | பிரயாணம் | .. 27 |
| 8. | பிரசங்கம் I | .. 31 |
| 9. | பிரசங்கம் II | .. 35 |
| 10. | பிரசங்கம் III | .. 38 |
| 11. | மரியாதையான பழக்கம் | .. 42 |
| 12. | புத்தகங்கள் | .. 46 |
| 13. | பந்தய விளையாட்டுகள் | .. 50 |
| 14. | கடவுளும் மதமும் | .. 54 |
| 15. | உண்மையான மத பக்தி | .. 58 |
| 16. | ஹிந்து மதம் | .. 62 |
| 17. | நாடகம் I | .. 66 |
| 18. | நாடகம் II | .. 69 |
| 19. | பேசும் படமும் நாடகமும் | .. 75 |
| 20. | சங்கீதம் | .. 79 |
| 21. | சங்கீதக் கச்சேரிகள் | .. 83 |
| 22. | சித்திரக்கலை | .. 87 |

### அமைதி தோன்றுவது எங்கே?

அமைதி அகத்தே தோன்றி மலர்வதாயினும், அதனுடைய வளர்ச்சிக்குப் புறமும் ஓரளவு உதவி புரிகின்றது. பல சந்தருப்பங்களில் புறப்பொருள்கள் அமைதியின் வளர்ச்சிக்குத் துணை புரியாவிடினும், இடையூறு செய்யாமல் இருந்தாற்போதும் என்று கூறத் தோன்றுகிறது. இதனாலேயே அமைதியை நாடி அலையும் பெரியோர்கள் மக்கட் கூட்டம் இல்லாத காடு முதலியன நோக்கி ஓடிவிடு கிறார்கள போலும்! காடு நோக்கி ஓடினாலும் புறத்தே அமைதியான சூழ்நிலையை உண்டாக்கிக்கொள்ள லாமே தவிர, அகத்தே—மனத்தினுள்ளே—அமைதி யைப் பெற முடியாது. அது தானே முகிழ்ப்பது. அகத்தே அமைதி பிறக்கப் புறச்சூழ்நிலை ஓரளவு துணைக் காரணமாகலாம்.

### அமைதி வேட்டை

உலகில் மனிதனாய்ப் பிறந்த ஒவ்வொருவனும் இவ்வமைதியை நாடி அலைகிறான். எத்தகைய சூழ் நிலையில் வாழ்ந்தால் இது எளிதிற்கிட்டும் என்றறி யப் பல்லாயிரக் கணக்கான ஆண்டுகளாக மனித சமுதாயம் வாழ்ந்து பார்க்கின்றது. தனி வாழ்க்கை சமுதாய வாழ்க்கை, கூட்டு வாழ்க்கை, அரசியல் வாழ்க்கை என்ற பல வகை வாழ்க்கையிலும் மனி தன் நாடி அலைவது இவ்வமைதியையே!

### தமிழன் கண்ட விடை

ஏனைய சமுதாயத்தார் இத்தகைய அமைதி வேட்டையில் இறங்குமுன்னரே தமிழன் அமை தியை அடைய மிகுதியும் உதவும் ஒரு சூழ்நிலையைக் கண்டான். அதுவே இல்வாழ்க்கை எனப்படும்.

பக்கம்

51. பெண்களுக்கு ஓட்டுரிமை .. 199
52. பெண்களுக்கு ஓட்டுரிமை II .. 202
53. புகழுரை .. 206
54. மிருக வேட்டை .. 209
55. பழமொழிகள் .. 213
56. விவாதங்கள் .. 217
57. சட்டசபை விவாதம் .. 221
58. இயற்கை அழகு .. 224
59. கோபம் .. 228
60. சுய மரியாதை .. 232
61. புத்தகம் படித்தல் I .. 235
62. புத்தகம் படித்தல் II .. 237
63. நல்லவர் பழக்கம் .. 241
64. பிறந்த நாள் .. 244
65. ஆனந்தம் .. 248
66. சீதையின் பெருமை .. 251
67. ஸ்ரீ அநுமானின் சக்தி .. 254
68. பகவத் கீதை .. 257



எஸ். சத்தியமூர்த்தி

# கல்யாண விஷயம்

**என் அன்புள்ள**
**லக்ஷ்மிக்கு,**

நாளாவட்டத்தில் நீ சிரத்தையுடன் கவனிக்கக் கூடிய முக்கியமான அம்சங்களைக் குறித்து உனக்குத் தொடர்ச்சியாகச் சில கடிதங்கள் எழுத உத்தேசித்திருக்கிறேன். இன்றும் இடைக் காலத்திலேயே இருந்து வருவதாகச் சொல்லக்கூடிய இளம் பெண்களின் தலைமுறையைச் சேர்ந்தவள் நீ. வாழ்க்கையில் மற்றவர்களுக்கும், மனித வர்க்கத்துக்கும் உன் உரிமைப்படி சேவை செய்ய வேண்டுமென்று நீ விரும்புகிறாய் என்பது எனக்குத் தெரியும். இந்த லட்சியத்தில் தவறு ஒரும் கிடையாது. பார்க்கப்போனால் இது மிகவும் நல்ல விஷயந்தான்.

ஆனால் ஒன்று: இந்தியாவிலுள்ள பெண்களுக்கு, முக்கியமாகத் தென்னிந்தியப் பெண்களுக்கு, கல்யாணம் மிகவும் அவசியமான காரியம். கல்யாணம் செய்துகொள்வது என்பது உன் சுதந்திரத்தைக் கட்டுப்படுத்தும் காரியம் என்று நீ இன்று நினைக்கலாம். ஆனால் நான் சொல்வதை நம்பு. நூற்றுக்கு 99 இனங்களைப் பார்த்தால், கல்யாணம் உண்மையில் சுதந்திரம் உள்ளது தான் என்பது தெரியவரும்.

நெற்றி வேர்வை நிலத்தில் விழும்படி உழைத்து உணவைச் சம்பாதிப்பது என்பது உல்லாசமான வேலை அல்ல. ஆண்கள் சம்பாதிக்க வேண்டும். பெண்கள் குடும்பத்தை நடத்த வேண்டும். இது நேர்மையான விஷயந்தான்.

ஹிந்துப் பெண்களுக்குப் பொருளாதாரத் துறையில் அதிகமான சுதந்தரம் இருக்க வேண்டும் என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். சொத்துரிமை விஷயத்தில் அவர்களுக்குத் திட்டமான

# அருமைப் புதல்விக்கு

உரிமை இருக்க வேண்டும். கல்யாணமான பெண்கள் பண விஷயத்தில் தங்கள் கணவனையே நம்பியிருக்கக் கூடாது. ஆனால் இந்த நிலைமையை அளவுக்கு அதிகமாகச் செய்யவும் கூடும். இந்தக் காலத்தில் அநேகம் புருஷர்கள் தங்களுடைய மனைவிகளிடம் பணத்தை ஒப்படைப்பதில் ஒருவிதமான சந்தோஷத்தை அடைகின்றனர்.

மனைவியாகவும் தாயாகவும் இருக்க நேருவது உத்தமமான பாக்கியம். அதேபோல், புருஷனாகவும் தகப்பனாகவும் இருப்பது உன்னதமான ஒரு பாக்கியந்தான். இந்த உறவு விஷயத்தில் நாம் உயர்வு, தாழ்வு என்ற உணர்ச்சிகளையெல்லாம் அடியோடு ஒழித்து விட்டு, சம உணர்ச்சியை அபிவிருத்தி செய்துகொள்ள வேண்டும்.

உன்னுடைய மேல் படிப்புப்பற்றி என்ன செய்ய உத்தேசித்திருக்கிறாய்? கல்யாணம் படிப்புக்குத் தடையாக இருக்கக் கூடாது. அது தடையாக இருக்கும் என்று நான் நினைக்கவில்லை. ஆங்கில இலக்கியத்தில் உனக்குள்ள ஞானத்தைச் சீர்படுத்திக் கொள்ள வேண்டும் என்பது என் விருப்பம். அதோடு நன்றாக வீணை வாசிக்கக் கற்றுக்கொள். ஸம்ஸ்கிருதம், ஹிந்துஸ்தானி, தமிழ் ஆகியவற்றையும் கற்றுக்கொள். உலகத்தில் நடக்கும் சம்பவங்களைத் தொடர்ச்சியாக நீ தெரிந்து வைத்துக்கொள்ள வேண்டும். இவற்றையெல்லாம்விட இன்னொரு விஷயத்தை முக்கியமாக நீ கவனிக்க வேண்டும். புத்தியைக் கொண்டு செய்யும் காரியங்களிலும் ரஸானுபவங்களிலும் உன் கணவருக்கு உற்ற துணையாக இருக்கும்படியான முறையில் நீ மேற்கொண்டு உன்னைத் தயார் செய்துகொள்ள வேண்டும். இதில்தான் இருக்கிறது உண்மையான சந்தோஷம்.

இது இருக்கட்டும். யாரைக் கல்யாணம் செய்துகொள்ளப் போகிறாய்? தாராளமாக மனம் விட்டுத் தெரிவித்து எழுதக் கூடிய விஷயம் அல்ல இது. சுலபமாக எழுதக் கூடியதும் அன்று. ஸம்ஸ்கிருதக் கவி உண்மையை எடுத்துப் பின்வரும் வாக்கியங்களில் சொல்கிறார்:

## கல்யாண விஷயம்

* கன்யா வரயதே ரூபம்; மாதா வித்தம்; பிதா ச்ருதம்; பாந்தவா: குலமிச்சந்தி: ம்ருஷ்டான்னம் இதரே ஜநா.

'பெண் அழகை நாடுகிறாள்; தாய் சொத்தை விரும்புகிறாள்; தகப்பனார் படிப்பைக் கவனிக்கிறார், உறவினர் நல்ல குலமா என்பதைப் பார்க்கிறார்கள், பாக்கிப் பேர் கல்யாணத்திலே நல்ல சாப்பாட்டில் நாட்டஞ் செலுத்துகின்றனர்.' இவை எல்லாவற்றையும் கவனிப்பது விசேஷந்தான் உன்னைப் பொறுத்தமட்டில், பகவத் சங்கற்பத்தை முன்னிட்டு உனக்குப் பிடித்த ஒரு வரனைத் தேடி உனக்கு மணமகனாக்க முயல்வோம். வரன் தேடும் விஷயத்தில் உன் அபிப்பிராயப்படிதான் நடக்கும். அதில் உன் கருத்துத்தான் முக்கியமாக மேலோங்கி இருக்கும். இன்று நமது நாடு உள்ள நிலைமையில், தாயும் தகப்பனுமே இந்த விஷயத்தை முக்கியமாகக் கவனித்துச் செய்ய வேண்டும். அதுவே கிரமம்.

உன் சந்தோஷந்தான் உன் அப்பா, அம்மாவுக்கு முக்கியம். வாழ்க்கையில் உனக்கு நல்ல கணவனாக இருக்கக் கூடிய வரனை அவர்கள் தேடுவார்கள். பகவான் இந்தக் காரியத்தை நல்ல படியாகச் செய்ய வழி காட்ட வேண்டும் என்பது எங்கள் பிரார்த்தனை. ஹிந்துக்களின் பதிவிரதா தருமத்தில் மிகவும் முக்கியமான அம்சம் இருக்கிறது. அதை நீ அநுசரித்து நடந்துகொள்வாய் என்று எனக்குத் தெரியும். நீ அப்படி நடந்தால், சந்தோஷமும், உண்மையான மண வாழ்க்கையில் உள்ள சகல மங்களங்களும் உனக்குக் கிட்டும்.

27-5-1941

*कन्या वरयते रूपं माता वित्तं पिता श्रुतम् ।
बान्धवाः कुलमिच्छन्ति मृष्टान्नं इतरे जनाः ॥

# ஓய்வு நேர உல்லாச வேலை

**என் அன்புள்ள**
**லக்ஷ்மிக்கு,**

ஓய்வு நேரத்தில் பொழுது போக்குக்காகச் செய்யக் கூடிய வேலை ஒன்றைப்பற்றி உனக்குச் சொல்லப்போகிறேன். நீ உனக்கென்று ஓய்வு நேர உல்லாச வேலையாக ஒன்றைப் பழகிக் கொள்ள வேண்டும் என்பது என் எண்ணம். அதை உன் வாழ் நாள் எல்லாம் அனுஷ்டித்து வர வேண்டும். இதனால் உன் வாழ்க்கை சந்தோஷகரமாக இருக்கும், ருசிகரமாகவும் இருக்கும்.

ஓய்வு நேர உல்லாச வேலை என்றால் என்ன? அகராதியில் உள்ள வியாக்கியானத்தை நான் சொல்லவில்லை. ஓய்வு நேரத்தில் பொழுதுபோக்குக்காகச் செய்யும் வேலையைச் சாதாரணமாகப் பித்துக்கண்டவை என்று சொல்லலாம். ஏதாவது ஒரு வேலை; அதை ஜீவனத்துக்காகச் செய்வதில்லை. கடமையை உத்தேசித்துச் செய்வதும் அல்ல. சந்துஷ்டிக்காகச் செய்யும் வேலை அது. நீ தேர்ந்துகொள்ளும் வேலை எதுவாக இருந்தாலும், அது சாதாரணமாக உன் அலுவல்களுக்குப் புறம்பானதாக இருக்க வேண்டும்.

புத்தகங்கள் என்றால் உனக்கு நிரம்பப் பிடிக்கும் என்று எனக்குத் தெரியும். ஆனால் அது உன்னுடைய ஓய்வு நேர உல்லாச வேலையாக இருக்க முடியாது. படிப்பு என்பது உன்னுடைய சாதாரண வேலைகளில் ஒன்று. வேண்டுமானால் இப்படிக் கூட நான் சொல்லுவேன். ஓய்வு நேர உல்லாச வேலைக்கும் உன்னுடைய சாதாரண அலுவல்களுக்கும் சம்பந்தமே இருக்கக் கூடாது. ஆனால் நீ பொழுது போக்குக்காகத் தேர்ந்து கொள்ளக் கூடிய வேலை எப்படி இருக்க வேண்டுமென்று தெரி

யுமா? அது உனக்குப் பிடித்த வேலையாக இருக்க வேண்டும்; அதை விருத்தி செய்வதில் உண்மையான உத்ஸாகம் இருக்க வேண்டும்; அவ்வேலையிலிருந்து உண்மையாகவும் நிரந்தரமாக வும் சந்தோஷம் கிட்டும்படியும் இருக்க வேண்டும்.

நான் இதுபற்றிச் சற்று யோசித்தேன். உனக்குத் தோட்ட வேலை பொழுதுபோக்கு வேலையாக இருக்கலாம் என்பது என் எண்ணம். அது உனக்குப் பிடிக்கிறதா? அந்த வேலையை உனக் குப் பிடித்தமானதாகச் செய்துகொள்வாய் என்று நம்புகிறேன். தோட்ட வேலையில் சந்தோஷம் அளிக்கும் அலாதியான அம்சம் ஒன்று இருக்கிறது. கஷ்டப்பட்டு வேலை செய்து தன்னுடைய வேலையினுல் ஏற்படக் கூடிய பலன்களைச் செடிகள், புஷ்பங்கள், பழங்கள் ஆகியவற்றின் ரூபத்தில் காண்பது சந்தோஷகரம் ஆகும். இதனுல் உனக்கு மட்டும் இல்லாமல் அவற்றைப் பார்க்கும் அனை வருக்கும் சந்தோஷம். எனவே, இவ்வேலை வாழ்க்கையில் மிகவும் பெரிய அநுபவம் ஆகும்.

வழக்கப்படி செய்ய வேண்டிய வேலைகளை யெல்லாம் தோட்டக்காரர்கள் செய்துவிடுவார்கள். ஆனல், இந்த வேலை யில் நாளாவட்டத்தில் நீயே பங்கெடுத்துக்கொள்வாய். அதுவே உன்னைப் பற்றிக்கொள்ளும். தோட்டத்தைப் பயிர் செய்வது; பருவகாலங்களைப் பரிசீலனை செய்து அறிவது, செடி கொடி களுக்கு எதிரியாக உள்ள பூச்சி புழுக்களுடன் எதிர்த்துப் போராடு வது, தோட்டத்துக்குச் செவ்வனே நீர் பாய்ச்சி, உரம் போடு வது; வர்ண வாரியாகத் தோட்டத்தை அமைக்கும் திட்டம்; அதை உன் வீட்டுக்குப் பொருத்தமாக அமைப்பது முதலிய இக்காரியங்கள் பற்றியெல்லாம் நீ சிந்திக்கும்படி நேரும். ரஸிக உணர்ச்சியையும் பிரயோகிக்க நேரிடும்.

சென்னைபோன்ற இடங்களில் தோட்ட வேலை நிரம்பக் கஷ்டமாகும். ஆனுல் அதிருஷ்டவசமாக உனக்கு நல்ல இட மாகக் கிடைக்கும் பட்சத்தில் அவ் வேலை மிகவும் சுலபமாக இருக் கும். சென்னையில்கூட நீ நல்ல தோட்டத்தைப் பயிராக்கி உருப்

படுத்த முடியும். உன்னுடைய தோட்டம் நன்ருக இருக்கிறது. கொஞ்சங் கொஞ்சமாக அது சிறந்து விளங்கும்.

தோட்ட வேலை உனக்குத் தேகப்பயிற்சியை அளிக்கிறது. நிறைய நல்ல காற்றுக் கிடைக்கிறது. விடியற்காலையில் எழுந்திருக்கச் செய்கிறது. இது நல்லது. தோட்டவேலை செய்வதால் அழகான பறவைகளை நீ காணலாம். அவைகளின் வாழ்க்கையையும் நீ அறியலாம். இதைத் தவிர, தேனி வளர்க்க ஆரம்பித்தால், தேனீக்களின் அற்புதமான பழக்க வழக்கங்களையும் கற்றுக் கொள்ளலாம். நல்ல தேனும் உனக்குக் கிடைக்கும். அது மிகச் சிறந்த ஆகாரம்.

காய்கறிகள், புஷ்பங்கள், பழங்கள் இவற்றைக் கொடுக்கக் கூடிய தோட்டத்தைப் பயிர்செய்ய முடியும். ஓரளவு நீயும் இதைச் செய்யலாம். ஆனல் ஓய்வு நேர உல்லாச வேலை என்ற முறையில் தோட்ட வேலையைக் குறித்து உனக்கு இதை நான் எழுதுகிறேன். முக்கியமாகப் புஷ்பங்களைப்பற்றி எழுதும்போது அவற்றை நாம் செடிகளிலிருந்தும் கொடிகளிலிருந்தும் பறிப்பது சரியா? புஷ்பங்களைப் பறிக்காமல் அவற்றைச் செடி கொடிகளிலேயே விட்டு வைத்தால் நமது தோட்டம் சோபையுடன் சிறந்து விளங்கும் அல்லவா? அவற்றைப் பார்த்து, அவற்றின் தோற்றத்தையும் மணத்தையும் அநுபவிக்கலாம் அல்லவா? அது ஆச்சரியமானதுதான்.

சகுந்தலை துஷ்யந்த மகாராஜாவின் தர்பாருக்குச் செல்லுகிருள். அந்தச் சமயத்தில் தம் காட்டில் வளர்ந்த தோட்டத்திலே உள்ள நறுமலர்களையும் பசுங் கொடிகளையும் நோக்கிப் பின்வருமாறு சொல்லுகிருர் கண்வ மஹரிஷி: "உங்களுக்கெல்லாம் தண்ணீர் விடுவதற்கு முன்னுல் சகுந்தலை நீர் அருந்த மாட்டாள்; நிறையப் பூச் சூடிக்கொள்வதென்ருல் அவளுக்குப் பரம ஆசை; ஆனல் அதற்காக இளந் தளிர்களையோ, நறுமலர்களையோ ஒருபோதும் பறிக்க மாட்டாள்; அவள் இப்போது தன் புருஷன் வீட்டுக்குப் போகிருள்...நீங்களெல்லாம் அவள் போக அநுமதி தாருங்கள்."

## ஒய்வு நேர உல்லாச வேலை

* பாதும் ந ப்ரதமம் வியவஸ்யதி ஜலம் யுஷ்மாஸ்வ பீதேஷு யா, நாதத்தே ப்ரியமண்டனபி பவதாம் ஸ்நேஹேன யா பல்லவம்; ஆத்யே வ: குஸுமப்ரஸூதிஸமயே யஸ்யா பவத்யுத்ஸவ:, ஸேயம் யாதி சகுந்தலா பதிக்ருஹம் ஸர்வைரநுக்ஞாயதாம்.

ஆஹா! என்ன அற்புதமான அபிப்பிராயம்! தோட்டத்தை அன்புடன் வளர்ப்பதற்கு இது ஒரு வழி. இன்னும் இதர வழிகளும் உண்டு. தோட்ட வேலை மிகவும் உன்னதமான ஓய்வு நேர வேலை என்பதில் சந்தேகம் இல்லை. நீ அழகான தோட்டத்தை அமைத்திருக்கிறாய்; அதை வளர்ந்தோங்கச் செய். அன்புடன் அதைப் பராமரிக்கக் கற்றுக்கொள். அதை உன் ஓய்வு நேர உல்லாச வேலை ஆக்கிக்கொள். கடவுள் உன்னைக் காப்பாராக.

30-5-41.

*पातुं न प्रथमं व्यवस्यति जलं युष्मास्वपीतेषु या
नादत्ते प्रियमण्डनापि भवतां स्नेहेन या पल्लवम् ।
आद्ये वः कुसुमप्रसूतिसमये यस्या भवत्युत्सवः
सेयं याति शकुन्तला पतिगृहं सर्वैरनुज्ञायताम् ॥

# தேகாப்பியாசம்

**என் அன்புள்ள**
**லக்ஷ்மிக்கு,**

உன் வாழ்நாள் முழுவதும் ஆரோக்யமாக இருப்பதற்குத் தேகாப்பியாசம் எவ்வளவு அவசியமானது என்பதைப்பற்றி இன்று எழுதப்போகிறேன். ஆண்டவன் உனக்கும் உன்போன்ற மற்றச் சகோதர சகோதரிகளுக்கும் நல்ல சரீரத்தைக் கொடுத்திருக்கிறார். நாம் அதைச் சரிவர உபயோகித்தால் நோய்க்கே இடம் இராது. வயது வரு முன்னரே கிழத்தன்மையும் வராமல் இருக்கும்.

உன் வயதுள்ள பெண்களும், உன்னைக் காட்டிலும் சிறிய பெண்களும் பெரிய பெண்களும் பெரிய குடும்பங்களில்கூட, சில வருஷங்களுக்கு முன்புவரை வீட்டு வேலைகளை நிறையச் செய்வது வழக்கம். அநேகம் கிராமங்களிலும் பட்டணங்களிலும் பெண்கள் ஸ்நானம் செய்வதற்காக ஆறு, குளம், கிணறு முதலியவற்றிற்குப் போவார்கள். வரும்போது தலையிலோ அல்லது இடுப்பிலோ குடத்தில் தண்ணீர் கொண்டு வருவார்கள். இது அவர்களுக்கு நல்ல தேகாப்பியாச வேலை ஆகும். அவர்களில் அநேகருக்கு நீந்தத் தெரியும், நீந்தவும் நீந்தினார்கள். நீந்துவது நல்ல தேகாப்பியாசம்.

அதோடு, அவர்கள் வீட்டில் ஏராளமாக வேலை செய்தார்கள். வீட்டையும் அதைச் சுற்றியும் பெருக்குவார்கள்; சமைப்பார்கள், பரிமாறுவார்கள்; துணிகளைத் துவைப்பார்கள், பாத்திரம் தேய்ப்பார்கள். மாடு கறக்கத் தெரியும். ஆடு மாடுகளுக்குத் தீனி வைப்பார்கள்; உன்போன்ற பெண்களுக்கு அது முடியாது. அந்த வேலைகளை எல்லாம் செய்ய வேண்டிய அவசியமும் இல்லை.

ஆனால் அவ் வேலைகளை எல்லாம் செய்வது மட்டமானதல்ல என்பதை மட்டும் சொல்லுகிறேன்.

நான் இங்கிலாந்திலும் ஸ்காட்லாந்திலும் பார்த்திருக்கிறேன். வீட்டு வேலைகளைச் செய்வதற்காக அவ்விடங்களிலெல்லாம் வேலையாட்களை வைத்துக்கொள்வது சிலருக்குத்தான் சாத்தியம். எனவே, வீட்டில் உள்ள பெரும்பான்மையான வேலைகளையும் பெண்கள்தான் செய்கிறார்கள். உத்தியோக காலம் போக அவகாசம் கிடைக்கும்போது, கணவனோ தகப்பனாரோ பிள்ளையோ பெண்களுக்கு வீட்டு வேலைகளில் உதவி செய்வது வழக்கம்.

உனக்கு மேலே சொன்ன வேலைகள் இல்லாததால் நீ தினசரி தேகாப்பியாச வேலை செய்ய வேண்டும். மிஸஸ் பக் சொல்லி யிருக்கும் தேகாப்பியாச வேலைகளைக் கவனி. அதில் சுலபமாக உள்ளதைப் பார்த்து உனக்குத் தக்கபடியாகத் தினசரி அந்த அப்பி யாசங்களைச் செய். சுலபமான சுவாஸ அப்பியாசங்களைச் செய்ய வும் நீ பழக வேண்டும். அவை சுவாசாசயத்தின் சக்தியை அபி விருத்தி பெறச் செய்யும். இவற்றையெல்லாம்விட, தினசரி நீ இரண்டு மணி நேரமாவது வெளியே நல்ல காற்று இருக்கும் இடத்தில் இருக்க வேண்டும்.

'டென்னிஸ்' பெண்களுக்கும் நல்ல விளையாட்டுத்தான். நீ டென்னிஸ் ஆடக் கற்றுக்கொள்ள வேண்டும். அதை நன்றாகவும் ஆட வேண்டும். ஏதாவது ஒரு நாள் உனக்குத் தேகாப்பியாச வேலை செய்ய முடியவில்லை என்று வைத்துக்கொள். அன்று ஒரு மணி நேரமாவது வெளியே காற்றோட்டமாக உலாவப் போய் வரவேண்டும்.

நல்ல வேலைகள் எல்லாவற்றிற்குமே தேகம் ஓர் அஸ்திவாரம் போல. நீ ஏராளமாக விஷயங்களைத் தெரிந்துகொள்ளலாம்; புக ழடைந்து மற்றவர்களுக்குச் சேவை செய்வதில் அக்கறைகொள்ள லாம். ஆனால் இவற்றிற்கெல்லாம் நல்ல தெம்பு வேண்டும். அப்போதுதான் வேலைகளை நன்றாகச் செய்ய முடியும்.

## அருமைப் புதல்விக்கு

"தெளிவான புத்திக்குத் திடமான தேக ஆரோக்கியம் வேண்டும்" என்பது ஒத்தின் பழமொழி. இது உனக்குத் தெரிந்தது தான். இதை மிகைப்படுத்தவும் கூடும்; மிகைப்படுத்தவும் படுகிறது. ஆனால் இதில் உண்மை இருக்கிறது.

தேகாப்பியாசத்துக்கு உதவியாக, சரியான பழக்க வழக்கங்கள் இருக்க வேண்டும். முக்கியமாக, பானம், போஜனம், போகம். இவற்றில் எல்லாம் மிதமான முறை இருக்க வேண்டும். உயிர் வாழ்வதற்காக நாம் சாப்பிடுகிறோமேயன்றி, சாப்பாட்டுக்காக உயிரை வைத்துக்கொண்டிருக்கவில்லை. தற்காலத்திலுள்ள பழக்கங்கள் பல அவசியமற்றவை. அவற்றால் ஆரோக்கியத்துக்கும் கெடுதல்.

எனக்கும் உன் அம்மாவுக்கும் காபி என்றால் நிரம்பப் பிடிக்கும். ஆனால் உனக்கோ காபியோ டீயோ பிடிக்கவில்லை. பால் மட்டும் சாப்பிடுகிறாய். அந்தப் பழக்கத்தை விடாமல் இரு. நிறைய நல்ல பழங்களையும் காய்கறிகளையும் நீ சாப்பிட வேண்டும். நிறையப் பால் சாப்பிடு; தயிர் சாப்பிடு. வெண்ணெய், நெய் இரண்டையும் உட்கொள். தேக சம்பந்தமான சகல விஷயங்களிலும் முறைப்படியும் கட்டுப்பாட்டின்படியும் இரு.

உன்னுடைய உடம்பு, நகங்கள், தலைமயிர், கண்கள், காதுகள், வாய், பற்கள் முதலிய உறுப்புகளை எல்லாம் மிகவும் சுத்தமாக வைத்துக்கொள்ள வேண்டும். இந்த விஷயத்தில் நீ செவ்வையாக இருக்கிறாய் என்பது எனக்குத் தெரியும். முக்கியமாக உஷ்ணப் பிரதேசமான நம் நாட்டில் அடிக்கடி ஸ்நானம் செய்வதும் கைகால்களைச் சுத்தம் செய்துகொள்வதும் அவசியம்.

வளர்ந்து வரக் கூடிய உன்போன்ற பெண்கள் உடம்பைப் பற்றி ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். இதனால் அடுத்த தலைமுறைக்கு அநுகூலம். உன்னுடைய சரீரத்தைப் பொக்கிஷம் வைக்கக் கூடிய ஓர் இடம்போல் நினைத்துக்கொள். அதைச்

## தேகாப்பியாசம்

சுத்தமாகவும் ஆரோக்கியம் உள்ளதாகவும் தென்பாகவும் இருக்கும்படி செய்துகொள்.

பாரத வருஷத்தின் பண்டைக் காலத்துப் பெண்களைப்போல் நீயும் உடல் வலிமை பெற்று வளரக் கடவுளைப் பிரார்த்திக்கிறேன்.

31-5-'41.

௫

**என் அன்புள்ள**
**லக்ஷ்மிக்கு,**

தன்னடக்கம் எவ்வளவு அவசியமானது என்பதை உனக்கு வற்புறுத்த டென்னிஸன் எழுதிய கவிதைகளிலிருந்து சில பகுதிகளை நேற்று எழுத எண்ணினேன். ஆனால் அவை எனக்கு ஞாபகத்துக்கு வரவில்லை. இப்போது அவை நினைவுக்கு வந்துவிட்டன. **'தன்மதிப்பு, சுய அறிவு, தன் அடக்கம் – இவை மூன்றுமே வாழ்க்கையை உன்னதம் ஆக்கக் கூடியவை'** என்றார் மேனாட்டுக் கவிஞர். இதை நினைவில் வைத்துக்கொள்.

நட்பு அல்லது நேசம் என்றால் என்ன? அதைப்பற்றித்தான் இன்று உனக்கு எழுத விரும்புகிறேன். நட்பு என்ற தமிழ்ச் சொல் ஸம்ஸ்கிருதத்தில், 'வயஸ்ய' (**वयस्य**) என்று வழங்குகிறது. இப்பதத்தின் தாத்பர்யம் இதுதான் கிட்டத்தட்டச் சரிசமமான வயதுள்ளவர்களிடையேதான் உண்மையான நட்பு நிலைபெற முடியும். ஆனால் ஆங்கிலத்தில் ஒரு பழமொழி உண்டு. அதுவும் உனக்குத் தெரிந்ததுதான். 'மன உணர்ச்சியைப் பொறுத்திருக்கிறது வயது' என்பது அப்பழமொழி.

இன்னொரு விஷயம்: மேல்நாட்டுப் பிரபலக் கவிஞர் வேர்ட்ஸ்வொர்த் எழுதியுள்ள அழகான, 'லூயூக்' என்ற கவிதையை நீ படிக்க வேண்டும். வயது முதிர்ந்த ஒரு தகப்பனார், தம்முடைய குமாரனுக்குச் சரிசமமாக இருந்து சந்தோஷப்பட வேண்டும் என்று விரும்புகிறார். அப்போது அவர் தமது பூர்விக வாலிபப் பருவ நாட்களையும் பிள்ளைப் பிராய நாட்களையும் நினைவுக்குக் கொண்டுவந்து எண்ணிப் பார்க்கிறார். அச் சம்பவந்தான் அந்தக் கவிதையில் வர்ணிக்கப்பட்டிருக்கிறது இப்போது எனக்கு

வயது 53; உனக்கு 15 வயதுதான். இருந்தாலும் நீயே பார். நானும் நீயும் சிறந்த சிநேகிதர்களாகவே இருக்கிறோம். பொதுவாக உனக்கு மிகவும் சிறந்த நண்பர்கள் உன் வயதுள்ள கோஷ்டியில்தான் இருப்பார்கள். அத்தியந்த நண்பர்களை ஆக்கிக்கொள்வதற்கான இடம் காலேஜும் ஸ்கூலுந்தான். அதுவே அதற்குச் சரியான காலமும். என்னுடைய அத்தியந்த நண்பர் என்னோடுகூடக் காலேஜிலே வாசித்தவர் என்பதுதான் உனக்குத் தெரியுமே.

சிநேக பாவத்தில் மிகவும் முக்கியமான அம்சம் எது என்று கேட்கிறாயா? சிநேக பாவத்தில் பிரதிப் பிரயோஜனம் என்பதையே நாடாத தன்மைதான் முக்கிய அம்சம் என்று நான் தயங்காமல் சொல்வேன். பரஸ்பர சகாயம், லாபம் முதலியவற்றை நாடியே வாழ்க்கையில் பல விதமான தொடர்புகளும் உறவும் ஏற்படுகின்றன. ஆனால் நட்பு என்பதற்குக் குறிப்பாக எந்த லட்சியமும் கிடையாது. அதுவே ஓர் லட்சியம் ஆகிவிடுகிறது.

உன்னைப்போலவே பாவித்து, அதைக் காட்டிலும் அதிகமாக ஒருவனிடம் அன்பு செலுத்துவது உண்மையில் மிகவும் சந்தோஷகரமானதாகும். தம் விஷயத்தைக்காட்டிலும் சிநேகிதர் விஷயத்தில் அதிகமாகச் சிரத்தை கொள்ளுகிறார் என்றோ, அல்லது தம் விஷயத்தில் எந்த அளவு சிரத்தை கொள்ளுகிறாரோ அதேபோலச் சிநேகிதர் விஷயத்திலும் நடந்துகொள்கிறார் என்றோ ஒருவருக்கு உணர்ச்சி ஏற்படுமாயின், அது ஓர் அபூர்வ பாக்கியந்தான்.

கணவன்-மனைவி, அம்மா-அப்பா, தமையன்-தங்கை, பெற்றோர்-குழந்தை இந்த உறவுகள் எல்லாம் இருக்கின்றன அல்லவா? இவை எல்லாம் உத்தமமான உறவுகள்தாம். இவற்றால் உனக்கு நிரம்பச் சந்தோஷமும் ஆறுதலும் கிடைக்கின்றன. ஆனால் இந்த உறவுகளில் எல்லாம் ஓரளவு கடமையும் இருந்துவருகிறது. மேலே சொன்ன உறவுகளில் எல்லாம் ஒருவருக்கொருவர் சிநேகமாகத்தான் இருந்து தீர வேண்டும். இல்லாவிட்டால் அவர்களுக்குத் தொல்லைதான். நட்பு என்பதில் இயற்கையாகத் தோன்றும் ஓர் உணர்ச்சி இருக்கிறது. கடமை, எதையும் செய்ய வேண்டும் என்ற

நிர்ப்பந்தமே அதில் அடியோடு கிடையாது. இதனால்தான் சிநேகம் மிகவும் இன்பமாகப் பரிமளிக்கிறது.

சிநேகத்தால் உபயோகங்களும் இருக்கின்றன. சந்தோஷ காலத்தில் சிநேகிதர்களோடு இருந்தால் சந்தோஷம் அதிகமாகிறது. துக்கப்படும் சந்தர்ப்பத்திலோ சிநேகிதர்கள் இருந்தால் அது குறைந்துபோகிறது. கட்டுப்பாடான குடும்பத்தினர் இருப்பதோடு கூட, மிகவும் முக்கியமான விஷயங்களைத் தெரிவித்துப் பரஸ்பரம் அபிப்பிராயம் தெரிந்துகொள்ள ஒரு நண்பர் இருந்தால் அது மிகவும் விசேஷம். குடும்பத்திலேகூட உண்மையான நண்பர்கள் இருக்க வேண்டியதுதான் ஆனால் இந்தக் கடிதத்தில் வெளிச் சிநேகிதர்களைப்பற்றியே எழுதுகிறேன்.

நமது நாட்டில் உள்ள நிலைமையில் குடும்பத்துக்கு வெளியே ஆடவர்களின் சிநேகம் உனக்கு இருக்க முடியாது. ஆகவே ஸ்கூலிலும் காலேஜிலுந்தான் நீ நண்பர்களைத் தெரிந்தெடுத்துக்கொள்ள முடியும். ஆனால் இதில் வலுக் கட்டாயமான முறை இருக்க முடியாது. நான் மேலே சொன்னதுபோல் உண்மையான நட்பு அதுவாக, இயற்கையாகப் பிறக்க வேண்டும். சிநேக பாவத்தில் உள்ள முக்கிய அம்சம் இதுதான். நட்பிற்குப் பாத்திரமாக இருக்கக் கூடிய தன்மையை நீ பெற்றிருக்கிறாய். ஆகவே உனக்கு நண்பர்கள் கிடைப்பார்கள். அவர்களோடு நட்பாக இரு. நேச பாவத்தை வளரச் செய்; அது மேன்மேலும் வளர்ந்து பெருகட்டும்.

சம்பிரதாயத்தை அநுசரித்து உனக்கு அநேகருடைய பரிசயமும் நட்பும் இருக்க வேண்டும்; இருக்கவும் முடியும். ஆனால் உண்மையான நண்பர்கள் என்றால், சொற்பப் பேர்கள்தான் அம்மாதிரி இருக்க முடியும். அதோடு நீ திருப்தி அடைய வேண்டும். உண்மையான நண்பர்கள் யார் என்று எப்படித் தெரிந்துகொள்வது? இதில் நாமே நம்மை ஆராய்ந்து அறிய வேண்டும். அதுவே அதற்குச் சோதனை.

உண்மையான நண்பர் யார்? உன்னுடைய யோசனையை மதிக்க வேண்டும்; உனக்கு வலுவில் ஒத்தாசை செய்ய முன் வருப

வராக இருக்க வேண்டும்; உதவி செய்பவராக இருக்க வேண்டும்; உன்னுடைய சுக துக்கங்களைப் பகிர்ந்துகொள்ள வேண்டும்.

உண்மை நட்புக்கு அடையாளம் அது என்று எப்படி நமக்குத் தெரியும்? உன்னுடைய இயற்கை உணர்ச்சியே அதைத் தெரிவித்துவிடும்.

மற்றவர்களைவிடச் சில பேர்களோடு இருக்கும்போதுமட்டும் உள்ளூற உனக்குச் சந்தோஷமாக இருக்கிறது. எல்லாருடனும் நீ சௌஜன்யமாகவும் தாராளமாகவும் பேசிப் பழக வேண்டியது தான். ஆனால் உன் மனத்தில் உள்ள விஷயங்களையும், ஆழ்ந்த நேசபாவ உணர்ச்சிகளையும் அதிகமாக உன்னிடமிருந்து விஷயங்களைத் தெரிந்துகொள்ளும் ஒரு சிலரிடந்தான் தெரிவிக்க வேண்டும். உண்மையான, அத்யந்த நண்பர்களை நிதானிக்கும் விஷயத்தில் நீ அவசரப்பட்டுவிடவும் கூடாது. பரஸ்பரம் நேசித்து, சிரத்தை எடுத்துக்கொண்டு உண்மையான நண்பர்கள் ஆகும் விஷயத்தை அறிந்துகொள்ளச் சில வருஷங்கள் போக வேண்டும்.

உண்மையான நண்பர்கள் எல்லோரும் எல்லா விஷயத்திலும் ஒரே விதமான அபிப்பிராயம் உடையவர்களாக இருக்க வேண்டும் என்று அவசியம் இல்லை. எல்லா நண்பர்களும் எல்லா விஷயங்களிலும் ஒரே விதமான எண்ணம் கொள்வது என்றால் அந்த நட்பில் ருசி இராது. ஆனால் நண்பர்களிடையே மனத்தில் ஒன்றும் சொல்லில் ஒன்றும் என்ற தன்மை இருக்கக் கூடாது.

குடும்பத்துக்கு வெளியே உனக்கு இரண்டொரு நல்ல பெண்கள் சிநேகிதர்களாக இருக்க வேண்டும் என்று கடவுளைப் பிரார்த்திக்கிறேன். பிற்காலத்தில் உன்னுடைய வாழ்க்கையைச் சந்தோஷமாகச் செய்யும் பெண்களும் உனக்கு நண்பர்கள் ஆக வேண்டும் என்பதும் என் பிரார்த்தனை. அவர்களுடைய வாழ்க்கையையும் நீ சந்தோஷகரமாக இருக்கும்படி செய்ய வேண்டும்.

கடவுள் உன்னைக் காப்பாராக!

1-6-'41.

# சம்பாஷணை

**என் அன்புள்ள**
**லக்ஷ்மிக்கு,**

மனிதனுக்குச் சாதாரணமாகச் சதா பேசுவது சுபாவம். ஆகவே நாம் எல்லாரும் பேசுகிறோம். எங்கே பார்த்தாலும் பேச்சு; எப்பொழுது பார்த்தாலும் பேச்சுத்தான். ஆனால் இந்தப் பேச்சுக்களெல்லாம் சம்பாஷணையா? இல்லை.

சம்பாஷணை என்பது ஒரு கலை; அது ஒரு சிறந்த கலை. நல்ல சம்பாஷணை செய்யக்கூடியவராக இருப்பது சமூகத்துக்கு மிகவும் விசேஷ மதிப்பு வாய்ந்த சாதனம். சீரான சமூகத்துக்கு அது ஒரு மார்க்கம். நல்ல சம்பாஷணைக்காரராக இருப்பவர்களை நாம் வரவேற்க வேண்டும்

உணர்ச்சிப் பெருக்கெடுக்கக் கூடிய சந்தர்ப்பங்கள் பல உண்டு என்பது உண்மைதான். வெகு காலம் பிரிந்து இருந்துவிட்டு மீண்டும் நண்பர்கள் சந்திக்கிறார்கள் என்று வைத்துக்கொள். பேச்சு அப்போது அநாவசியமாகத் தோன்றும். அவர்களுடன் சேர்ந்திருப்பதே போதும். ஆனால் இது விசேஷமான சந்தர்ப்பத்தில் அபூர்வமாக ஏற்படக் கூடிய சம்பவம். கட்டுப்பாட்டு விதிகளுடன் நீயும் உன் அம்மாவும் இப்போது என்னை ஆஸ்பத்திரியில் வந்து பார்க்கிறீர்கள். நாம் தொடர்ச்சியாகச் சம்பாஷிக்காமல் போனாலும் நீ இங்கிருக்கும்போது எனக்கு வெகு சந்தோஷமாக இருக்கிறது. இதே மாதிரி உனக்கும் இருக்க வேண்டும்.

சாதாரணமான சந்தர்ப்பங்களிலெல்லாம் எல்லாச் சமூக வாழ்விலும் சம்பாஷணை மிகவும் சிறந்த சாதனம் என்பது தெரிந்த விஷயம். மிகவும் சிறந்த சம்பாஷணை என்றால் அது இருவருக்குள் நடக்க வேண்டும். இதில் மூன்று பேர்களோ

நான்கு பேர்களேகூட இருக்கலாம். அதற்குமேல் அதிகம் ஆகி விட்டால் அது உண்மையான சம்பாஷணைக்கு உகந்ததல்ல.

நீயும் நானும் பார்த்து அறிந்திருக்கும் கோஷ்டிகளில் அடிக்கடி பேச்சு வளர்ந்துகொண்டே போவதைக் கவனித்திருக்கிறோம். ஆனால் அதில் ஒரு சீரான முறையில் சம்பாஷணை நடத்தும் முயற்சியே இருப்பதில்லை. எல்லா நல்ல சம்பாஷணையின்போதும் ஒரு முதல் விதியை அநுஷ்டிக்க வேண்டும். அதாவது, அந்தச் சம்பாஷணையின்போது ஒருவர் மட்டுந்தான் பேச வேண்டும். இரண்டு பேர் ஒரே சமயத்தில் பேச ஆரம்பிப்பதாக வைத்துக்கொள். அதில் சாதாரணமாகப் படித்து விஷயமும் முறையும் தெரிந்த ஒருவர், தாம் பேசுவதை நிறுத்திக்கொண்டு மற்றொருவர் பேசுவதற்கு இடம் தருவார். ஆனால் இது என்னவோ அநேகமாக நேருவதில்லை. ஒரே சமயத்தில் மூன்று நான்கு பேர்களாகச் சேர்ந்து பேசுவதைக் கேட்டிருக்கிறேன்! நீயும் இதைக் கேட்டிருப்பாய் என்று நம்புகிறேன். இது மிக மட்டம்.

பேசுவதே முடிவான ஒரு லட்சியம் அல்ல. பேசுவது எதற்காக? நீ பேச வேண்டும்; அதை மற்றொருவர் தெரிந்துகொள்ள வேண்டும். ஆகவே நீ என்ன செய்ய வேண்டும் தெரியுமா? மற்றவர்கள் பேசிக்கொண்டிருக்கையில் நீயும் சேர்ந்து பேசக் கூடாது. இதை ஒரு விதியாக வைத்துக்கொள். அப்போதுதான் நீ மற்றவர் பேசுவதை நன்றாகக் கேட்க முடியும்.

இரண்டாவதாக இன்னொரு விஷயம்; நமது தேசத்திலே பொதுவாக நாம் குரலைப் பெரிதாக்கிக்கொண்டு உரக்கப் பேசுகிறோம்; அது கூடாது. மொத்தத்தில் நாம் எல்லாரும் சேர்ந்துகொண்டு ஒரே கூச்சல் போடுகிறோம்; அது உதவாது. அமைதியாக, மிருதுவாகப் பேச நாம் கற்றுக்கொள்ள வேண்டும். இதனால் ஓர் அநுகூலம்; சுவாச சக்தியை வீணாக்காமல் பாதுகாக்கிறோம். யார் கேட்க வேண்டும் என்பதற்காக நாம் பேசுகிறோமோ அவர்களுக்குக் கேட்கும்படியான அளவில் இரையாமல் பேசுவது நல்ல படிப்பு, பழக்க வழக்க முறை முதலியவற்றிற்கான அறிகுறி. இந்த மிருதுவான சம்பாஷணைக்கு, டாக்டர் அன்னி பெஸண்டும் மகாத்மா காந்தியும் மிகச் சிறந்த உதாரணமாவர்.

# அருமைப் புதல்விக்கு

நீ நல்ல சம்பாஷணை செய்ய வேண்டுமென்று விரும்பும் பட்சத்தில் பிரமாதமாக அலங்கார வார்த்தைகளை உபயோகிக்கக் கூடாது. அதிகமாக நீயே பேசிக்கொண்டிருக்கவும் கூடாது. விஷயங்களை உற்றுக் கேட்கக் கூடியவளாக இருக்க நீ பயில வேண்டும். இது சுலபமான காரியம் அல்ல. இதற்குத் தாராள மனோபாவம், விவேகத்துடன் கூடிய சிந்தனை, ஒற்றுமை முதலிய அம்சங்கள் வேண்டும்.

காந்திஜி விஷயங்களை நன்ருக உற்றுக் கவனித்துக் கேட்பவர்.

முக்கியமாக உன்னிடமிருந்து பேச்சை எதிர்பார்ப்பவர்களிடம் எப்படிப் பேச வேண்டும்? அவர்கள் நிம்மதியான நிலைமையில் இருக்கிருர்களா என்பதைக் கவனிக்க வேண்டும். அவர்களைப் பேச்சுக் கொடுத்துப் பேசச் செய்ய வேண்டும். தங்களுடைய அந்தரங்க விஷயங்களை உன்னிடம் தெரிவித்துப் பரிமாறிக் கொள்ள வேண்டும் என்ற எண்ணம் அவர்கள் மனத்தில் உதிக்கச் செய்ய வேண்டும். அவர்களிடத்திலும் அவர்களது காரியங்களிலும் நீ உண்மையான சிரத்தை கொள்ள வேண்டும்.

எல்லாவற்றையும்விட முக்கியமான காரியம் இது. உன் பிரதாபங்களைப்பற்றியே பேசிக்கொண்டிருப்பதைத் தவிர்க்க வேண்டும். உதாரணமாக உனக்கு இப்போது உன் பள்ளிக்கூடம், பள்ளிக்கூடச் சிநேகிதர்கள், உபாத்தியாயர்கள், புத்தகம், பரீட்சை இவைகளைப்பற்றித்தான் சிந்தனை. உன் சிநேகிதர்களோடு அவற்றைப்பற்றித்தான் பேச வேண்டும்; பேசவும் பேசுவாய். ஆனல் உன் பள்ளிக்கூடச் சிநேகிதர்களோடுகூட, விசேஷ சந்தர்ப்பங்கள் தவிர, சாதாரண சந்தர்ப்பங்களில் மேற் சொன்ன விஷயங்களைப்பற்றியே பேசிக்கொண்டிருப்பதை விலக்க வேண்டும். சம்பாஷணைக்கு வேறு விஷயங்களை எடுத்துக்கொள்ள வேண்டும். இதை எப்படித் திறம்படச் செய்வது? அதற்கு வழி சொல்லுகிறேன்.

வாழ்க்கையில் பொதுவான விஷயங்களில் ருசிகொண்டு அந்த ருசியை வளரச் செய்துகொள்ள வேண்டும். சிறந்த கலைகள்,

ஸினிமா, பொது விஷயமாக உள்ள புத்தகங்கள், சங்கீதம், விளையாட்டுகள், தேச, சர்வதேச சம்பவங்கள், பொருளாதார சமூகப் பிரச்னைகள், அவற்றிற்கான பரிகாரங்கள், நகர சுகாதாரப் பிரச்னைகள் முதலியன சம்பாஷணைக்கு ஏற்றவை.

மற்றவர்களுக்கு உபதேசம் செய்வதற்காகப் பிரசங்கம் புரியும் பழக்கத்தைத் தவிர்க்க வேண்டும். உன்னுடைய அபிப்ராயங்களை மற்றவர்களுடன் பகிர்ந்துகொள்ளும் பழக்கத்தைத் தெரிந்துகொள்ள வேண்டும்.

சில விஷயங்களைப்பற்றி உனக்குத் திட்டமான, உறுதியான அபிப்பிராயம் இருக்கக் கூடும். உனக்கும் இன்னொருவருக்கும் சம்பாஷணை நடக்கிறதாக வைத்துக்கொள். அப்போது மற்றவர்கள் நீ சொல்லும் அபிப்பிராயத்தை ஒப்புக்கொள்ளாமல் போகலாம். நீ எவ்வளவு உறுதியாக உன் அபிப்பிராயத்தை அழுத்தம் திருத்தமாகச் சொல்லுகிறாயோ அந்த அளவு இல்லாவிட்டாலும் உன்னோடு பேசும் மற்றவர்கள் தங்களுடைய அபிப்பிராயத்தையும் உறுதியோடுதான் தெரிவிப்பார்கள். அந்தச் சமயத்தில் நீ பொறுமையை இழந்துவிடக் கூடாது. நீ சொல்வது தவறாக இருக்கக் கூடும்; அவர்கள் சொல்வது சரியாகவும் இருக்கலாம். இது நிகழக் கூடியது. எப்படி இருந்தாலும் இருக்கட்டும். நீ சொல்வதே சரி என்று இருந்தாலுங்கூட எதிர்க் கட்சியினர் சொல்வதைக் காது கொடுத்துக் கேட்பதில் என்ன நஷ்டம்? ஒன்றும் இல்லை. சத்தியம் ஜ்வாலை மாதிரி; தீயைக் கிண்டக் கிண்ட அது கொழுந்துவிட்டுப் பிரகாசமாகவே எரியும்.

இதுபற்றிக் கடைசியாக ஒன்றைச் சொல்லிவிடுகிறேன். சம்பாஷணையில் சிறந்தவராக விளங்க வேண்டுமானால் உனக்கு நல்ல ஹாஸ்யச் சுவை இருக்க வேண்டும். உன்னைப்பற்றியே நினைத்துச் சிரித்துக்கொள்ளும்படியான சந்தர்ப்பங்கள் இருக்க வேண்டும்.

வாழ்வில் நல்ல நண்பர் என்றும், சிறந்த சம்பாஷணை செய்யக் கூடியவர் என்றும் எல்லாரும் புகழும்படியாக விளங்குவது ஒரு பாக்கியம். ஆண்டவன் அந்த வரத்தை உனக்கு அளிப்பாராக!

2-6-'41

# விருந்தினருக்கு உபசாரம்

**என் அன்புள்ள**
**லக்ஷ்மிக்கு,**

இன்று லான்ஸ்டௌன் வார்டிலிருந்து அலக்ஸாண்டிரா வார்டிலுள்ள ரூமுக்கு வந்தேன். இந்த இடம் விஸ்தாரமாக இருக்கிறது. நல்ல காற்று வருகிறது; குளுகுளு என்றும் இருக்கிறது. இந்த அறையில் பெரிதாக இரண்டு கதவுகள் இருக்கின்றன. இன்று இங்கே என்னைக் கர்னல் மெக்ராபர்ட்ஸ் வந்து பார்த்தார். இங்கே எனக்கு உடம்பு சொஸ்தம் ஆகுமென்று நம்புவதாகவும் அவர் சொன்னார்.

விருந்தினரை வரவேற்று உபசரிப்பது (Hospitality) என்ற ஆங்கிலச் சொல்லுக்கும், 'ஆஸ்பத்திரி' (Hospital) என்ற பதத்துக்கும் ஏதாவது சம்பந்தம் உண்டோ என்னவோ! நீ அகராதியைப் புரட்டிப் பார்த்து எனக்கு அது என்ன என்பதைத் தெரிவி.

விருந்தினரை வரவேற்று உபசரிப்பது என்ற வழக்கம் நம் சமூகத்தில் சிறந்த காரியம். உபநிஷத்துக்களில், 'அதிதி தேவோ பவா' (अतिथि देवो भव) என்று சொல்லியிருக்கிறது. அதாவது தாய், தந்தை, குரு இவர்களுக்குப் பிறகு நீ விருந்தாளியை வணங்குகிறாய் என்பது அர்த்தம். இது எப்போது சொன்ன வாக்கியம் தெரியுமா? அதிதிகள் யாரேனும் எப்பொழுதேனும் அபூர்வமாக வரும்போது சொன்னது. அக்காலத்திலெல்லாம் பிரயாண வசதிகள் ஏது? ரயில் கிடையாது, ரோடுகள் இல்லை; பழைய கால வண்டிகள் தவிர வேறு வாகனங்கள் இல்லை. மேலும் வாழ்க்கை வெகு எளிய முறையில் நடந்து வந்தது. ஜனங்கள் அதிகமாகப் பிரயாணம் செய்யமாட்டார்கள். அப்படிப் பிரயாணம் செய்யும் சந்தர்ப்பங்களிலோ போகும் இடங்களில் அவர்கள் விருந்

தாளிகளாக இருப்பதைத் தவிர வேறு வழி இல்லை. வசதிகள் இருந்தால்தானே? சில சமயங்களில் நண்பர்களின் விருந்தாளிகளாக இருப்பார்கள். இல்லையானால் புதிதாக உள்ளவர்களின் விருந்தாளியாக இருக்க வேண்டும். ஆகவே அப்போது விருந்தினரை வரவேற்று உபசரிப்பது என்ற வழக்கம் பரஸ்பரம் அநுஷ்டானத்தில் இருந்து வந்தது. விருந்தாளிகளை உபசரிப்பது என்ற கிரமம் முக்கியமாகத் தென்னிந்தியாவில்தான் அபிவிருத்தியடைந்தது. பெரிய மானியங்களோடு சத்திரங்கள் இருந்தன. உண்மையான யாத்திரிகர்கள் பிராம்மணர்கள், சில சமயங்களில் பிராம்மணர் அல்லாதவர்கள் முதலியவர்களுக்கெல்லாம் தொடர்ச்சியாக 3 நாள் வரை இலவசமாகச் சாப்பாடு போட ஏற்பாடு செய்திருந்தார்கள். இதைப்போன்ற சத்திர உபசாரம்பற்றி நான் இங்கே எழுதவில்லை. அது தர்மத்துக்காகச் செய்த காரியம். இது இப்போது அநேகமாக மறைந்துவிட்டது.

நாம் நமது பந்து மித்திரர்களுக்கு நடத்தும் உபசாரம் பற்றியே இதில் எழுதுகிறேன். இதுவரையில் பல வருஷங்களாக நான் இந் நாட்டிலும் இம்மாகாணத்திலும் அநேக நண்பர்கள், உறவினர்கள் ஆகியவர்களிடம் விருந்தாளியாகப் போயிருக்கிறேன். நல்ல சிநேகிதர்களின் விருந்தாளியாக இருப்பதில் எனக்குச் சந்தோஷம். அவர்களெல்லாம் மிகவும் அன்பாகவும் மனப்பூர்வமாகவும் நடக்கும்போது மனது சந்துஷ்டி அடைகிறது. இதற்குப் பிரதியாக நாம் அந்த நண்பர்களுக்கும் இன்னும் இதரர்களுக்கும் உபசாரம் நடத்தத் தோன்றுகிறது. விருந்தாளியும் விருந்தளிப்பவரும் கருத்தறிந்து நடப்பவர்களாக இருக்க வேண்டும். விருந்தாளிகளை வரவேற்றுக் கௌரவிக்க வேண்டியதுதான். ஆனால் விருந்தினராக இருப்பவர்கள் விருந்து அளிப்பவரைப் பற்றியும் சிந்திக்க வேண்டும்.

நல்ல முறையில் விருந்து அளிப்பவருக்குள்ள குணங்களைப் பற்றி உனக்குச் சொல்லுகிறேன்.

தற்காலத்தில், முக்கியமாகச் சென்னைபோன்ற நகரத்தில் உன்னுடைய நண்பர்களும் உறவினர்களும் அடிக்கடி வருகிறார்

கள். அவர்கள் எல்லாருக்குமே நீ விருந்தளிப்பவராக இருப்பது சாத்தியம் இல்லாதிருக்கிறது. ஆகவே இதில் நீயே பார்த்துத் தேர்ந்துகொள்ள வேண்டும். நம் வீட்டில் விருந்தாளிகளுக்காக ஓர் அறை இருப்பது சந்தோஷகரமான விஷயம். அந்த இடத்தை விருந்தாளிகளைத் தவிர வேறு யாரும் உபயோகிக்கக் கூடாது என்பது என் விருப்பம். அங்கே ஒரு பெரிய மின்சார விசிறி இருக்கலாம் என்று நினைக்கிறேன்.

நல்ல விருந்தாளியாக இருப்பதற்குப் பொறுப்பு, சிந்தனை, கருத்தறிந்து நடப்பது முதலிய தன்மைகள் வேண்டும். அன்னியர்கள் விஷயத்தில் இது கஷ்டம். நண்பர்கள், உறவினர்கள் ஆகியவர்கள் சம்பந்தப்பட்டவரை அவர்களது பழக்கங்கள், சாப்பாட்டு விஷயத்தில் அவர்களுடைய ருசி இதையெல்லாம் நீ தெரிந்துகொள்ள வேண்டும். அவர்களைத் திருப்தி செய்ய நீ முயல வேண்டும்.

நம் தேசத்தில் சாப்பாட்டு வகைகள் பற்றிப் பெரிய கஷ்டங்கள் இருக்கின்றன. நான் அநேகம் தடவைகள் சிந்தித்துப் பார்த்திருக்கிறேன். இன்னும் அப்படியே நினைக்கவும் நினைக்கிறேன். இந்தியா சுதந்தரத்தோடு வாழ வேண்டுமானால், மூன்று விஷயங்கள் அநுஷ்டானத்துக்கு வர வேண்டும். பொது பாஷையாக ஹிந்துஸ்தானி வர வேண்டும்; பொதுவான ஓர் உடுப்பு. ஆடவருக்கென்று ஒரு தினுசு, பெண்களுக்காக என்று ஒன்று. விசேஷ வைபவங்களின் போதாவது நாடெங்கும் அவ்வுடுப்பை எல்லோரும் தரிக்க வேண்டும். ஓர் உடுப்பு, கோடை காலத்துக்காக, மற்றொன்று-வடக்கே-மாரி காலத்துக்காக இருக்க வேண்டும். பொதுவாக ஒரேவிதமான சாப்பாடு. அதில் இரண்டு வகை: ஒன்று மரக் கறி உணவு; மற்றொன்று மாமிச உணவு. இவை நாடெங்கும் கிடைக்கும்படியாக இருக்க வேண்டும். இந்தப் பிரச்னைபற்றி நீ யோசிக்க வேண்டும்.

சாப்பாட்டில் ஒருமைப்பாடு இல்லாமல் இருப்பது இருக்கட்டும். விருந்தளிப்பவர் விருந்தாளியின் தேவைகளை அறிந்து அவர்களைத் தம்மால் முடியும்வரை திருப்தி செய்ய முயல்வர். இது

## விருந்தினருக்கு உபசாரம்

விருந்தாளிகளின் சௌகரியங்களை அநுசரித்த விஷயம். இது முக்கியமானதுதான். ஆனால் உபசாரம் என்ற உண்மையான அம்சத்தில் இது ஒரு பகுதிதான். நாம் நமது விருந்தாளிகளைப் பார்த்து அடிக்கடி, 'சங்கோஜப்படாதேயுங்கோ! உங்க வீடு மாதிரி நினைத்துக்கொள்ளுங்கோ!' என்றெல்லாம் சொல்கிறோம். ஸம்ஸ்கிருதத்தில், 'சொந்த வீட்டில் யோசனை என்ன' (स्वगृहे को विचार:) என்று சொல்கிறார்கள். உன்னுடைய விருந்தாளிகளை அவர்கள் தங்கள் வீட்டில் இருப்பதைப்போல் செய்ய வேண்டும். சொல்வதோடு நிற்காமல் அவர்கள் அம்மாதிரி உணரும்படியாகவும் செய்ய வேண்டும். இது சில விருந்தாளிகள் விஷயத்தில் சிரமமாக இருக்கும். படிப்பும் நாகரிகமும் உள்ளவர்களாக இருந்தால் அது சுலபம்.

நம் வீடுகளில் அதிதிகளை அளவுக்கு அதிகமாகச் சாப்பிடச் செய்வதும் பல வகையான பதார்த்தங்களைத் தயாரிப்பதும் விருந்தாளிகளை நிர்ப்பந்தித்து அவற்றைச் சாப்பிடச் சொல்வதுடன் அதிகமாகச் சாப்பிட வேண்டுமென்று சொல்வதும் வழக்கம். இதைத் தவிர்க்க வேண்டும். இந்த வழக்கம் இப்போது கொஞ்சங் கொஞ்சமாகக் குறைந்து வருகிறது. நீ சாப்பிடுவதை உன் விருந்தாளியோடு பகிர்ந்துகொள்வதுதான் உண்மையான உபசரிப்பின் சிறந்த தன்மை. வேண்டுமானால் இரண்டொரு பதார்த்தங்களை நீ அதிகமாகப் பண்ணலாம். ஆனால் விருந்தாளியின் தேக நிலைமை, சௌகரியம் இவற்றை நன்கு கவனித்து அறிய வேண்டும். விருந்தளிப்பவர் போடுவதையெல்லாம் சாப்பிடாவிட்டால், அவர் ஏதாவது நினைத்துக்கொள்ளுவாரோ என்று அதிதி நினைக்க இடம் கொடுக்கக் கூடாது; உன்னுடைய விருந்தாளி இஷ்டப்படி எதை வேண்டுமானாலும் சாப்பிடவோ குடிக்கவோ விட்டுவிட வேண்டும். ஆனால் இதில் அவர்களுக்குக் குறை ஏதும் இருக்கக் கூடாது.

இந்த விஷயத்தில் விருந்தாளியாக இருப்பவருக்கும் ஒரு கடமை உண்டு. சிரமத்தை எல்லாம் பார்த்துக்கொண்டு அவர்கள் இருக்கக் கூடாது வேண்டியதை அவர்கள் கேட்க வேண்டும். ஐரோப்பிய முறையில் சாப்பாடு பரிமாறுவது எனக்குப் பிடித்திருக்

## அருமைப் புதல்விக்கு

கிறது. இலைகளிலோ தட்டுகளிலோ தேவைக்கு அதிகமாகப் பதார்த்தங்களை வைத்து எறிவதில்லை. ஐரோப்பியர்களுக்குப் பலவகை உணவுகள் பரிமாறப்படுகின்றன. எதை வேண்டுமோ எவ்வளவு வேண்டுமோ அவ்வளவு அவர் உண்பர். அதிகமாக எதையும் சாப்பிடுவதில்லை.

இதெல்லாம் சில குறிப்புகள். அம்மா உனக்கு இன்னும் அதிகம் சொல்லுவாள். நீ விருந்தளிப்பதில் சிறந்தவளாக இருக்க வேண்டும்.

பகவான் உன்னை ரக்ஷிப்பாராக!

3-6-'41

# பிரயாணம்

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

உன்னைவிட அதிகமாகவோ அல்லது நீ சுற்றுப் பிரயாணம் செய்த அளவாவதோ இந்தியாவில் பிரயாணம் செய்த உன் வயதுள்ள குழந்தைகள் வெகு சொற்பம் என்றே நான் எண்ணுகிறேன்! நீ பிறந்தது பம்பாயில். பிறந்து இரண்டு மாதந்தான் இருக்கும். பம்பாயிலிருந்து சென்னைக்கு 900 மைல்கள் நீ பிரயாணம் செய்தாய்! அதற்குப் பிறகு, ஊர் சுற்றுவதும் பிரயாணம் செய்வதுமே வேலையாகப் போன உன் தந்தையின் காரணமாக இந்தியாவில் நீ அநேக இடங்களில் சுற்றுப் பிரயாணம் செய்திருக்கிறாய். இப்போது உனக்கு வயது 16. இந்த 16 வயதுக்குள் ஒவ்வொரு வருஷமும் நீ வெகு தூரத்திலுள்ள இடங்களுக்கெல்லாம் போய் வந்திருக்கிறாய். ஆனால் இந்த வருஷம் திருச்சிக்குப் போனதைத்தவிர வேறு எங்கும் நீ போகவில்லை. பகவத் கிருபையால் இந்த வருஷக் கடைசியில் உன்னுடைய எஸ். எஸ். எல். ஸி. பரீட்சை முடிந்ததும் நாம் இருவரும் சுற்றுப் பிரயாணம் போகலாம் என்று நம்புகிறேன்.

உனக்குப் பிரயாணம் செய்வதென்றால் வெகு சந்தோஷம். இந்தியாவிலே பிரயாணம் செய்வது மிகவும் உல்லாசமானது. ஆனால் மூட்டை முடிச்சுகளை அதிகமாக வைத்துக்கொள்ளாமல் இருக்க வேண்டும். ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் பிரயாணம் செய்வது வெகு சௌகரியமாக இருக்கும்; அங்கேயெல்லாம் உனக்கு மாறி மாறி உடுத்துக்கொள்ள ஆடைகள் மட்டும் எடுத்துக்கொண்டால் போதும். படுக்கை, துண்டுகள் முதலிய அனைத்தும் ரயிலிலேயோ ஹோட்டல்களிலேயோ கிடைத்துவிடுகின்றன. அதுபோன்ற நிலைமை இந்தியாவிலும் எப்போதாவது

வரப்போகிறதா? நமது நாடு மிகப் பெரியது; ஏழைமை நாடு. மேலும் நமது தேவைகள் மாறுபட்டனவாக இருக்கின்றன.

அப்படியே இருந்தாலும் நமது நாட்டில் பலவிதமான விஷயங்கள் இருக்கின்றன. எனவே இங்கே பிரயாணம் செய்வது மகிழ்ச்சியைத் தருகிறது. யாத்திரைக்காகப் பிரயாணம் செய்வது முதல் விஷயம். நாம் இதைச் செய்துவிட்டோம். நமக்கு மிகவும் புனிதமாகவுள்ள யாத்திரை ஸ்தலங்கள் எல்லாம் அழகான இடங்களில் அமைந்திருக்கின்றன. சில, ஆற்றங்கரையிலோ, ஆறுகள் சந்திக்கும் இடங்களிலோ, கடற்கரை, மலைகள் இவற்றிற்கு அருகேயோ இருக்கின்றன அவைகள் நீ கண்டவை; கேட்டதாகவும் இருக்கும். ஆலயங்களின் புனிதத் தன்மை ஒருபுறம் இருக்க அங்குள்ள காட்சிகளெல்லாம் மிக்க அழகு பொருந்தியவை நமது நாட்டிலுள்ள புண்ணிய ஆலயங்களைக் கட்டும்போது நம் முன்னோர்கள் ஒரு லட்சியத்தையும் மனத்தில் கொண்டிருந்தார்கள். ஹரித்வாரம் முதல் கன்னியாகுமரி, ராமேசுவரம் வரைக்கும்; துவாரகையிலிருந்து காசி வரைக்கும்; பிரயாகையிலிருந்து கங்கை வரையிலும் யாத்திரை செய்பவர் பாரத வர்ஷம் முழுவதும் பிரயாணம் செய்யும்படி இருந்தது. நாட்டின் பரப்பை உணரவும் முடிந்தது.

அடுத்த விஷயம் ஆரோக்கியத்தை முன்னிட்டுப் பிரயாணம் செய்வது. திருக்கழுக்குன்றம்போல், நோயைக் குணப்படுத்தக் கூடிய கோயில்களும் புண்ணிய ஸ்தலங்களும் இருக்கின்றன. சமுத்திர ஸ்நானம், நதியில் ஸ்நானம், ஆலயத்திற்கு உள்ளேயே இருக்கும் திருக்குளத்தில் ஸ்நானம் செய்தல், காலையிலும் மாலையிலும் மலைமீது ஏறி ஆலயத்தின் பிராகாரங்களில் பிரதக்ஷிணம் செய்வது, ஸ்வாமி தரிசனம் செய்வது முதலியவை ஆரோக்கியத்தைத் தருகின்றன. இந்தக் காரணத்துக்காகவாவது பிரயாணம் செய்வதை வரவேற்க வேண்டும்.

மலைச் சாரலில் இருந்து வரும் காற்றை அநுபவிப்பதற்காகச் சமீப காலமாக ஜனங்கள் காஷ்மீரம், டார்ஜீலிங், ஸிம்லா, உதகமண்டலம், கோடைக்கானல் முதலிய இடங்களுக்குப் போகிறார்

கள். இது தற்கால நாகரிகம்; நல்லதுதான். ஆனால், செலவு அதிகம் ஆகும். பொதுவாகச் சேர்ந்து முயன்றால் இந்தச் செலவு குறையுமோ என்பது என் எண்ணம். இப்படிச் செய்தால் நடுத்தர அந்தஸ்தில் இருப்பவர்களும் ஏழைகளும் எப்போதாவது ஒரு சமயத்திலேனும் மேற்படி இடங்களுக்கு நம் போய்வரலாம் அல்லவா?

இன்னொரு விதமான பிரயாணம். அதாவது வியாபார விஷயமாகப் போவது. முக்கியமாக வர்த்தகர்கள், வக்கீல்கள், வைத்தியர்கள் முதலியோர் செய்யும் பிரயாணம் இது. இவர்கள் செய்யும் பிரயாணத்தில் சந்தோஷம் இருப்பதற்கில்லை ஏனெனில் இவர்களுக்கெல்லாம் தங்களுடைய வேலையிலேயே குறி. ஆனால் இதிலும் சந்தோஷகரமாகப் பிரயாணம் செய்ய முடியும். பிரயாணம் செய்பவருக்கு அதற்கான வழி தெரிய வேண்டும். அவ்வளவுதான்.

காட்சிகளைக் கண்டு வருவதற்கு என்று போவதுதான் சிறந்த பிரயாணம் என்பது உண்மை. ஆக்ராவிலே தாஜ்மஹால்; டில்லி, பெடேபூர் ஸிக்ரி ஆகிய இடங்களிலுள்ள கட்டிடங்கள்; ஹிமயமலை, கங்கை, பிரயாகை, டார்ஜீலிங், நர்மதா - சலவைக் கற்கள்; கராச்சி, பம்பாய், கல்கத்தா, ராமேச்வரம், மதுரை, ஸ்ரீரங்கம், சிதம்பரம், கன்னியாகுமரி ஆகிய இடங்கள் நாம் எந்த ஜாதியாக இருந்தபோதிலும் பார்க்க வேண்டியவை. இவையெல்லாம் நம் நாட்டில் இருக்கின்றன.

நம் நாட்டுக்குப் பக்கத்திலே இலங்கை இருக்கிறது. இங்கே நீயும் நானும் சுற்றுப் பிரயாணம் செய்திருக்கிறோம். இந்த இடங்கள் எல்லாம் பார்க்க வேண்டியவை ஆகும்.

பரந்த நோக்கம் வளருவதற்காக நம் நாட்டுடன்மட்டும் அன்றி வெளியேயும் நாம் பிரயாணம் செய்ய வேண்டும். இந்த யுத்தம் முடிந்த பிறகு ஐரோப்பா, அமெரிக்கா, ஆசியாவில் சில பகுதிகள் முதலியவை எல்லாம் எப்படி இருக்கும் என்று நினைக்கையில் எனக்கு ஆச்சரியமாக இருக்கிறது. ஏதோ ஓர் உருவில் அவை

# அருமைப் புதல்விக்கு

பிழைத்திருக்கும் என்றுமட்டும் தோன்றுகிறது. இந்த இடங்களி லெல்லாம் அநேகம் அழகான கட்டிடங்களும் கலா ஸ்தலங்களும் நிர்மூலமாக்கப்பட்டு விட்டதாயினும் யாத்ரிகர்கள் போய்ப் பார்த்துக் களிக்கும்படியான விஷயங்கள் பல எஞ்சி நிற்கும் என்று எண்ணலாம்.

இந்த யுத்தம் ரொம்பக் கொடியதாகும். இது முடிந்த பின்னர் மீண்டும் ஜனங்கள் உலக யாத்திரை போவார்களானால் எல்லா இடத்திலும் மனிதன் அழகைச் செழிக்கும்படி செய்ய முற்பட்டிருக்கிறான் என்பது தெரியும்; அல்லது அழகைப் பாது காத்து, இயற்கையில் வனப்புள்ள ஸ்தலங்களை மேலும் அழகு செய்ய முயன்றிருக்கிறான் என்பது விளங்கும்.

பிரிட்டன், அயர்லாந்து, பிரான்ஸ், ஸ்விட்ஜர்லாந்து, இத்தாலி ஆகிய இடங்களுக்கு நான் போய்ப் பார்த்திருக்கிறேன். அவ் விடங்களில் எல்லாம் என் பிரயாணத்தைச் சந்தோஷமாக அநுப வித்தும் இருக்கிறேன். ஒரு சமயம் நாம் எல்லோரும் அவ்விடங்க ளுக்குப் போய்ச் சுற்றிப் பார்ப்போம். இதர நாடுகளுக்கும் போய்ப் பார்க்கலாம்.

சென்னையில்கூட நீயும் நானும் காணாத அழகான இடங்கள் இருக்கின்றன. நமது நாட்டிலும் மாகாணத்திலும் அப்படிப் பட்ட இடங்கள் உண்டு. நாம் அவற்றைத் தேடிப் பிடித்துப் பார்க்க வேண்டும். பிரயாணத்துக்காக என்று நீ நல்ல திட்டம் போட்டுக்கொள்ள வேண்டும். ஒவ்வொரு வருஷமாக நீ போட்ட இந்தத் திட்டப்படி இடங்களுக்குப் போக வேண்டும். இது என் விருப்பம். மனிதர்களைப்பற்றி அறிய அவர்களைப் பார்த்துப் பழக வேண்டும். எனவே பல நாட்டிலும் சுற்றுப் பிரயாணம் செய்தால்தான் அந்த அந்த நாட்டு மனிதரைப்பற்றி நன்கு தெரிந்து கொள்ள இயலும்.

4-6-'41.

# பிரசங்கம்

## I

**என் அன்புள்ள**
**லக்ஷ்மிக்கு**

நீயும் உன் அம்மாவும் இன்று சீக்கிரம் வந்துவிடுவீர்கள். ஆகவே உனக்கு நான் தினசரி எழுதிக்கொண்டு வரும் கடிதத்தை முன்னதாகவே இன்று எழுத ஆரம்பிக்கிறேன்.

பொதுக்கூட்டங்களில் நான் பேச ஆரம்பித்து இப்போது சேர்ந்தாற்போல் 37, 38 வருஷங்கள் ஆகின்றன. அதாவது 1904-ம் வருஷம் காலேஜில் படித்துக்கொண்டிருந்தது முதல் பேசிவருகிறேன். பார்க்கப்போனால் என் பிரசங்கம் பள்ளிக்கூடக் காலத்திலேயே ஆரம்பம் ஆகிவிட்டது எனலாம்.

எனக்கு இப்போது நினைவு வருகிறது. எனக்கு 6 அல்லது 7 வயது இருக்கும். என்னுடைய சித்தப்பா அதாவது வெங்கிட்டுவின் அப்பா ஏதோ தமிழில் எழுதிக் கொடுத்தார். அதை நான் 1894-ம் வருஷமோ அல்லது 95-வது வருஷத்திலோ கீரனூரில் ஆரம்பப் பாடசாலையில் படித்தேன். ஆகவே பொதுக்கூட்டங்களில் பேசுவதுபற்றி உனக்கு நான் நன்கு கூற முடியும்.

'என்ன பேச்சு வேண்டியிருக்கிறது? பேச்சைவிடச் செயல் தான் விசேஷம்' என்று பேசுவதைப்பற்றிக் கண்டிப்பது வழக்கம். இந்த மாதிரி சொல்வதில் ஒரே ஓர் உண்மை உண்டு. அது என்ன தெரியுமா? வாழ்க்கை சம்பந்தப்பட்ட விஷயங்களில் பேச்சுக்கும் செயலுக்கும் முரண்பாடு இருக்கக் கூடாது என்பதுதான் அந்த விஷயம். இல்லாவிட்டால் பேச்சுக்கும் செயலுக்கும் அவசியமான தொடர்பு இருக்காது. நான் இன்னும் ஒருபடி அதிகமாகச் செல்லுவேன். தனி மனிதர் செயலுக்கோ, கூட்டாக

ஒன்றுபட்டுச் செய்யும் செயலுக்கோ பேச்சு, பூர்வாங்கமானது. மற்றவர்கள் சரியானது என்று சொல்வதைக் கேட்டுத் திருப்தி அடைந்து நாம் செயலில் ஈடுபடுகிறோம். பேசத் தெரியாதவர்கள் பொதுப் பிரசங்கங்களை வெறுக்கத் துணிவார்கள்.

பொதுக்கூட்டங்களில் பிரசங்கங்கள் செய்யும்போது தங்கு தடையின்றி வரும் பேச்சு, நாவிலிருந்து வருவதில்லை. தொண்டையிலிருந்தும் இல்லை நரம்பிலிருந்தோ மூளையிலிருந்தோ அது வருவதும் இல்லை. அது பெரும்பாலும் இருதயத்திலிருந்தே பிறக்கிறது. அதாவது பிரசங்கம் புரிபவர் எவ்வளவு தூரம் தீவிர உணர்ச்சிகொண்டு பேசுகிறாரோ அந்த அளவுக்கு, தாம் ஒரு செய்தியைத் தெரிவிக்க வேண்டும் என்பதில் அவருக்கு உறுதி ஏற்படுகிறது. தமது பிரசங்கத்தைக் கேட்பவருக்கு ஏதோ முக்கியமான விஷயம் ஒன்றைச் சொல்ல வேண்டும் என்று அவர் உணருகிறார். அந்த மட்டில் அவரது பிரசங்கம் உணர்ச்சி வேகத்துடன் தங்கு தடையின்றிச் சோபிக்கிறது. இது மகாத்மாஜியிடம் பொருந்திய அம்சம். அவரது பேச்சு வன்மை பெருகுவதை நான் கவனித்திருக்கிறேன். நான் பல வருஷங்களுக்கு முன் அவரது பிரசங்கத்தைக் கேட்டேன். அப்போதெல்லாம் அவர் தடையின்றி மள மளவென்று பேசமாட்டார். ஆனால் இன்று அப்படி இல்லை. அவர் தங்கு தடையின்றிப் பேசும் நாவன்மை படைத்தவராக இருக்கிறார்.

ஒருமித்த செய்கைக்கோ நடவடிக்கைக்கோ பேசுவது பூர்வாங்கமானது என்று முன்பே சொன்னேன். உண்மை அது; வேறு விதமாக இருக்க முடியாது. நாம் நம் செல்வாக்கைப் பிரயோகித்து, குறிப்பிட்ட ஒரு வழியில் மற்றவர்கள் நடக்க வேண்டும் என்று தூண்ட விரும்பினால் தனியாக இருக்கும்போதோ சேர்ந்தாற்போல் இருக்கையிலோ பேசத்தான் வேண்டும். கூட்டத்தில் கூடி நிற்பவர்களிடையே பேசுவது என்பதுதான் பிரசங்கம்.

நமது புராணங்களிலே ஒரு தெய்வம் உண்டு: ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி. அவர் வாய் திறவாமல் மௌனமாக இருந்து உப

தேசிக்கிருர். ஸம்ஸ்கிருத கவி இதை வருணித்திருக்கிருர். அது அற்புதமான காட்சி. வட விருட்சத்தின் அடியிலே இளமை பொருந்திய குரு வீற்றிருக்கிருர். சிஷ்யர்களும் அங்கே இருக்கின்றனர். அங்கே போதனை மௌன பூர்வமானது. சிஷ்யர்களின் சந்தேகங்கள் எல்லாம் அவ்விடத்தில் தீர்க்கப்படுகின்றன. ஆனால் தெய்விகமான அற்புதம் இது. நாமெல்லாம் சாமானியமான மனித வர்க்கந்தானே; நாம் நமது எண்ணங்களைப் பரஸ்பரம் தெரிவிக்க வேண்டுமானல் என்ன செய்வது? பேச வேண்டும்; அல்லது எழுதவாவது வேண்டும்.

ஏதாவது ஒரு காரியத்தைச் செய்வது பொருத்தமானல் அதைச் செவ்வனே, திருந்தச் செய்ய வேண்டும்; 'செய்வன திருந்தச் செய்' என்பதை நான் அடிக்கடி உனக்குச் சொல்லியிருக்கிறேன். ஆகவே நாம் பேச வேண்டுமானலும் சரி; அதைச் சரிவரச் செய்ய வேண்டும்; இல்லையானல் ஏதாவது நிர்ப்பந்தம் இருந்தால் ஒழியப் பேசாமலே இருந்துவிடலாம்.

பொதுக்கூட்டங்களில் பேசும் முறைகள் பல; உபாத்தியாயர்கள் தங்கள் பள்ளிக்கூட வகுப்புகளில் பேசுகின்றனர்; கோர்ட்டுகளில் வக்கீல்கள் பேசுகின்றனர்; நடிக, நடிகைகள் நாடக மேடைகளிலோ படங்களிலோ சம்பாஷிக்கின்றனர்; பார்லிமென்டுகளில் அதன் அங்கத்தினர்கள் பிரசங்கம் செய்கிருர்கள்; மத குருக்கள் தங்களுடைய உபதேசங்களைச் செய்கின்றனர். கடைசியாகத் தலைவர்கள், ராஜீயவாதிகள், ஜனநாயகத் தலைவர்கள் முதலியவர்களெல்லாம் ஜனங்கள் செயல் புரிவதற்காக உணர்ச்சியைத் தூண்டுகின்றனர். சட்ட சபைகளுக்கும் இதர ஸ்தாபனங்களுக்கும் தங்களுடைய கட்சி அபேட்சகர்களுக்கு ஓட்டுப் போடும்படி சொல்லுகிருர்கள்.

இந்தக் கடிதங்களில் இந்த விஷயத்தை அதிகமாக உனக்கு எழுதப்போகிறேன். ஏனெனில் இதுபற்றி எனக்கு நன்கு தெரியும் என்று கருதுகிறேன். சட்ட சபைகளிலும் பொதுக் கூட்டங்களிலும் பேசுவதைமட்டும் எழுதுகிறேன்.

## அருமைப் புதல்விக்கு

பொதுக்கூட்டங்களில் நன்ருகப் பேசக் கூடியவருக்கு முதல் முதலாக வேண்டிய அம்சம் குரல்; உரக்கவும் அது இருக்கக் கூடாது; கர்ண கடோரமாக இருப்பதும் கூடாது; மிகவும் மெல்லவும் இருக்கக் கூடாது. இனிமையாகவும், கேட்கும்படியும் இருக்க வேண்டும்.

கிஷ்கிந்தா காண்டத்திலே ஸ்ரீராமபிரான் ஹநுமானின் பேச்சு வன்மையை வெகு அழகாக வருணித்திருக்கிருர். உண்மையான நாவன்மை தத்ரூபமாகவும் பூர்ணமாகவும் அதில் விளக்கப்பட்டிருக்கிறது. அதைவிட அழகாக அவ்விஷயத்தை வியாக்கியானம் செய்ய முடியாது. அந்த ஸ்லோகங்களை உனக்கு வாசித்துக் காட்டி விளக்குகிறேன்.

நல்ல குரல் ஆடவர்களுக்கோ பெண்களுக்கோ இருக்குமானல் அது ஆண்டவனின் அருள். சில குரல்களில் உள்ளே வசீகரிக்கும்படியான ஒரு தன்மையை நீ காணலாம். எல்லாருடைய குரலையும் வேண்டிய அளவுக்குப் பண்படுத்தலாம். ஆனல் இதை ஆரம்பத்திலேயே செய்ய வேண்டும். தென்னிந்தியாவில் சங்கீத வித்வான்கள்கூட இந்த விஷயத்தைக் கவனிப்பதில்லை. நீ காலேஜில் சேர்ந்து இந்திய சங்கீதம் பயிலும்போது இதர விஷயங்களோடு குரலையும் நன்கு பண்படுத்திக்கொள். உனக்கு நல்ல குரல் இருக்கிறது என்று நம்புகிறேன். அதை இன்னும் தரமாகச் செய்துகொள்ளலாம்.

நல்ல பிரசங்கிக்கு வேண்டிய லட்சணங்கள்: நல்ல தெளிவான முக பாவம் அவசியம்; விகாரமான பாவங்கள் முகத்தில் கூடாது. மட்டமான சேஷ்டைகள் கூடாது; மேஜையின்மீது குத்துவதுபோன்றவை விகாரம். கம்பீரமாக நின்று அழகாகப் பேச வேண்டும். இதைப்பற்றியெல்லாம் என் அடுத்த கடிதத்தில் சொல்லுகிறேன்.

5-6-'41.

# பிரசங்கம்

பொது மேடையில் பேசினாலும் சரி, சட்ட சபைகளில் பேசினாலும் சரி; பிரசங்கம் புரிபவரின் தோற்றமும் செய்கைகளும் முக்கியமாகக் கவனிக்க வேண்டியவை. ஏனெனில் சபையிலோ கூட்டத்திலோ இருப்பவர்கள் பிரசங்கம் செய்பவரைக் கண்ணால் பார்க்க வேண்டியிருக்கிறது. பேசுவதைக் கேட்கவும் வேண்டியிருக்கிறது. ஏதாவது ஒரு விஷயம்; அதை அழுத்தந் திருத்தமாக வற்புறுத்திச் சொல்ல வேண்டுமென்று பிரசங்கம் புரிபவர்கள் நினைக்கின்றனர். அவர்களில் அநேகர் தங்களுடைய அங்க சேஷ்டைகளைக் கொண்டு, தாங்கள் பேசும் விஷயத்தின் முக்கியத்வத்தை உணர்த்த வேண்டும் என்று கருதுகிறார்கள். சமிக்ஞைகள் செய்வதைவிடக் குரலைச் சமயத்துக்குத் தக்கபடி உயர்த்தியோ தாழ்த்தியோ செய்துகொண்டு பேசுவதன்மூலம், சொல்ல வேண்டிய விஷயத்தை நன்றாக உணர்த்தலாம். இதை நான் என் அநுபவத்தின்மூலம் உணர்ந்திருக்கிறேன்.

பிரசங்கம் எவ்வளவு தூரம் வேண்டும்? இந்த விஷயம் வெகு முக்கியம் தென்னிந்தியாவில் ராஜீய ஞானம் உதிக்க ஆரம்பித்ததிலிருந்து நான் கிராமங்களிலும் நகரங்களிலும் மணிக் கணக்கில் பேசியிருக்கிறேன். நல்ல பிரசங்கமாக இருக்க வேண்டுமானால் ஒரு மணி நேரம் பேசுவதே போதும். நீண்ட காலமாக, பலதரப்பட்ட அநுபவங்களைக்கொண்டு நான் இதைச் சொல்கிறேன். கலையில் உள்ள சூட்சுமம் என்ன? எல்லா விஷயங்களையும் குறிப்பிடாமல் சிலவற்றை விலக்குவதுதான் விசேஷம். ஒரு சித்திரக்காரர் இருக்கிறார்; ஒரு மரத்தைப் படம் எழுதுகிறார். அந்த மரத்தில் உள்ள எல்லா இலைகளையும் அவர் தமது சித்திரத்தில் வரைவதில்லை. நன்றாக வளர்ந்த மரம் எப்படி இருக்கும் என்ற அபிப்பிராயம், அதைப் பார்ப்பவரது மனத்தில் தோன்றும் முறையில் அவர் அப் படத்தை எழுதிவிடுகிறார். 'இன்னும் கொஞ்ச நேரம் பேசியிருக்கக் கூடாதா?' என்று சபையினர் உணர்ச்சி கொள்ளும்படியான நிலைமையில் பிரசங்கத்தை நிறுத்த வேண்டும்.

இதிலும் விலக்குகள் உண்டு. இந்திய சட்ட சபையில் நான் ஒரு நாள் முழுதும் பேசினேன் இது உனக்குத் தெரியும். ஆனால் பொதுக்கூட்டங்களில் பேசும்போது சபையில் இருப்பவர்களின் மனோபாவத்தை நன்கு தெரிந்துகொள்ள வேண்டும். நான் இதை எப்போதும் கவனிப்பவன். கூட்டத்தினர் அலுத்து விட்ட தாகவோ நிம்மதி இல்லாமல் இருக்கிறார்கள் என்றோ தோன்றும் விநாடியே பிரசங்கத்தை முடித்துவிட வேண்டும்.

நன்றாகப் பிரசங்கம் செய்பவர்களின் முக்கிய நோக்கம் என்ன? கூட்டத்தில் உள்ளவர்களின் உணர்ச்சியைத் தட்டி எழுப்பி அவர்களது கவனம் கலையாமல் செய்ய வேண்டியது அவர்களது நோக்கமாகும். இது சுலபமான காரியம் அல்ல; ஆனால் அநுபவத்தில் இது வந்துவிடும். ஹாஸ்யம் பிரசங்கத்துக்குச் சக்தி தரும் அம்சம். கூட்டத்தில் இருப்பவர்களைச் சிரிக்கும்படி செய்வது அவர்களைத் திருப்திப்படுத்துவதாகும். ஜனங்கள் சந் தர்ப்பம் தவறிச் சிரித்தால் அவர்களது கவனத்தைச் சரியான முறையில் திருப்ப வேண்டும். சிரத்தையோடு செய்யும் பட்சத்தில் இது சாத்தியமான காரியந்தான் உண்மையைச் சொல்வதை ஜனங்கள் எப்போதும் ரசிப்பார்கள்.

பொதுப் பிரசங்கங்களில் நல்ல கதைகளையும் ரஸமான சம்ப வங்களையும் குறிப்பிடுவது மிகவும் சிறந்ததாகும். வெறும் கதை களை மட்டும் சொல்லிவிட்டுத் தொண தொணப்பாகவும் செய்து விடக் கூடாது. ஒரு விஷயத்தை ஒரு கதையைக்கொண்டோ சம்பவத்தைக்கொண்டோ விளக்கலாம்.

பொதுக்கூட்டங்களில் பேசும்போது மேற்கோள்களை எடுத் துக்காட்டுவது உபயோககரம் ஆகும். எனக்கு எப்போதும் அது பயன்படும்படி இருந்திருக்கிறது. நான் அடிக்கடி ஸம்ஸ்கிருதத் திலிருந்து மேற்கோள்களைக் குறிப்பிடுவேன் என்பது உனக்குத் தெரியும். ஸம்ஸ்கிருதம் அழகு பொருந்திய பாஷை. அதில் ஓர் இசைக்கட்டு இருக்கிறது. முக்கியமாகத் தமிழ்ப் பிரசங்கத்தில் மிக்க வன்மையாகப் பேசும்போது ஸம்ஸ்கிருதத்தையுங் கூட உப

யோசித்தால் வெகு நன்றாகச் சோபிக்கிறது. தாமாகவே, அதுவும் அந்த க்ஷணத்தில், ஸம்ஸ்கிருத மேற்கோள்கள் வருமானால் அவை மிகப் பொருத்தமானவை என்பது என் அநுபவம்.

பொதுக்கூட்டங்களில் பேசும் சந்தர்ப்பங்களில் முன்னதாகவே பிரசங்கங்களைத் தயார் செய்துகொள்ள வேண்டும். திடீரென்று பேச நேர்ந்தால் அன்றி இதர சமயங்களில் நான் என் பிரசங்கங்களை எப்போதும் முன்னதாகத் தயார் செய்துவிடுவேன். அப்போதெல்லாம் நான் நன்றாகப் பேசுவேன். கூட்டத்தினர் என் பேச்சைக் கேட்டுக் கௌரவிக்கையில் பிரசங்கத்தை நாம் சரியாகத் தயார் செய்துகொண்டு பேசுவதுதான் அவர்களுக்கு நாம் செய்யும் பிரதி மரியாதை. பிரசங்கத்தை எழுதிப் படிக்கும் முறையை நான் கண்டிக்கிறேன். அது பிரசங்கம் அன்று. பிரசங்கத்தில் தெரிவிக்க வேண்டிய சில குறிப்புகள் எழுதிக்கொண்டு பேசும் போது, சொல்ல வேண்டிய விஷயத்துக்கு அப்பால் போய்விட நேருவதும் உண்டு. சந்தர்ப்பங்கள், கூட்டத்தாரின் மனோபாவம் இவற்றால் ஏற்படக்கூடிய நிலைமை இது. நான் இதை அடிக்கடி கவனித்திருக்கிறேன். மனத்தினுள் பிரசங்கத்தை ஒழுங்குபடுத்திக் கொண்டு, பேச வேண்டிய விஷயங்களை மனத்திலேயே குறிப்பாக வைத்துக்கொள்ள வேண்டும். எப்படி ஆரம்பிப்பது என்பதையும் திட்டப்படுத்திக்கொள்ளுவது அவசியம். பிரசங்கத்தைச் சிறந்த முறையில் தயாரித்துக்கொள்வதற்கு இதுதான் வழி என்பது என் எண்ணம்.

பிரசங்கம் முழுவதும் தர்க்க ரீதியாக இருக்க வேண்டும்; வாதப் போக்கை அநுசரித்து இருக்க வேண்டும். எந்த விஷயத்தை அல்லது விஷயங்களை வற்புறுத்திச் சொல்ல வேண்டுமோ அந்த விஷயத்தை அல்லது விஷயங்களை விவாதத்தின் மூலமாகவோ உதாரணங்களின் மூலமாகவோ வேறு வழிகளிலோ நிரூபித்துக் காட்ட வேண்டும் என்ற நோக்கத்துடன் கூடியதாகவும் இருக்க வேண்டும். நமது முற்காலத் தர்க்க வாதிகள் சாதாரணமாக அநுசரித்து வந்த முறை என்ன வென்றால் எதிர்க் கட்சியை முதலில் எடுத்துச் சொல்வார்கள். அதாவது தங்கள் கொள்கைக்கு

விரோதமாக உள்ள கட்சியின் கொள்கையை நியாயமாகவும் பூரணமாகவும் எடுத்துச் சொல்வார்கள். பிறகு தங்களுடைய விவாதத்திலுல் அதை உடைத்து எறிவார்கள். நாமும் நமது கட்சியை ஸ்தாபிக்க இந்த முறையை மேற்கொள்ளலாம்.

பிரசங்கத்தில் உபயோகிக்கும் பாஷை முக்கியமான தாகும். ஆங்கிலத்தில் பேசினுல் நல்ல தற்கால ஆங்கில பாஷையைப் பிரயோகிக்க வேண்டும். சிதைந்த பாஷை கூடாது. தமிழில் பேசுவதாக இருந்தாலும் ஒரே இலக்கணமாக இருக்கக் கூடாது; ஆனுல் மிகவும் கொச்சையான தமிழாக இருப்பதுங் கூடாது. பேசுவதை ஜனங்கள் நன்கு உணர வேண்டும். நடை கம்பீரமாக இருக்க வேண்டும். நான் இப்படியே பேச விரும்புகிறேன். நான் எந்தக் காரியத்துக்காகத் தமிழை உபயோகிக்கிறேனே அதற்குத் தகுந்த அளவில் பாஷை எனக்கு அமைந்திருக்கிறது என்று சொல்கிருர்கள். உன் அபிப்பிராயம் என்னவோ? அடுத்த கடிதத்திலும் இதுபற்றியே எழுதுகிறேன். இந்த விஷயமாக அக் கடிதமே கடைசி.

6-6-'41

பொதுப் பிரசங்கத்தைப்பற்றி நான் எழுதும் மூன்ருவது கடிதம் இது. இதுவே அதைப்பற்றிய கடைசிக் கடிதமும் ஆகும். என்னுடைய அபிப்பிராயங்களை இதில் தெரிவிக்கிறேன். 'பொதுக் கூட்டங்களில் பேசுவதற்கு எனக்குச் சந்தர்ப்பம் கிடைக்குமா?' என்று நீ எண்ணலாம். ஆம்; உனக்கும் அந்தச் சந்தர்ப்பம் வாய்க்கும் என்றே நான் எண்ணுகிறேன். இந்தியா முழுவதும், பெரிய கூட்டங்களில் பேசுவதற்குச் சௌகரியமாக நீ தமிழ், ஹிந்துஸ்தானி இரண்டையும் மள மள வென்றும் சரியாகவும் பேசக் கற்றுக்கொள்ள வேண்டும். மகாத்மா காந்தி, நீ சிறந்த ஹிந்திப் பண்டிதராக விளங்க வேண்டுமென்று விரும்புகிருர். உனக்கு ஹிந்தி கொஞ்சம் ஏற்கனவே தெரியும். நம் வீட்டுக்கு எதிரே

தான் ஹிந்திப் பிரசார சபை இருக்கிறது. நீ அங்கே போக வேண்டும். அங்குள்ள நண்பர்களோடு நீ ஹிந்தியில் பேச வேண்டும். ஹிந்துஸ்தானியில் நடக்கும் விவாதங்களில் கலந்துகொள்ள வேண்டும். அப்படிச் செய்யும் பட்சத்தில் உனக்குக் கொஞ்சம் கொஞ்சமாக ஹிந்தி பேசுவதில் திறமை ஏற்பட்டுவிடும். உன் தாய்ப்பாஷை தமிழ். பள்ளிக்கூடத்தில் அது உன்னுடைய இரண்டாவது இஷ்ட பாடம். அதுவும் உனக்குத் தெரியும். நீ, 'சுதேசமித்திரன்,' 'ஆனந்த விகடன்' இரண்டையும் தொடர்ச்சியாகப் படிக்கிறாய். தமிழில் பேசவும் பழகி வருகிறாய். சீக்கிரம் உனக்குப் பேச வந்துவிடும் 4-வது வகுப்புக்குப் பிறகு நான்கூடத் தமிழ் படிக்கவில்லை. ஆனால் அநுபவம் காரணமாக நான் தமிழில் பேசக் கற்றுக் கொண்டு விட்டேன்.

பொதுப் பிரசங்கத்துக்கு முக்கியமான அடிப்படை, கூட்டம். ஆகவே பொதுப் பிரசங்கங்களைச் செய்பவர், தாம் பேசப் போகும் கூட்டத்தாரைக் கவனித்து, நிதானித்துக்கொள்ள வேண்டும். சாத்தியப்படும்போதெல்லாம், சிலர் பேசிய பிறகு, நீ பேச வேண்டும். இப்படிச் செய்தால் கூட்டத்தாரைக் கவனிக்கவும், முன்னால் பேசியவர்கள் பற்றியும், அவர்கள் சொன்ன கருத்துக்கள்பற்றியும், கூட்டத்தார் என்ன மாதிரி அபிப்பிராயப்படுகின்றனர் என்பதையும் நீ தெரிந்துகொள்ள இயலும். இது எப்போதுமே சாத்தியப்படக் கூடிய விஷயம் அல்ல. நீ கூட்டத்துக்குத் தலைமை வகிக்கும்படி நேரலாம்; அல்லது முதலில் பேசும்படியும் உன் பெயரைக் குறிப்பிட்டிருக்கலாம். அப்படியிருந்தால் நீ பேசத்தான் வேண்டும். இதுபோன்ற சந்தர்ப்பங்களிலெல்லாம் கூட்டத்தார் சாதாரணமான மன நிலையில் இருக்கிறார்கள் என்றும், நேசபாவத்தோடுகூடி இருக்கிறார்கள் என்றும் மனத்தில் நினைத்துக்கொண்டு நீ உன் பிரசங்கத்தை ஆரம்பிக்க வேண்டும்; இதுவே சிறந்த முறை. ஆனால் ஒன்று, பேசும்போதே நீ கூட்டத்தாரை நன்கு நிதானித்துக் கொண்டு, அவசியமானால் அவர்களது மன பாவத்துக்குத் தகுந்தாற்போல் பேச வேண்டும். அதற்காக இதை மிகைப்படுத்தி

விடுவதும் கூடாது. பேச்சு வன்மைக்கு உண்மைதான் நிச்சய மான அஸ்திவாரம்.

கூட்டங்களில் பல விதம். பல வகையான கூட்டங்களை நான் பார்த்திருக்கிறேன். நேச பாவத்துடன் கூடிய கூட்டம் உண்டு இதில் பேசுவது சுலபம் இதில் ஒரே ஓர் அபாயத்தை மட்டும் தவிர்க்க வேண்டும். நேச உணர்ச்சியுள்ள கூட்டங்களில் நீ அடிக் கடி பேச நேர்ந்தால் உன் பேச்சு, தொண தொணப் பாகிவிடும்; சொன்ன விஷயத்தையே திருப்பித் திருப்பிச் சொல்ல நேரும். பிர சங்கங்களைச் சரிவரத் தயார் செய்துகொண்டு, கூட்டத்தாரைத் திருப்தி செய்து, உத்ஸாகம் ஊட்ட முடியாது. இந்த அபாயத்தை நீ தவிர்க்க வேண்டும்

அடுத்த விஷயம், விரோதமான கூட்டம். கூட்டத்தை மொத்தமாக எடுத்துக்கொண்டால் அதில் இருப்பவர்கள் உன்னி டம் நேச பாவம் கொண்டவர்களாக இருப்பார்கள். ஆனால் அங்கே உள்ள சில எதிரிகள் கூட்டத்தையே உனக்கு எதிராகத் திருப்பிவிட முயலக்கூடும். நீ சொல்லும் விஷயம்பற்றிப் பொருத்த மான கேள்விகளை அவர்கள் கேட்டு, கோஷமிட்டு, குறுக்குக் கேள்விகளையும் கேட்கலாம். உனக்கு அப்போது சமயோஜித புத்தி யும் நிதானமும் இருந்தால் இதுபோன்ற சந்தர்ப்பங்களில் அவர் களையே திணரச் செய்துவிடலாம் சுருக்கமாக – முக்கியமாக ஹாஸ்யச் சுவையோடு-பதில் கொடுத்தால் கூட்டத்தில் இருப்பவர் கள் பிரசங்கத்தில் குறுக்கிட்டுப் பேசுபவர்களைக் கேலி செய்ய ஆரம்பித்துவிடுவார்கள். அதோடு குறுக்கிட்டவர்களின் வாய் அடைபட்டு விடும்.

இதிலேயே இன்னொரு விதம். அதையும் கேள்; சொல்லு கிறேன். வேண்டுமென்றே கேள்விகள் கேட்டுக் குறுக்கிடும் கோஷ்டி ஒன்று உண்டு. அவர்கள் பதில் பெற வேண்டும் என்று கேள்விகள் கேட்பதில்லை கூட்டத்தில் குழப்பம் ஏற்பட வேண்டும் என்பதற்காகப் பிரசங்கம் செய்பவரது பேச்சில் குறுக்கிடுவார் கள். இவர்களைச் சமாளிப்பது எப்படி? கூட்டத்தைவிட்டு அவர்

களை வெளியேற்றி விடுவதுதான் சிறந்த மார்க்கம். அவசியமானால் போலீஸாரைக் கொண்டு செய்ய வேண்டும். குறுக்கிடுபவர்களைச் சரிப்படுத்தி அப்புறப்படுத்துவதற்கு என்று பயிற்சிபெற்ற தொண்டர்களைக் கொண்டும் மேற்படி நபர்களை வெளியேற்றி விடலாம். இவர்களைச் சமாளிக்க அடுத்த படியாக இன்னொரு வழியும் உண்டு. குறுக்கிடுபவர்களை அலட்சியமாக எண்ணி அவர்களை மதிக்காமலேயே இருந்துவிட வேண்டும். அவர்கள் கேள்விகளுக்கும் பதில் சொல்லக் கூடாது. நான் இதை எப்போதும் செய்திருக்கிறேன். அநேகமாக எல்லாச் சமயங்களிலும் எனக்கு இதில் வெற்றிதான்.

கூட்டத்தார் ரஸிக்க முடியாதபடி நீ பேச நேர்ந்து, அதனால் அவர்கள் உனக்குச் சாதகமாக இல்லாமல் போனால், அப்போது உன் திறமையைப் பிரயோகிக்கும்படி ஏற்படும். நாவன்மையில் உள்ள சகல சாதனங்களையும் நீ அப்போது உபயோகித்துக் கூட்டத்தாருக்குத் திருப்தி பிறக்கச் செய்ய வேண்டும். சில சமயங்களில் இதுபோன்ற அநுபவம் எனக்கு ஏற்பட்டிருக்கிறது. முக்கியமாக இரு சந்தர்ப்பங்களில் இந்த அநுபவம் எனக்கு; சட்ட சபைக்குப் போக வேண்டும் என்று, தாஸுடன் நான் பிரசாரம் செய்தபோதும், சமீபத்தில் காங்கிரஸ் மந்திரிப் பதவி ஏற்க வேண்டும் என்று சொன்னபோதும் ஏற்பட்டது அந்த அநுபவம். எனக்குக் கூட்டங்களில் எதிர்ப்புகள் இருந்தன. கடைசியில் நான் அவர்களது மனத்தை மாற்றிவிட்டேன் என்று நினைக்கிறேன்.

அநேகமாகப் பெண்கள் கூட்டத்திலும், சில சமயங்களில் ஆண்கள் அடங்கிய கூட்டத்திலும் நீ சுகாதாரம், சமூக க்ஷேமாபி விருத்தி, ஏன்? அரசியல் முதலியவைபற்றிப் பேசச் சந்தர்ப்பம் வாய்க்கலாம். பேச விரும்பினால் என்னுடைய பெண்ணான நீ என்னைவிட நன்கு பேச வேண்டும். இந்த விஷயத்தில் ஆண்டவன் உனக்கு வெற்றி தருவாராக!

7-6-'41.

# மரியாதையான பழக்கம்

**என் அன்புள்ள**

'**வி**சுவாசமுள்ள தன்மை, உன்னதமான மனம் இவற்றின் பயன் கண்ணியமான நடத்தை.' இப்படி ஓர் ஆங்கிலக் கவிஞன் எழுதினான்; அக் கவியின் வாக்கு, சரியானதுதான். சமூகத்தில் உல்லாசமாக இருப்பவன் மனிதன். எல்லா இடங்களையும்போல மனிதன் என்றால் பெண்ணும் இதில் சேர்ந்துதான் இருக்கிறாள். குழந்தைப் பருவத்திலிருந்து கிழடு தட்டும் வரையில், ஆடவராக இருந்தாலும் சரி, பெண்களாக இருந்தாலும் சரி, இதர ஆண்களுடனோ பெண்களுடனோ பழகவே வேண்டி இருக்கும். சமூகம் என்பது இதுதான். சமூக சக்கரம் சரிவரச் சுழல வேண்டுமானால் அது பரிசுத்தமாக இருக்க வேண்டும்; அதைச் சீராக அமைக்க வேண்டும். நல்ல மரியாதையுள்ள நடவடிக்கைகள் மனித சமூகத்தைச் செவ்வையாகவும் சந்தோஷமாகவும் நடத்துவதற்கு வழிகளாக அமைந்திருக்கின்றன.

நல்ல மரியாதையுள்ள நடத்தை என்றால் குறிப்பிட்ட வார்த்தைகளையோ சமிக்ஞைகளையோ நான் சொல்லவில்லை. இவை அவ்வப்போது ஏற்படக் கூடியவை. அடிக்கடி அவசியமாக இருக்கக் கூடிய விஷயமும் ஆகும். நல்ல மரியாதையான நடத்தையை வெளியிடுவதற்கு இவை வெளிப்படையாக உள்ள அம்சங்கள். உன்னிடம் பரிசயம் உள்ளவர்களைக் கவனிப்பதற்கு இரண்டு வழிகள் உண்டு. சில சந்தர்ப்பங்களில் ஒன்று நம்மைப் பற்றியே நாம் நினைத்துக்கொண்டிருந்துவிடுகிறோம். அல்லது மற்றவர்களை அலட்சியமாக நினைத்து, அவர்கள் இல்லாததைப் போலவே நடந்துகொள்கிறோம். இது சிலருக்குக் கொஞ்ச

காலம் சாத்தியமாக இருக்கலாம். ஆயினும் இதனால் கஷ்டம் அதிகம். 'மற்றவரைப்பற்றியும் கவனம் செலுத்த வேண்டும்' என்ற கோட்பாட்டைப் பின்பற்ற வேண்டும். அதைவிட, 'பிறர் உனக்கு என்னவெல்லாம் செய்ய வேண்டும் என்று நீ விரும்புகிறாயோ, அவற்றை அவர்கள் விஷயத்தில் செய்' இதுவே முறை. நல்ல மரியாதையுள்ள நடத்தையின் உண்மை ரகசியம் இதுதான். வெள்ளைக்காரர்களிடமிருந்து சில நல்ல மரியாதையான பழக்கங்களை நாம் தெரிந்துகொண்டிருக்கிறோம். உதாரணமாக நாம் ஒருவரை முதல் முதலில் பார்க்கும்போது, 'குட்மார்னிங் (Good morning)' என்கிறோம். யாராவது நமக்கு ஏதாவது செய்தால், 'வந்தனம் (Thank you)' என்கிறோம். இதைக் கேட்டவுடன் உன்னோடு பேசுபவர் 'பரவாயில்லை (Don't Mention)' என்கிறார். இவையெல்லாம் வெற்றுச் சம்பிரதாயங்களாகத் தோன்றலாம். ஆனால் அப்படி இல்லை. நமது முன்னோர்களெல்லாம் ஒருவரை ஒருவர் சந்தித்தால் ஆலிங்கனம் (தழுவிக் கொள்ளுதல்) செய்து கொள்வார்கள்; அல்லது நமஸ்காரம் செய்வார்கள். நாம் யாருக்கும் பகிரங்கமாக வந்தனம் சொல்வதில்லை. பார்க்கப் போனால், 'தாங்க் யூ (Thank you)' என்ற ஆங்கிலத் தொடருக்குச் சரியான தமிழ்ச் சொற்கள் இல்லை. நல்ல நடத்தையைக் குறிப்பதற்கான இந்தப் பழக்கங்களை நாம் அநுஷ்டிக்கலாம் என்பது என் அபிப்பிராயம். உனக்கு என்ன தோன்றுகிறது?

கண்ணியமான நடத்தையைப் பெருக்கிக்கொள்வதற்குக் குறிப்பாக ஓர் அம்சம் உண்டு. நெரிசலாக உள்ள இடங்களில் நாம் நடமாடும்போது நாம் இந்த அம்சத்தை வளர்த்துக்கொள்ளலாம். இரண்டு மூன்று பேர்கள் ஓர் அறைக்குள் பிரவேசிக்க வேண்டி இருக்கிறது. அல்லது அறையிலிருந்து வெளியே வரும்படி இருக்கிறது. நமக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை. ஒருவரை ஒருவர் இடித்துத் தள்ளி எல்லோருக்கும் ஹிம்சையை உண்டு பண்ணிவிடுகிறோம். இந்தச் சமயத்தில் வெகு கண்ணியமான முறை என்ன தெரியுமா? நீ ஓரத்தில் ஒதுங்கி நின்று, மற்றவர்கள் முதலில் போகும்படி வழிவிட வேண்டும். இதனால் உனக்குச்

சுணக்கம் ஆகலாம். ஆனால் இதனால் ஏற்படும் வசதியும் நல் லுணர்ச்சியும் கால தாமதத்தைவிடச் சிறந்தது.

முதலில் வந்தவருக்கு, முதலில் இடம் என்ற முறையை நாம் அநுஷ்டிக்கலாம். இது கண்ணியமானது. பஸ்கள், டிராம்கள் ரயில்கள், தியேட்டர்கள் முதலிய இடங்களில் எல்லாம் பெண்கள், குழந்தைகள், வயோதிகர்கள் இவர்களைப்பற்றிய சிந்தனையே இல் லாமல் ஒருவரோடு ஒருவர் மோதிக்கொள்வதை நீ பார்த்திருப் பாய். இது மிக மட்டமான நடத்தை. மேலே சொன்ன முறையை நாம் அநுஷ்டித்தால் அது நல்ல பழக்கம்; எல்லோ ருக்கும் காரியம் சுலபம்.

நீ உன்னையும் உன் உடுப்புகளையும் சுத்தமாக வைத்துக் கொள்வதும் நல்ல பழக்கங்களில் சேர்ந்ததுதான். உன் சுகா தாரத்துக்காக மட்டுமன்றி சமூகத்தில் உன்னோடு பழகுபவர்களுக் காகவும் சுத்தமாக இருப்பது அவசியம். தேகம், உடுப்பு இவை சுத்தமாக இருப்பது சொந்த விஷயத்தில் இருப்பதைப்போலவே சமூகத்துக்கும் முக்கியமாகும். அது ஒரு கடமை. ஏதாவது வாசனை போட்டுக்கொள்வது மிகச் சிறந்த காரியம் என்று சொல்லலாம்.

பெண்களை நடத்தும் விஷயத்தில் மேல்நாட்டினரிடமிருந்து நாம் ஏராளமான விஷயங்களைத் தெரிந்துகொள்ள வேண்டி இருக்கிறது. ஸ்திரீகளை மரியாதையுடன் நடத்துவது என்ற அவர்களது முறை, பழைய கால நோக்கத்தை அநுசரித்தது. நமது ஸ்திரீகளை நாம் அபலை (अबला) என்கிறோம். ஆகவே அவர்களை எல்லா விதத்திலும் நன்கு நடத்துவோம். இதை நாம் மிகைப்படுத்தக் கூடாது என்பதை நான் ஒப்புக்கொள் கிறேன். உதாரணமாக, கூட்டம் நிறைந்த வண்டியில் ஒரு பெண் வந்தால் உன் இடத்தை அவளுக்கு அளிப்பது நல்லது. நடந்து போகும்போது நாம், பெண்களை முன்னால் போகும்படி விட வேண்டும். 'சம உரிமை' என்று சமீபகாலத்தில் ஓர் அபிப் ராயம் உதித்திருக்கிறது. அந்த அபிப்பிராயக்காரர்கள் பெண்களை விசேஷமாக, பிரத்தியேகமாகப் பாவித்து நடத்தக் கூடாது என்று

கூறுகின்றனர். நான் இதை ஒப்புக்கொள்ளவில்லை. நீ இதை ஒப்புக்கொள்கிருயா என்ன? குழந்தைகள், வயோதிகர்கள் இவர்கள் விஷயத்தில் நாம் மிகவும் அநுதாபங்கொண்டு மரியாதையாக நடக்க வேண்டும்

சிறந்த பெண்மணி என்ருே, கண்யமுள்ள புருஷன் என்ருே எல்லோரும் எண்ணும்படியாக நடந்துகொள்ள வேண்டும். இந்த வார்த்தைகளுக்குச் சுலபமாக வியாக்யானம் செய்ய முடியாது ஆனல் அவற்றின் கருத்து என்ன என்பது உனக்கும் தெரியும்; எனக்கும் தெரியும். இதற்கெல்லாம் திட்டமான விதிகளை ஏற்படுத்துவது சாத்தியம் அல்ல.

ஒவ்வொரு பேச்சிலும் சம்பாஷணையிலும் உன்னுடைய தொனியிலும், மற்றவர்களிடம் நீ மரியாதையுடன் பழகும் விதத்தாலும் நீ பெண் என்பதை நிரூபிக்கலாம் உன் நடை, கம்பீரமான போக்கு இவற்றின் மூலமாகவும், நீ கண்ணியமான பெண் என்பதைத் தெளிவுபடுத்தலாம்.

பணம், படிப்பு, சமூகத்தில் வகிக்கும் அந்தஸ்து இவற்றைப் பொறுத்ததல்ல மரியாதையான நடத்தை அவை எல்லாம் அதற்கு உதவி செய்யக் கூடியவைதாம். இது இருதயத்தின் தன்மை. நீ நல்ல பெண்மணியாக, எல்லோரிடத்திலும் அன்பாகப் பழகி, அனைவருக்கும் சேவை செய்து, நீ போகும் இடங்களிலெல்லாம் சந்தோஷம் பரவும்படி செய். சற்று நிதானத்துடனும் இரக்கத்தோடும் மற்றவர்களுக்குப் பணிந்தும் நடக்க வேண்டும்.

இதில்தான் இருக்கிறது சூட்சுமம்.

8-6-'41.

# புத்தகங்கள்

**என் அன்புள்ள**

**லக்ஷ்மிக்கு,**

உனக்குப் புத்தகங்கள் என்றால் மிகவும் பிடிக்கிறது. இது என்னுடைய அபிப்பிராயம் உன் அம்மா அபிப்பிராயமும் இதுவே தான். புத்தகங்களைப் படிப்பதற்கு உனக்கு ஆசை இருக்க வேண்டியது நியாயந்தான். பல விஷயங்களைப்பற்றி அதிகமாகத் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆசை புத்தி வளர்ச்சிக்கும் முன்னேற்றத்திற்கும் அஸ்திவாரம்போல் ஆகும். நீ குழந்தை; எனவே கதைப் புத்தகங்கள், நாவல்கள், யாத்திரையைப்பற்றிய புத்தகங்கள், இவற்றையெல்லாம் படிக்க வேண்டும் என்று உனக்கு விருப்பம் இருப்பது இயற்கை. பலர் இப்படித்தான். ஆனால் கூடிய சீக்கிரம் நீ இதை விட்டுவிட வேண்டும். சரித்திரம், பூகோளம் இயற்கை விஞ்ஞானம்—அதாவது மலர்கள், பறவைகள், மிருகங்கள் பற்றியது. மனத்தத்துவ சாஸ்திரம், மதம் முதலியவைகளைப்பற்றிய புத்தகங்கள் இவைகளையெல்லாம் நீ படிக்க வேண்டும். நன்கு படித்த பெண்ணாக விளங்க வேண்டும் என்பது உனது லட்சியமாக இருக்கட்டும். நான் மேலே சொன்ன விஷயங்களைப்பற்றியெல்லாம் படித்து, நீ நிபுணத்துவத்தை அடைவது என்பது சாத்தியம் அல்ல. அதற்கு அவசியமும் இல்லை. இந்தப் பொதுவான விஷயங்களைப்பற்றியெல்லாம் பூர்வாங்கமாகப் படித்து, பரிசீலனை செய்து வைத்துக்கொண்டால் போதும். இப்படிச் செய்தால் நீ பத்திரிகைகளையும் சஞ்சிகைகளையும் படிக்கும்போது அவற்றைப் புத்திசாலித்தனத்துடனும் சிரத்தையுடனும் பின்பற்ற முடியும்.

பொது அறிவு என்ற புத்தகப் பிரதி ஒன்று உனக்கு வேண்டும் என்று நீ விரும்புகிறாய். ஆம்; உன்னிடம் அப் புத்தகம்

இருக்க வேண்டியதுதான். யுத்தம் முடிந்த பிறகு அன்றைய நிகழ்ச்சிவரையில் சேர்ந்த புத்தகம் ஒன்று பிரசுரம் ஆகுமென நம்புகிறேன். அந்தப் பிரதி உனக்குக் கிடைக்கும். இதுபோன்ற புத்தகத்தை நீ படிக்க முடியாது என்பது வாஸ்தவந்தான். ஆனால் அவ்வப்போது அப் புத்தகங்களை நீ அடிக்கடி புரட்டி உனது ஞானத்தைப் பெருக்கிக்கொள்ளலாம். அது உனக்கும் பயன் தரத் தக்கதாக இருக்கும்.

இந்தப் பொதுவான அறிவு வளர்ச்சி ஒரு புறம் இருக்கட்டும். சரித்திரம், மனத்தத்துவம், இயற்கை விஞ்ஞானம், இவற்றில் விசேஷ அபிமானம் கொண்டு நீ அதிக சிரத்தையோடு படிப்பாய். அந்த மாதிரி சந்தர்ப்பங்கள் ஏற்பட்டால் அவ்விஷயங்களைப்பற்றிய புத்தகங்களைத் தீவிரமாகப் படிக்க வேண்டும். பார்க்கப்போனால் அவ்விஷயங்களில் உனக்குள்ள சிரத்தை உன்னைப் படிக்கத் தூண்டும். அதுபோன்ற படிப்பு, குறிப்பான விஷயத்தில் உனக்கு விசேஷ பரிசயத்தை ஏற்படுத்தித் தருவதுடன் பொதுவாக உன்னை நல்ல படிப்பாளியாகவும் செய்துவிடும்.

இது தவிர, ஆங்கிலம், தமிழ், ஸம்ஸ்கிருதம், ஆகியவற்றில் உள்ள உயர்தரப் புத்தகங்களைப் படிப்பதிலும் ருசி பிறக்கும்படி நீ செய்துகொள்ள வேண்டும். ஏற்கனவே இப்பழக்கத்தை நீ அபிவிருத்தி செய்துகொண்டுதான் வருகிறாய். நீ படிக்கும் புத்தகங்களைப்பற்றி யெல்லாம் என்ன நினைக்கிறாயோ எனக்குத் தெரியாது. சாதாரணமான, தற்கால நாவல்கள் எனக்குப் போதும் போதும் என்று ஆகிவிட்டன. இதைப் பகிரங்கமாகக் கூறிவிடுகிறேன். அவை பிறர் குற்றங்களையும் ஆடவர் பெண்டிர் இவர்களைப்பற்றிய விவரங்களையுமே தாங்கி வெளிவருகின்றன. இவை என்னைச் சலித்துப்போகச் செய்கின்றன. ரயில்களிலும் வேறு வேலை ஒன்றையும் செய்ய முடியாமல் போகும் சந்தர்ப்பங்களிலும் பொழுதுபோக்க வேண்டிய சமயத்திலும் மூளைக்குச் சிரமத்தை அளிக்காமல் இருக்க வேண்டுமானால் அந்தப் புத்தகங்களை நீ படிக்கலாம். ஆனால் அப் புத்தகங்கள் உன் புத்திக்கு ஊக்கம் தரவோ உள்ளூற இருக்கும் உணர்ச்சியை எழுப்பவோ உதவா.

## அருமைப் புதல்விக்கு

ஆங்கிலப் புத்தகங்கள் சம்பந்தப்பட்டவரை ஷேக்ஸ்பியர் எழுதியுள்ள நாடகங்கள் அனைத்தையும் நீ படிக்க வேண்டும் என்பது என் விருப்பம். அவை பெரிய இலக்கியமாகும். அவற்றில் சிலவற்றைப் பலமுறை உத்ஸாகத்தோடும் ஊக்கத்தோடும் படிக்க உனக்குத் தோன்றும் அடுத்தபடியாக மில்டன், வேர்ட்ஸ்வொர்த், டென்னிஸன், ஷெல்லி, கீட்ஸ் இவர்கள் எழுதிய காவியங்களை நீ படிக்க வேண்டும் கோல்ட்ஸ்மித், ஸ்காட், டிக்கன்ஸ், தாக்கரே, மிஸஸ் ஹென்றி உட் இவர்கள் எழுதிய புத்தகங்களில் எவ்வளவு அதிகமாக நீ படிக்க முடியுமோ அவ்வளவையும் நீ படிக்க வேண்டும் என்பது என் ஆசை. இவர்கள் தவிர இன்னும் பல எழுத்தாளர்களும் உண்டு. அவர்களது புத்தகங்களையும் நீ படிக்கலாம். மேலே சொன்ன நூல்களையெல்லாம் படித்தால் ஆங்கில இலக்கியத்தின் பெருமை, அதிலுள்ள இனிமை இவற்றைப்பற்றி நீ கொஞ்சம் தெரிந்துகொண்டதாக இருக்கும்.

இதை எவ்வாறு சமாளிப்பாயோ எனக்குத் தெரியாது; அல்லது உனக்காக நான் அதை எப்படிச் சமாளிக்கும்படி செய்யப்போகிறேனோ அதுவும் தெரியாது. ஆனால், வால்மீகி, காளிதாஸர், பவபூதி இவர்களது நூல்களையெல்லாம் படித்து ஆனந்திக்கப் போதிய ஸம்ஸ்கிருத ஞானம் உனக்குக் கிட்டும்படி நீ செய்துகொள்ள வேண்டும். ராமாயணம், சாகுந்தலம், உத்தரராம சரித்திரம் இவற்றையெல்லாம் படித்து அநுபவிப்பது நம் வாழ்க்கையில் கிட்டும் மகத்தான பாக்கியம். நியாயத்திற்கும் ஆத்ம உணர்ச்சிப் பெருக்குக்கும் அவை ஓர் விருந்து. அவற்றை நீ அநுபவிப்பாய் என்று எனக்குத் தெரியும். இன்னும் அதிகமான இலக்கிய ரத்தினங்களை உன்னோடும் உனது தாயோடும் சேர்ந்து படித்து ஆனந்திக்கும் நாளைக் கூடிய சீக்கிரம் நான் எதிர்பார்க்கிறேன். கம்ப ராமாயணத்தை அநுபவிக்கும் அளவிற்கு நீ தமிழ்ப் பாஷையை நன்றாகக் கற்றுக்கொள்ள வேண்டும். பி. ஆர். ராஜம் ஐயர் எழுதிய கமலாம்பாள் சரிதை, ஏ. மாதவையா எழுதிய பத்மாவதி சரித்திரம் இவற்றையும் நீ படிக்க வேண்டும். அவை அற்புதமான நாவல்கள். தற்காலத் தமிழ் நாவல்களை

## புத்தகங்கள்

நான் லட்சியம் செய்யவில்லை. ஆங்கிலத்தில் உள்ள சிலவற்றைப் போலவே அவை மட்டமாக இருக்கின்றன. ஆனால் நான் மேலே சொன்ன நாவல் இரண்டும் தனிச் சிறப்பு வாய்ந்தவை. ஏற்கனவே நான் எழுதியதைப்போல நீ சில தற்காலத் தமிழ்ச் சஞ்சிகைகளையும் சரிவரப் படிக்க வேண்டும்.

துளஸிதாஸ் ராமாயணத்தைப் படித்து அநுபவிக்க வசதியாக உனக்கு ஹிந்துஸ்தானி பயில அவகாசமும் சந்தர்ப்பமும் இன்னும் கொஞ்சம் கிடைக்கும் என்று நம்புகிறேன்.

சரி; உன் ஆயுளில் நீ படிக்க வேண்டியவை எவை என்பதற்கு நான் ஒரு திட்டம் போட்டுவிட்டேன். ஆயுள் முழுவதும் ஒருவர் மாணவராக இருக்க வேண்டும். இதைவிடக் கடுமையான ஒரு வேலைத் திட்டத்தை நான் உனக்கு ஏன் கொடுக்கக்கூடாது? நீ ஏன் இரண்டொரு புத்தகங்களை எழுதலாகாது? என் ஆசை இப்படி இருக்கிறது. அதை நான் பூர்த்தி செய்வது சாத்தியமாகவே இருக்கும் என்பது என் நம்பிக்கை. உனக்கு இந்த ஆசை இருக்குமானால் வெற்றி கிடைக்கும். ஏனெனில், உனக்குச் சின்ன வயது. எப்படி இருப்பினும் உனக்குப் புத்தகங்களில் ஆசை இருப்பது விசேஷம். அதை விட்டு விடாதே. ஆனால் ஒன்று. உனக்கு வேண்டிய புத்தகங்களைப் பொறுக்கிக்கொள். அவற்றைப் படித்து உன் அறிவை மேன்மேலும் பெருக்கிக்கொள்.

கடவுள் உன்னை ஆசீர்வதிப்பாராக!

9-6-'41.

# பந்தய விளையாட்டுக்கள்

**என் அன்புள்ள**
**லக்ஷ்மிக்கு,**

இங்கிலாந்திலுள்ள குழந்தைகள், வாலிபர்கள், பெண்கள் ஆகிய எல்லோரும் பல விதமான பந்தய விளையாட்டுக்களில் ஈடுபடுகின்றனர். பலவிதக் காரணங்களால் நம் நாட்டில் அம்மாதிரியான நிலைமை இல்லை. இப்போது இந்த நிலை சிறிது அபிவிருத்தி அடைந்து வருகிறது. நம் இளைஞர்கள் பந்தய விளையாட்டுக்களில் பெருவாரியாக ஈடுபடுவதற்கு இடம் இருக்கிறது.

நமது கிராமங்களில் வாலிபர்கள்-சில்லறையான விளையாட்டுக்களாக இருந்தாலும்-அதி மும்முரமாக முனைந்து விளையாடுவார்கள். இவை சில வருஷங்களுக்கு முன்கூட நடந்துகொண்டுதான் வந்தன. ஆற்று மணலிலோ மைதானங்களிலோ அவர்கள் விளையாடுவது உண்டு. விளையாட்டு, சற்று முரட்டுத்தனமாகக்கூட இருக்கும். அவற்றால் செலவில்லை. ஆனால், அவற்றில் கலந்துகொண்டவர்களுக்கு நல்ல தேகாப்பியாசம் பெற வசதி இருந்தது. பாடசாலைகளில்கூட பையன்கள் கடுமையான விளையாட்டுக்களில் ஈடுபடுவது உண்டு. பெண்களுக்குக் கோலாட்டம் போன்ற, தேகாப்பியாசம் கொடுக்கும் விளையாட்டுகள் இருந்தன. வருஷம் ஒரு முறை நவராத்திரியின்போதோ அதற்குப் பிறகோ பெண்கள், கோஷ்டி சேர்த்துக்கொண்டு பல காரியங்களில் ஈடுபடுவார்கள். இவை அவர்களுக்கு நல்ல தேகப் பயிற்சி அளித்து வந்தன. இதுபோன்ற விளையாட்டுகள் மீண்டும் புத்துயிர் பெறும் என்று நம்புகிறேன். நமது சிறுவர் சிறுமியர்களுக்கு விளையாட நிறையச் சந்தர்ப்பம் கிடைக்கும் என்பதும் என் நம்பிக்கை.

## பந்தய விளையாட்டுக்கள்

உன்னுடைய பள்ளிக்கூடத்தில் சில, 'டிரில்'கள், தேகாப் பியாச வேலைகள் இவை நடக்கின்றன. அவை போதா; அவை நல்ல பயன் தரத்தக்கனவாகவும் இல்லை. தேக வலு வளர்ச்சி பெறுவதற்காக நமது வாலிபர்கள், பெண்கள் இவர்களுக்குப் பயிற்சி அளிக்க ஒய். எம். ஸி. ஏ. தேகப் பயிற்சிக் கல்லூரியைச் சேர்ந்த மிஸஸ் பக் மிகவும் உன்னதமான சேவை செய்கிறார். அவர் நடத்தும் வகுப்புகள் சிலவற்றிற்கு நீ போக வேண்டும் என்பது என் எண்ணம். வெளியே போய் விளையாடக் கூடிய பந்தய விளையாட்டுக்கள் சிலவற்றை நீ கற்றுக்கொள்ள வேண்டும் என்பதும் என் விருப்பம்

பந்தய விளையாட்டுக்கள் முக்கியமானவை என்று நான் எண்ணுகிறேன். கிரிக்கெட், ஹாக்கி, புட்பால் முதலிய விளையாட்டுக்கள் பெண்களுக்குத் தகுதியற்றவை. ஆனால், டென்னிஸ், பாட்மின்டன், வாலி பால் போன்ற விளையாட்டுகளில் நீ ஈடுபடலாம். நம் நாட்டுப் பெண்கள் இந்த விளையாட்டுகளில் கலந்துகொள்ள வேண்டும் என்று நான் கருதுகிறேன்.

தேகாப்பியாச விளையாட்டுகள் மூலம் உடலுக்கு நல்ல காற்றுக் கிடைக்கிறது; சந்தோஷமும் ஏற்படுகிறது இதற்காக மட்டும் அல்லாமல் பந்தய விளையாட்டில் கலந்துகொள்வதால் கிட்டக் கூடிய சில தன்மைகள் அபிவிருத்தி அடைய வேண்டும். பெண்ணேயினும் ஆணேயினும் இவ்விஷயத்தைப் பெருக்கிக்கொள்ள வேண்டும் என்பது என் அவா. நமது நாட்டில் கோஷ்டியாகச் சேர்ந்து உணர்ச்சியோடு காரியங்கள் செய்ய வேண்டும் என்ற மனோபாவம் இல்லை. தனித் தனியாகப் பார்த்தால் நாமெல்லாம் புத்திசாலிகளாகத்தான் இருக்கிறோம். ஆனால் ஒன்று சேர்ந்து காரியங்கள் செய்ய முடிவதில்லை. இதைச் செய்வதற்கு நமது கட்சியை நன்கு நிலைபெறச் செய்யக் கற்றுக்கொள்ள வேண்டும். தனிப்பட்ட முறையில் வெற்றி வேண்டும் என்ற ஆசையை அடக்கிக்கொண்டு தன்னைச் சேர்ந்த கோஷ்டிக்கே வெற்றி சித்திக்க வேண்டும் என்ற விருப்பம் மேலோங்கி வளரச்

செய்ய வேண்டும். தனி முறையில் வெற்றி பெற வேண்டும் என்ற ஆசைக்கும், கோஷ்டிக்கே வெற்றி கிட்ட வேண்டும் என்ற உணர்ச்சிக்கும் வித்தியாசம் உண்டு. அதற்குத் தனியாகச் சில தன்மைகள் வேண்டும். அவற்றை வியாக்கியானம் செய்வது சுலபம் அல்ல. கட்சியாகச் சேர்ந்து ஒன்றுபட்டு விளையாடும் போது அந்த விஷயம் என்ன என்பது உனக்குப் புலப்படும். இங்கிலீஷ்காரர்கள் கோஷ்டி கோஷ்டியாக நின்று 'கிரிக்கெட்' பந்தயம் ஆடுகிறார்கள். அதை நீ பார்த்தால், கோஷ்டியின் வெற்றிக்காக, மொத்தமாகச் சேர்ந்து எல்லோரும் உணர்ச்சி கொண்டு விளையாடுவதைக் காணலாம். இந்தியக் கிரிக்கெட்டு விளையாட்டு இன்னும் அந்த நிலைமைக்கு வரவில்லை. திறமையுடன் பந்தை நன்கு அடிப்பவர்களோ (Batsmen) பந்து வீசுபவர்களோ (Bowlers) நம் நாட்டில் இல்லாதது அதற்குக் காரணம் அல்ல. போதியபடி கோஷ்டியோடு சேர்ந்து ஒன்றுபட்டுச் செய்ய வேண்டும் என்ற உணர்ச்சியை இன்னும் நாம் பெருக்கிக்கொள்ளவில்லை; அதுதான் காரணம்.

இரண்டாவதாக ஒரு விஷயம். சில கட்டுப்பாடுகளுடன் நடக்கும் பந்தய விளையாட்டுகளால் அநுகூலம் உண்டு. அதில் கலந்துகொள்பவர்களுக்கு, ஒரு கோஷ்டியின் தலைவருக்கு முற்றும் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும் என்ற தன்மை வளர்ச்சி பெறுகிறது. கண்மூடித்தனமாக யாருக்கும் கீழ்ப்படிந்து நடக்க வேண்டும் என்பதை நான் ஆதரிக்காதவன். இது உனக்குத் தெரிந்த விஷயம். வெற்றிகரமாக, கட்டுப்பாடாக வேலைகளைச் செய்வதற்கான ஒழுங்கு முறை நம் நாட்டில் போதியபடி வளரவில்லை. நல்ல முறையில் பந்தய விளையாட்டுகளுக்கு ஏற்பாடு செய்து நடத்தினால் நம்மிடையே ஒழுங்கு முறை பெருக உதவியாக இருக்கும். 'காரணத்தைக் கேட்கக் கூடாது; செய் என்றால் செய். அதுதான் உன் வேலை' என்று சொல்லும் கோட்பாட்டை நான் சொல்லவில்லை. ஆனால் உனக்குத் தலைவராக ஒருவரைத் தேர்ந்துவிட்டுப் பந்தய விளையாட்டில் ஈடுபட்டிருக்கும்போது நீ அவருக்கு எதிர் பேசாமல் கீழ்ப்படிந்தே

நடக்க வேண்டும். பந்தயம் முடிந்த பின்னர் நீயும் உன் நண்பர்களும் தலைவரிடம் அதிருப்தி கொள்வதாக இருந்தால் அவரை மாற்றிவிட்டு வேறு தலைவரைத் தேர்ந்துகொள்ளுங்கள். ஆனால், அவர் தலைவராக இருக்கும்வரை நீங்கள் அவருக்குப் பணிந்துதான் நடக்க வேண்டும். பந்தய விளையாட்டுக்களில் நீ கலந்துகொண்டால் இது உனக்குத் தெரிந்துவிடும்.

கடைசியாக ஒன்று. எல்லா விளையாட்டுகளிலும் சந்தர்ப்பம் என்பது ஒன்று உண்டு. நல்ல கட்சி ஜயிக்க வேண்டும் என்பது தான் நியாய சித்தமுள்ள எல்லோரின் விருப்பமாகவும் இருக்கும். ஆனல் சிறந்த கட்சியே எப்போதும் ஜயித்துக்கொண்டிருப்ப தில்லை. எந்தக் கட்சி சிறந்தது என்று எப்போதுமே திட்டமாகச் சொல்லிவிடுவதும் சுலபம் அல்ல. நீ பந்தய விளையாட்டுகளில் கலந்துகொள்ளும்போது நீயும் உன் கட்சியும் ஜயித்தாலும் ஜயிக்கலாம்; அல்லது தோற்கவும் கூடும். அகம்பாவம் இன்றி வெற்றிபெறக் கற்றுக்கொள்ள வேண்டும். தோற்ருலும் பொருமை கூடாது. இது மிகவும் மகத்தான தன்மை. மேற்படி பந்தய விளையாட்டுகளில் எல்லாம் தோல்வி பெற்ற கட்சியின் தலைவரோ விளையாட்டில் தோற்ற நபரோ வெற்றி பெற்ற கட்சித் தலைவரை முதல் முதலில் போய்ப் பாராட்டுவார். இது வெகு சரியான காரியம். நீ ஜயித்தாலும் எப்போதும் உனக்கே வெற்றி என்று நினைக்காமல் மற்றவர்களுக்கும் வெற்றி கிடைக்கும் என்பதை மனத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். நீ ஏதாவது பந்தய விளையாட்டுக்களில் பயிற்சி பெற்றுத் திறம்பட விளையாடு.

பிறகு எல்லாம் உனக்குச் சௌகரியமாக இருக்கும்.

10-6-'41.

# கடவுளும் மதமும்

**என் அன்புள்ள**

ஏதாவது முக்கியமான விஷயத்தைப்பற்றி எழுதும்படி நேற்று என்னிடம் நீ தெரிவித்தாய் இதோ எழுதுகிறேன். கடவுள், மதம் இரண்டையும்விட முக்கியமான விஷயங்கள் என்ன இருக்கின்றன? நீ மிகவும் சின்னப் பெண். சாதாரண மாகப் பார்த்தால் இந்தக் கடுமையான விஷயங்களைப்பற்றி நான் உனக்கு எழுதியிருக்கமாட்டேன். ஆனால் நீ எழுத வேண்டும் என்று விரும்புவதால் நான் அவைபற்றி எழுதுகிறேன்.

கடவுள் என்று ஒருவர் உண்டா? அப்படியானால் அவருடைய குணாதிசயங்கள் எவை? அவரது கடமைகள் என்ன? அவர் சர்வத்தையும் அறிந்தவரா? சர்வ வல்லமை படைத்தவரா? எங்கும் நிறைந்தவரா? கடவுள் இருப்பது உண்மையானால் நாட்டில் ஏன் இவ்வளவு கேடுகளும் துன்பங்களும் இருக்க வேண்டும்? நரகம் என்றும் சுவர்க்கம் என்றும் இருக்கின்றனவா? ஆத்மா என்று ஒன்று இருக்கிறதா? மரணத்துக்குப் பின்பும் ஆத்மா இருக்கிறதா? அப்படியானால் எந்த உருவில்? மனிதனுடைய முடிவு என்ன?

சாதாரண மனிதர்களின் சொற்களால் இவற்றிற்கும் இவை போன்ற இதர கேள்விகளுக்கும் பதில் சொல்வதற்கு இல்லை. ஆண்டவனைப்பற்றியும் பிற மதத்தைப்பற்றியும் உபநிஷத்துக்கள் பின் வருமாறு தெரிவிக்கின்றன: மனோவாக்குக்கு எட்டாதவன் **(यतो वाचो निवर्तन्ते अप्राप्यमनसा सह)**. நிரூபிக்க முடியாத சந்தர்ப்பத்தில் நாம் நம்பிக்கைகொள்ளத்தான் முடியும்.

நம்மை யெல்லாம் ஆட்டிவைக்கும் தெய்விக சக்தி ஒன்று உண்டு; கடவுள் ஒருவர் உண்டு என்று நான் நம்புகிறேன். கட

ஒளின் தன்மை, புகழ் இவைபற்றி எனக்குத் திட்டமான அபிப் பிராயம் எதுவும் இல்லை. நம் நாட்டில் அநேகம் மகான்களும் உத்தமர்களும் பல்லாண்டுகளாக, ஏன் இன்றுகூடக் கடவுளைப் பற்றி அப்படிச் சொல்லியிருக்கின்றனர். ஆண்டவனை உணர்ந்த வர்களைப்போல் அவர்கள் தங்கள் வாழ்க்கையை நடத்தியிருக் கின்றனர்; நடத்தியும் வருகின்றனர்; நாம் கடவுளை அடைய முடியுமா? நமது யோகிகள், 'ஆம் முடியும்' என்று கூறுகின்ற னர். அவரை அடைய வேண்டுமானால் அதற்கு அவசியமான ஒழுங்கு முறைப்படி நடக்க வேண்டும்.

இன்னொரு தேசத்திற்கு நாம் போக வேண்டும் என்றால் அதற்காக உள்ள மார்க்கத்தின்படியே போக வேண்டும். ஆண் டவனை அடைய நாம் விரும்பினால் கடவுளை அடைந்த முனிவர் களது உபதேசத்தைப் பின்பற்றி அவர்கள் மார்க்கத்தைக் கடைப் பிடிக்க வேண்டும். இதைச் செய்யாமல் நாஸ்திக வாதம் புரிவ தற்கு நமக்குத் தகுதி இல்லை. எப்படி இருப்பினும் கடவுள் உண்டு என்று நான் உணர்ச்சி பூர்வமாக உணருகிறேன். நீ என்ன நினைக்கிறாய்?

நம் நாட்டில் மகத்தான மதஸ்தாபகர்களும் ரிஷிகளும் ஆண்டவன் சாஸ்வதமாக இருக்கிறார் என்று பாட்டுகளாகவும் வசனமாகவும் வர்ணித்திருப்பதைத் தெரியாமல் செய்ததாகவோ அல்லது ஜனங்களைத் தவறான பாதையில் திருப்புவதற்காகச் செய் ததாகவோ நாம் நினைக்க முடியுமா? இதை நானே நம்பவில்லை. உலகத்தின் உத்தமர்கள் எல்லோரும் கடவுள் இருக்கிறார் என்று தான் [illegible]

கடவுள் நல்லவர்; கருணை உடையவர்; சர்வத்தையும் அறிந்தவர்; எங்கும் நிறைந்தவர். சர்வ மதங்களும் இந்த உண்மையைத் தெரிவிக்கின்றன. நாம் நல்லவர்களாக இரு ப்பதையே கடவுள் விரும்புகிறார். உலகத்தில் ஏன் இந்தத் துன்பங் களும் கேடுகளும் இருக்க வேண்டும் என்ற கேள்விக்குப் பதில் சொல்வது சுலபம் அல்ல. மனிதன் சந்தர்ப்பங்களுக்கு இலக்கான ஒரு கருவியே சுயேச்சையாக முயன்று ஒரு காரியத்தைச் சாதிக்க

முடியாது என்று கூறுவதில் எனக்கு நம்பிக்கை இல்லை. நமது மதம் அப்படிப் போதிக்கவில்லை. பார்க்கப் போனால் மனிதன் சுயேச்சையாக எதையும் செய்யத் துணிவுகொள்ளலாம். பெரும் பாலான மக்கள் அவரவர்கள் செய்த காரியங்களுக்கு ஏற்பத் தகுந்த பலனை அநுபவிக்கிறார்கள். கடைசியில் நல்லவர்களாக இருப்பவர்கள் சுகமாக வாழ்கிறார்கள். கெட்டவர்களாக இருப் பவர்களுக்குச் சுகவாழ்வு இல்லை. ஆனால் இதிலும் விலக்குகள் இருக்கின்றன என்பது எனக்குத் தெரியும். கெட்டவர்கள் செழித் துக் கொழிக்கிறார்கள்; உண்மையில் நல்லவர்களாக இருப்பவர் கள் அவதிப்படுகிறார்கள். இதற்கு நமது மதம் என்ன சொல் லுகிறது தெரியுமா? இது பூர்வ ஜன்ம கர்மவினை என்று கூறு கிறது. இந்தப் பதில் பூர்ண திருப்தி அளிக்காமல் இருக்கலாம். ஆனால் அதுவும் ஓரளவு தக்க சமாதானம் ஆகும். இப்போது நடக்கிறதே இதைப்போன்ற யுத்தங்கள், பூகம்பங்கள், தீ விபத் துக்கள் முதலியவை காரணமாகக் கடவுளிடம் மனிதனுக்குள்ள நம்பிக்கை தளர்ந்து சந்தேகம் எழுகிறது. இந்தக் கேள்விகளைப் பற்றி நான் ஆராய விரும்பவில்லை. இவை தொந்தரவு பிடித்த காரியங்கள் ஆகும். கடவுள் இல்லை என்று நாம் முடிவு செய்து விடுவது சரியா? நான் அப்படிச் சொல்லமாட்டேன். ஓர் எல் லைக்கு உட்பட்ட நமது புத்தி, இவற்றையெல்லாம் தத்ரூபமாக உள்ள நிலைமையில் உணர்ந்து அறிய முடியாது. நாம் படித் தறிந்து உணரும்போது ஒருவேளை இவைபற்றித் தெரிந்து கொள்ளக் கூடும்.

தெய்வபக்தி இருப்பது நமது வாழ்வுக்குப் பெரிய உதவி, ஆறுதல் என்பதை என்போலவே நீயும் ஒப்புக்கொள்வாய் என்று நம்புகிறேன். சாதாரணமாகச் சம்பிரதாயத்தை ஒட்டிய மதம், அதை அநுசரித்த கோட்பாடுகள் இவற்றைப்பற்றி நான் சொல்லவில்லை. 'ஆண்டவனிடம் நிரந்தரமான பக்தி இருப்பது நாம் சிறப்பாக வாழ்வதற்கு உதவியாகும்' என்று சுவாமி விவே கானந்தர் சொன்னார். அந்த அபிப்பிராயப்படி நானும் சொல்கிறேன்.

நல்லவர்கள் சுவர்க்கத்துக்கும் கெட்டவர்கள் நரகத்துக் கும் போகிறார்கள். சுவர்க்கம்-நரகம் என்ற இரண்டும் இருக்

கின்றனவா? இறுதியில் தீர்ப்புப் பெற ஒரு தினம் உண்டா? தொடர்ச்சியாகப் பிறவிகளும் மறு பிறவிகளும் உண்டா? இவை கஷ்டமான கேள்விகள். திட்டமாக இவற்றிற்குப் பதில் சொல்ல என்னால் முடியவில்லை.

மனிதனின் இறுதியான கதி என்ன; மனிதன் கடைசியில் பரப்பிரும்மத்துடன் ஐக்கியம் ஆகிவிடுகிறான் என்பதும் பிடிப்பதேயில்லாத வாழ்வை அடைகிறான் என்பதும் அத்வைதக் கோட்பாடு. அதை நான் நம்புகிறேன்.

ஸ்ரீராமகிருஷ்ண பரமஹம்ஸர் ஸ்ரீ ரமண மஹரிஷி முதலிய பலர் ஜீவன் முக்தர்களாக இருக்கின்றனர். இந்த நிலையை அடைவதற்கு வழி என்ன?

மனிதன் பல ஜன்மங்கள் எடுக்க நேருகிறதா? அப்படியானால் எந்த முறைப்படி?

இந்தக் கேள்விகளெல்லாம் எனக்கு ஆழம் நிறைந்தவையாகத் தோன்றுகின்றன. நாம் நல்ல வாழ்க்கை நடத்தி, புலன்களைக் கட்டுப்படுத்திக்கொண்டு பிறருக்கு நன்மை தவிரத் தீமை செய்யாமல் இருந்தால் நாம் மோக்ஷத்தை அடையலாம் என்று திண்ணமாக நம்புகிறேன். என்னுடைய அநுஷ்டான மதம் இதுதான் :

பிறருக்கு உபகாரம் செய்வது புண்ணியம், தீமை செய்வது பாவம் **(परोपकारः पुण्याय पापाय परपीडनम्).**

இதையே நீ அநுஷ்டிக்க வேண்டும். பிறகு நாம் பக்தி, நம்பிக்கை இவற்றுடன் வாழ்க்கையை நடத்தலாம்.

பகவான் பின் வருமாறு தெரிவிக்கிறார்:

'நன்மை செய்பவனுக்குக் கெடுதி ஒரு நாளும் நேராது **(नहि कल्याणकृत्कश्चित् दुर्गतिं तात गच्छति ।).**'

11-6-'41

**இசையில் ஈடுபடுபவர்**

குழல், யாழ் முதலிய இசைக் கருவிகளில் இசை தோன்றுகிறது. இந்த இசையில் அனைவருமா ஈடு படுகின்றனர்? இல்லையே! காரணம் என்ன? சிலர் இசையில் தம்மையே மறந்துவிடுகின்றனர்; சிலர், இசையைத் தலையிடியாகக் கருதுகின்றனர். ஈடு படுத்தும் இயல்பு இசையினிடம் மட்டும் காணப்படு மானால், அனைவரையுமல்லவா அது ஈடுபடுத்த வேண்டும்? எனவே, இசையில் ஈடுபடுவதற்கு இரண்டு நிபந்தனைகள் உண்டு என்பது விளங்கும். ஒன்று, இசை ஈடுபடுத்தும் தன்மை பெற்றதாய் இருத்தல் வேண்டும். இரண்டாவது, அதனைக் கேட்பவர் தக்க மனநிலை உடையவராய், பண்பட்ட மனம் உடையவராய், இருத்தல் வேண்டும். இவை இரண்டும் சேரும் பொழுது இசை இனிமையாய் இருக்கிறது. இந்த நிலையில் என்ன நடைபெறு கிறது என்பதைக் காண்டல் வேண்டும்.

நல்ல பண்பட்ட மனம் உடைய ஒருவர் இசை யைக் கேட்கிறார் என்று வைத்துக்கொள்வோம். அவருடைய நான்கு பொறிகளும் வேலை அடங்கிச் செவி ஒன்று மட்டுமே தொழிற்படுகிறது. மனமும் அச்செவிக்கு உற்ற துணையாய் இருந்து இசை இன் பத்தில் ஈடுபடுகிறது. கேட்கக் கேட்க மனம் அடங்கி ஒன்றிவிடுகிறது. இந்த '**ஒன்றல் தன்மை**'[1] தான் இசை நமக்குத் தரும் பெரிய செல்வம். இந்நிலை யில் ஒன்றி இருக்கும் ஒருவருக்கு மனம் மாறு பட்டாலும் இசை 'அபசுர'மாகிக் கெட்டாலும் மறு படியும் ஒன்றல் தன்மையை அடைவது இசையில் இயலுமாயினும் அவ்வொன்றலின் பயனாக அன்பு

1. Hormony

# உண்மையான மதபக்தி

பாதிரிகளும் சந்நியாசிகளும் தூய வாழ்க்கையைக் கைக்கொண்டு உயர்ந்த சிந்தனையுடன் தந்நலம் இன்றி எல்லோருக்கும் சேவை செய்கின்றனர். முக்கியமாக அவர்களெல்லாம் ஏழைகள், அறியாதவர்கள், நோயாளிகள் இவர்களுக்குத் தொண்டு புரிகின்றனர். மதத்தின் உத்தமமான போக்குக்கு இவை சிறந்த ருசுக்கள்.

இந்த மாதிரியான விஷயங்களுக்கு நேர்மாறாகச் சரித்திரத்தில் நாம் படித்திருக்கிறோம் அல்லவா? பல்லாண்டுகளாக, ஒரு மதத்தைப் பின்பற்றுபவர்களுக்கும் இன்னொரு மதத்தைப் பின்பற்றுவோருக்கும்—அடிக்கடி—கையில் வாளேந்தியும் தீயைக் கொண்டும் சதா சண்டை நடந்ததாகப் படிக்க வில்லையா? ஏன்? ஒரே மதத்தைச் சேர்ந்தவர்களுக்குள் வகுப்பு வகுப்பாகப் பிரிவினை! ஒருவரை ஒருவர் எதிர்த்துச் சண்டையிட்டுத் தீயிட்டுக் கொளுத்திக் கொலை புரிந்திருக்கின்றனர். இங்கிலாந்தில் கத்தோலிக்கர்களுக்கும் பிராட்டஸ்டென்டுகளுக்கும் இது மாதிரியெல்லாம் நடந்திருக்

ஸ்பெயினில் நடந்த மத விசாரணைபற்றியும், அதை அடுத்து நிகழ்ந்த சம்பவங்களைப்பற்றியும் நாம் அறிவோம். கிறிஸ்துவ மதத்தில் நம்பிக்கை கொள்ளாதவர்களை அம்மதத்தை ஏற்றுக் கொள்ள வேண்டுமென்று பலாத்காரம் செய்து நடந்த, கொடிய அக்கிரமங்கள் பல. இவற்றைப் பார்த்தால், 'இந்த ஜனங்களெல்லாம் மனிதர்கள்தாமா!' என்று திகைக்கும்படி இருக்கிறது. பழைய காலத்தில் கிறிஸ்தவர்கள் சித்திரவதைக்கு ஆளானதைப் படிக்க மனம் சகிக்கவில்லை.

நம் நாட்டையும் எடுத்துக்கொள்வோம். சில முஸ்லிம் தீவிரவாதிகள் ஹிந்துக்களைக் கத்தி முனையில் இஸ்லாத்துக்கு மாறும்படி செய்ய முயன்றிருக்கின்றனர். முஸ்லிம்களுக் குள்ளேயே, ஷியாக்களும் ஸுன்னிகளும் சண்டை செய்கிறார்கள். இன்று ஐக்கிய மாகாணத்திலே நடப்பது இதற்கு ஓர் உதாரணம்.

தென்னிந்தியாவில் மதத்தின் பெயரால் ஜைனர்களும் சைவர்களும் ஒருவரை ஒருவர் எதிர்த்துக் கொன்று மடிந்திருக்கிறார்கள்.

இது தவிர, சைவர்களுக்கும் வைஷ்ணவர்களுக்கும் அடிக்கடி சண்டை. சாத்விகமானவர்கள் ஆதலின் அவர்கள் தங்கள் சண்டையில் ஒருவரை ஒருவர் கொல்லவில்லை; எரிக்கவும் இல்லை. ஆனால் கண்ணியமுள்ள எவரும் பேசாத முறையில் மகா மட்டமாக ஒருவரை ஒருவர் திட்டிக்கொண்டிருக்கின்றனர். இன்று கூடப் பார்க்கலாம். வைஷ்ணவர்கள் ஆலயங்களில் வடகலையார்களுக்கும் தென்கலையார்களுக்கும் கடவுளைச் சாக்கிட்டுத் தகராறுகள்; ஒருவருக்கொருவர் குஸ்தி—இவை கோர்ட்டுகள், போலீஸ் முதலிய இடங்கள் வரையில் போய்விடுகின்றன! மத சம்பந்தமான தங்கள் சண்டை, பூசல்களை ஹிந்து மதத்தைச் சேராத ஜட்ஜுகள், மாஜிஸ்ட்ரேட்டுகள், போலீஸ்காரர்கள் ஆகியோர் தீர்த்து வைப்பதில் இவர்களுக்குத் திருப்தி.

மதத்தில் தவறான பக்தி கொண்டு செய்யக் கூடிய அசம்பாவிதங்களை நான் தொகுத்துக் கூறியிருக்கிறேன். இதனால் என்ன ஏற்படுகிறது? மதம் கெட்டது என்பது அல்ல. ஆனால் நல்ல விஷயத்தைக் கெட்டவர்கள் பாழாக்கிவிடுகிறார்கள் என்பதுதான் முடிவு. நல்ல காலம்; இந்தப் பழைய சீர்கேடான நிலைமை மாறி வருகிறது என்றே எனக்குத் தோன்றுகிறது.

மதம் என்பது ஒவ்வொருவரும் வழிபடும் தெய்வத்துக்கும் அவர்களுக்கும் உள்ள சொந்த விஷயம். இதில் யாரும் தலையிட உரிமை இல்லை என்று ஜனங்கள் உணர ஆரம்பித்திருக்கிறார்கள்.

சத்தியம் என்பது குறிப்பாக எந்த ஒரு மதத்துக்கும் ஏகபோக உரிமை அல்ல என்பதை நாம் கொஞ்சங் கொஞ்சமாக உணர்ந்தே வருகிறோம். மற்றவர்கள் தங்கள் மதத்தில் நம்பிக்கை கொண்டு அதைப்பற்றி உபதேசிக்கும்படி அநுமதிப்பது விவேகம். நாம் நம் மதவிஷயத்தில் கொண்டாடும் உரிமையைப்போலவே மற்றவர்களுக்கும் உரிமை இருக்க வேண்டும் அல்லவா? இதைப் பொதுஜன ஒழுங்கு, சீலம் இவற்றை அநுசரித்தே செய்ய வேண்டும்.

ஆனால் பேசாமல் நடவடிக்கையில் முனையாமல் இருந்து வரும் மனோபாவம் கூடாது. தெளிந்த நாகரிகத்துக்கு மதம்

ஒத்தபடி இருக்கிறது என்று நாம் சொல்ல வேண்டுமாயின் அது திட்டமாக உருவாக வேண்டும். கிருஷ்ணபரமாத்மா பின் வருமாறு சொல்லுகிறார். 'யார் யார் எப்படி என்னை எண்ணி வழி படுகிறார்களோ அந்த உருவில் நான் தோன்றுகிறேன் (ये यथा मां प्रपद्यन्ते तांस्तथैव भजाम्यहम्)'

சகிப்புத்தன்மை என்பதன் தாத்பரியம் இதுதான். அமைதி, நியாயம், நாகரிகம், மனித சமுதாயம் இவற்றிற்கெல்லாம் மதம் ஓர் வன்மையுள்ள சக்தியாக இருக்கிறது; அப்படி இருக்கவும் முடியும். ஆனால் அதைப் பரந்த திருஷ்டியோடும் சகிப்புத் தன்மையோடும் அமைக்க வேண்டும்.

'ஹிந்து மதம் தீவிரமான உத்வேகமுள்ள மதம் ஆகிவிடுமா?' என்று நேற்று நீ என்னைக் கேட்டாய். ஆகாது என்று பதில் சொன்னேன் நான். இல்லையென்று நான் சொன்னது மத மாற்றத் துக்குத்தான் பொருந்தும். ஹிந்து மதம் சகிப்புத் தன்மையுடன் விளங்க வேண்டும். அதுதான் அதன் உன்நதமான அம்சம்.

12-6-'41.

# ஹிந்து மதம்

**என் அன்புள்ள**
**லக்ஷ்மிக்கு,**

மதங்களின் பொதுப்படையான அம்சங்கள் ஒருபுறம் இருக்கட்டும். நீயும், நானும் ஹிந்து மதத்தின் எதிர்காலம்பற்றிச் சிரத்தை கொண்டிருக்கிறோம். உலகத்திலேயே ஹிந்து மதம் மிகப் புராதனமானது. ஜைன மதம், சீக்கியர் மதம் இவற்றைப் போலவே ஹிந்து மதமும் ஒரு வகையில் புத்த மதத்தின் சாயை எனலாம். பிரும்ம சமாஜம், ஆரிய சமாஜம் ஆகியவை ஹிந்து மதத்தைத் தழுவிய இயக்கங்களில் ஈடுபட்டவை ஆகும். ஹிந்து மதம் பெரும்பாலும் இந்தியாவுக்குள்ளேயே வியாபித்திருந்தது. ஆனால் ஒரு காலத்தில் ஹிந்து மிஷனரிகளைச் சேர்ந்தவர்கள் இலங்கை, ஜாவா, மலேயா, பர்மா முதலிய இடங்களுக்குச் சென்றிருந்தார்கள்.

நம்பிக்கையின் காரணமாக, நமது நாட்டில் ஹிந்து மதத்தை ஒன்றும் அறியாத கிராமவாசிகளும் அநுஷ்டிக்கின்றனர். விஷயம் அறிந்தவர்கள், அத்வைத சித்தாந்தப்படியோ விசிஷ்டாத்வைத முறைப்படியோ அதை அநுஷ்டிக்கிறார்கள். ஹிந்து மதத்தின் எதிர்காலம் செவ்வையாக விளங்க வேண்டுமாயின் நாம் ஒரு பெரிய சீர்திருத்த இயக்கத்தை உருவாக்க வேண்டும். நாமெல்லோரும் அநேகமாகச் சம்பிரதாய நம்பிக்கை கொண்டிருக்கிறோம். ஆனால் இவற்றிற்கு எங்கேயாவது ஓரிடத்தில் முற்றுப்புள்ளி வைக்க வேண்டும். உதாரணமாக நமது ஆலயங்களில் மிருக பலி இடுவதை ஒழிக்க வேண்டும் என்பது என் விருப்பம். கல்கத்தாவில் காளி கட்டத்தில் மிருகபலி இடப்படுகிறது. இதுபோன்றவைகளை நிறுத்த வேண்டும். கருணாநிதியாக உள்ள தெய்வம் இதுபோன்ற பலிகளை ஏற்காது. மிருகபலி கூடாது என்பது

நம் தென்னிந்திய ஆலயங்களுக்கும் பொருந்தும். சில யாத்ரிகர்கள் பிரார்த்தனை செய்துகொள்கிறார்கள். அதாவது உடம்பிலும் நாக்கிலும் அலகு குத்திக்கொள்கிறார்கள்; தீ மிதிப்பதாக வேண்டிக்கொள்கிறார்கள். இவைபோன்ற – தேகத்தில் ரணம் ஏற்படும்படியான – பிரார்த்தனைகள் நிற்க வேண்டும். மனித வர்க்கம் சிரமப்படுவது எந்தத் தெய்வத்துக்கும் பிரீதி அல்ல. நமது கண்ணியமான உணர்ச்சிக்கும் மனித வர்க்கத்துக்கும் இவை விரோதம்.

நமது ஆலயங்கள் உண்மையில் தெய்வாம்சம் உள்ள இடங்களாக இருக்கும்படி செய்வது முக்கியம். இப்போது இருப்பதைவிட அவை இன்னும் சுத்தமாக இருக்க வேண்டும். தென்னிந்தியாவின் பல கோயில்கள் பாழாகிக் கிடக்கின்றன. நிறைந்த சொத்துள்ள தேவஸ்தானங்கள் பல இருக்கின்றன. அவை சரியாகப் பரிபாலிக்கப்படவில்லை; தக்க காரியங்களுக்கு அந்தப் பணம் செலவிடப்படவும் இல்லை. ஹிந்து மத பரிபாலன போர்டார் நிலைமையை அபிவிருத்தி செய்யவில்லை. அந்த அந்த இடங்களில் பொது விஷயங்களில் ஊக்கம் கொண்ட பிரதிநிதிகளின் ஒத்துழைப்புடன் சர்க்கார் மேற்படி தேவஸ்தானங்களின் நிர்வாகத்தை ஏற்க வேண்டும்; ஆலயங்களைப் புதிதாக்கி, சுத்தமாக இருக்கும்படி செய்ய வேண்டும்.

ஆலயங்களை வெளியே புதிதாக்கி, சுத்தமாக்குவதுமட்டும் போதாது. உண்மையில் ஆசார சீலர்களாகவும் பயிற்சியும் அநுபவமும் உடையவர்களாகவும் உள்ள அர்ச்சகர்களைக் கொண்டு ஆலயங்களில் பூஜை செய்யச் சொல்ல வேண்டும். அவர்களுக்கெல்லாம் போதுமானபடி சம்பளம் தர வேண்டும். உண்மையான யாத்திரிகர்கள் தவிர வேறு யாருக்கும் இலவசமாக உணவு கொடுக்கக் கூடாது. இந்த ஏற்பாட்டின்மூலம் மிஞ்சும் பணத்தைத் தகுதியுள்ள மாணவர்களுக்கு–அவர்கள் எந்த ஜாதியினராயினும் சரி–வேதங்கள், ஆகமங்கள், தேவாரம் இவற்றைப் போதிப்பதற்காகச் செலவிட வேண்டும். பூஜைகளையும் உத்ஸவங்களையும் சரிவர, பக்தி சிரத்தையோடு நடத்த வேண்டும். ஹிந்து

## அருமைப் புதல்விக்கு

மதத்தை ஒட்டி நடப்பவர்கள் எல்லாம் இவ் வாலயங்களுக்கு வர வசதி இருக்க வேண்டும். மத விவகாரங்களிலெல்லாம் நிர்ப்பந்தம் கூடாது என்பதை ஒப்புக்கொள்கிறேன். நல்ல பிரசாரம் செய்தால் அநேகமாக எல்லா ஹிந்துக்களும் இந்த முக்கிய சீர்திருத்தத்தைச் செய்யச் சம்மதிப்பார்கள் என்றே நம்புகிறேன்.

ஆலயங்களில் பக்தர்களிடையே வித்தியாசம் கூடாது. அதாவது பிராம்மணர், பிராம்மணரல்லாதார் என்பது போன்ற வேற்றுமைகள் கூடாது.

கிறிஸ்துவ மதத்தினரும் முஸ்லிம்களும் தங்கள் தங்கள் மதத்தினரோடு ஒன்றாகச் சேர்ந்து தெய்வ வழிபாடு நடத்துகின்றனர். இவர்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கையில் ஹிந்து மதத்தைச் சேர்ந்த நாம் வெகுவாகப் பின்னணியில் இருப்பதாகவே தோன்றுகிறது. நம்முடைய ஆலயங்களி லெல்லாம் இப்படி நடப்பதில்லை. ஆனால் ஒன்று. தற்காலத்தில் பஜனை கோஷ்டிகள் நடத்தப்படுகின்றன. இது நல்லதுதான். குறைந்தது வாரம் ஒரு முறையாவது நாம் நமது ஆலயங்களில் ஒன்றாகக் கூடிக் கடவுளைத் தரிசிக்க வேண்டும்; பொதுவாக ஒரு பிரார்த்தனை என்று வைத்துக்கொள்ள வேண்டும்; மத விஷயமான ஏதாவது ஓர் உபந்நியாசத்தைச் செய்த பிறகு பகவானுக்கு ஆரத்தி எடுக்க வேண்டும். இதற்கு நாம் ஏதாவது ஓர் ஏற்பாடு செய்ய வேண்டும். இதனால் ஹிந்துக்களிடையே ஒற்றுமை பெருக வேண்டும் என்ற தூண்டுதல் பிறக்கும்; ஜாதித் தடைகள், கட்டுப்பாடுகள் மறையும். ஹிந்துக்கள் தலை நிமிர்ந்து வாழலாம். இன்றைய நிலைமைக்கு இது அத்தியாவசியம். ஹிந்துக்களையும் ஹிந்து மதத்தையும் பிறர் தாக்குவதை அஹிம்ஸா பூர்வமாகவோ பலாத்காரமாகவோ எதிர்த்து நின்று பாதுகாக்க அப்போது முடியும்.

இந்தியாவுக்கு வெளியே ஹிந்து மதத்தின் செய்தியைப் பரப்புவது ஒருபுறம் இருக்கட்டும். நமது அரும்பெரும் ஆசாரியர்களைக்கொண்டு நம் மக்களுக்கே ஹிந்து மதத்தின் சிறந்த உண்

மைத் தத்துவங்களை உபதேசிக்க வேண்டும் என்பது என் அவா. நமது மடாதிபதிகளில் சிலர் இத்துறையில் கொஞ்சம் சேவை செய்து வருகின்றனர். ஆனால் இன்னும் இதைவிட அதிகமாகவும் தொடர்ச்சியான ஏற்பாட்டின்படியும் முக்கிய மாக ஹரிஜனங்களிடையே இதுபற்றிப் பிரசாரம் செய்வது அவசியம். அவர்களும் நம்மைப்போல நல்ல ஹிந்துக்கள்தான். எனவே நாம் அவர்களுக்கு நம்மாலான சேவையைச் செய்ய வேண்டும்.

ஹிந்துக்கள் என்று சொல்லிக்கொள்ளும் நாம் ஒரு கோட்பாட்டை மனத்தில் வைத்துக்கொள்ள வேண்டும்; அதன்படி நடக்கவும் வேண்டும்.

"மரத்தை அது தரும் பழத்தைக் கொண்டே மதிக்க னும்.'

ஹிந்துக்களாகிய நாம் பரிசுத்தமான தூய வாழ்வு வாழ வேண்டும். தர்ம சிந்தையுடனும் சகிப்புத் தன்மையுடனும் இருத்தல் வேண்டும். நமது வாழ்க்கை, சேவை இவற்றின்மூலம் கடவுளிடம் நமக்குள்ள அசையாத பக்தியை நாம் நிரூபிக்க வேண்டும். நமது குழந்தைகளுக்கும் அம்மாதிரியான பழக்கம் படியும்படி செய்ய வேண்டும். இதை எவ்வளவுக்கு எவ்வளவு கவனித்துச் செய்கிறோமோ அந்த அளவுக்கு நாம் ஹிந்து மதத்துக்கு உண்மையான சேவை செய்தவர்களாக ஆவோம்.

ஹிந்து மதத்துக்கு நல்ல எதிர்காலம் இருக்கிறது. ஆனால் அந்த எதிர்காலம் இந்தத் தலைமுறையைச் சேர்ந்தவர்களையும் வருங்காலத் தலைமுறையைச் சேர்ந்தவர்களையும் பொறுத்தே இருக்கிறது. அவர்கள் சமயத்துக்கு அநுசரணையாகக் கடமைகளைச் செய்வார்கள் என்று நம்புகிறேன்.

13-6-'51

# நாடகம்

**என் அன்புள்ள**
**லக்ஷ்மிக்கு,**

கடவுள், மதம் இரண்டையும்பற்றி உனக்கு எழுதியிருந்தேன். இப்போது எழுதுவது நாடகத்தைப்பற்றி. வெகு கடுமையாகவும் தீவிரமாகவும் உள்ள விஷயங்களைப்பற்றி எழுதிய கையோடு சற்றுச் சில்லறையாக உள்ள விஷயத்தைக் குறித்தும் எழுதுகிறேன். இது மாறுதலை உத்தேசித்து.

நாடகத்துக்கும், தெய்வம், ஆலயம் இவற்றிற்கும் சம்பந்தம் உண்டு. தஞ்சாவூரில் இன்றுகூட ஸ்ரீ பிருஹதீசுவரர் ஆலயத்தில் பிரதி வருஷமும் அவ்வூரைச் சேர்ந்த தாசிகள் ஒரு நாடகத்தை நடிக்கின்றனர்.

வாழ்க்கை பலதரப்பட்டதாக இருக்கிறது. நமது சகோதர சகோதரிகள் ருசி இல்லாமலும், சோர்வு உள்ள இடங்களிலும் வசிக்கிறார்கள். சூழ்நிலை சரி இல்லாததால், நாடக மேடைமீது வாழ்க்கையின் அம்சங்களைத் தத்ரூபமாக நடித்துக் காட்டுவதைப் பார்த்துச் சந்தோஷிக்க அவர்கள் எண்ணு

பூர்விக இந்தியாவிலும் கிரீஸிலும் இடைக்காலத்தில் இங்கிலாந்து, ஐரோப்பா ஆகிய இடங்களிலும் நாடகங்கள் பிரசித்தமாக விளங்கின. அப்போது அவை எல்லாம் மதம், புராணம், அல்லது சரித்திரம் இவற்றைத் தழுவியனவாக இருக்கும்.

அந்தக் காலத்தில் நாடகங்கள் எல்லாம் வெட்ட வெளியிலே நடைபெறும். அனைவரும் இலவசமாகப் போய்ப் பார்க்கலாம். சிலருக்கு மட்டும் விசேஷமாக அங்கே ஆசனங்கள்

போடப்பட்டிருக்கும். நாடகம் வெகு நேரம் வரையில் நடக்கும். சில சமயத்தில் இரவு பூராவுமே நடப்பதும் உண்டு.

தென்னிந்தியாவில்கூடப் பாரேன், இப்போதுங்கூட 'மார்க்கண்டேயர்', 'ஹரிச்சந்திரா' போன்ற கதைகள் தெருக்கூத்துகளாக நடக்கின்றன. நாடகம் ராத்திரி 10 மணிக்கு ஆரம்பமாகும். விடிய விடிய நடக்கும். காலை 6 மணிக்குத்தான் முடியும். நடிப்பு, காட்சிகள், உடுப்பு இவை எல்லாம் அவற்றில் வெகு எளிய முறையில் இருக்கும். நாகரிகமாகவும் இராது. சிற்சில சந்தர்ப்பங்களில் இந்த நாடகங்களில் பாட்டுகளும் நடிப்பும் தரமாக இருக்கின்றன.

நமது நாட்டு நாடகங்கள் ஒருபுறம் இருக்கட்டும். கிரேக்க நாட்டு நாடகங்கள் மிக்க உயர்தரம் ஆனவை. அவற்றில் சில படிப்பதற்கு அற்புதமாக இருக்கின்றன. ரஷ்ய தேசத்து நாடகம் நன்றாக இருக்குமாம்; ஜர்மன் நாடகமான, 'பாஸ்ட்' என்பதும் அப்படியேதானாம். ஆனால் இவைபற்றி எனக்கு எதுவும் தெரியாது. ஆங்கில நாடகங்களுக்குள் வெகு பிரபல்யமானவை ஷேக்ஸ்பியர் எழுதியவைதாம். சில நாடகங்களை நடித்தால்தான் நன்றாக அநுபவிக்க முடியும். இன்னும் சிலவற்றைப் படிக்கும் போதுதான் நன்கு ரஸிக்க முடியும். ஆனால் ஷேக்ஸ்பியர் எழுதியவைகளை எல்லாம் படித்தாலும் சரி, நடித்தாலும் சரி, வெகு ஆனந்தமாக இருக்கும் இதேபோலத்தான் ஸம்ஸ்கிருதத்தில் காளிதாஸன் எழுதிய நாடகங்களும். ஷேக்ஸ்பியர், நாடகங்களை எழுதியதோடு மட்டும் அல்ல; நாடகமேடையில் தீவிரமாகப் பங்கும் எடுத்துக்கொண்டார். அதனால்தான் அவரது நாடகங்கள் அதி அற்புதமாக இருக்கின்றன.

இங்கிலாந்திலே தற்போதைய நாடகங்கள் ஒரு கதம்பம் மாதிரி இருக்கின்றன. தற்காலத் தீவிரப் பிரச்னைகள் சம்பந்தமாக வெகு திறம்பட்ட முறையில் உள்ள நாடகங்கள் சில கின்றன. இன்னும் சில அம்மாதிரி இல்லாமலும் இதுபோன்ற நாடகங்கள் ஒன்று காதல் ரஸம் பொருந்தியனவாக

இருக்கின்றன; அல்லது மட்டமான ஹாஸ்ய உணர்ச்சி கொண்டவையாகவும் அமைந்திருக்கின்றன.

காளிதாஸனைத் தவிர இன்னும் பல பிரபல சம்ஸ்கிருத நாடக ஆசிரியர்களும் உண்டு. பவபூதி, பாஸன் போன்ற சிறந்த நாடக ஆசிரியர்கள் இருந்திருக்கின்றனர். ஸம்ஸ்கிருதத்தில் பல பெரிய நாடகங்கள் இருக்கின்றன. தற்காலச் சமூகப் பிரச்னைகள் தவிர, சகல விஷயங்களைப்பற்றியும் அந்த நாடகங்கள் கூறுகின்றன. ஏன்? தற்காலச் சமூகப் பிரச்னைகளைப்பற்றி அவற்றில் பிரஸ்தாபம் இல்லையென்றால், காரணம் வெளிப்படை. முழுக்க முழுக்க ஹாஸ்யமான நாடகங்கள் உட்படப் பல நாடகங்கள் ஸம்ஸ்கிருதத்தில் உண்டு. இலக்கியத் துறையில் ஸம்ஸ்கிருத நாடகங்கள் மிக்க உயர்வான நிலையில் இருந்தன. மிக்க கண்ணியமான, நாகரிகமான முறையில் சிருங்கார ரஸத்தைப்பற்றி, அவற்றில் எழுதப்பெற்றிருக்கின்றன. எனவே மிக உன்னதமான இலக்கியமாக அவை திகழ்கின்றன. எனக்குத் தெரிந்தவரை புராதனத் தமிழ் இலக்கியம் எந்த நாடகத்தையும் நமக்குச் செய்து வைத்திருப்பதாகத் தெரியவில்லை.

சென்ற 50 ஆண்டுகளாக நம் நாட்டில் நாடகம் நிலைபெற்று வந்திருக்கிறது. ஹிந்தி, உருது, தமிழ், தெலுங்கு, வங்காளி, மராத்தி ஆகிய பாஷைகளில் அநேகம் சிறந்த நாடகங்கள் எழுதப் பட்டிருக்கின்றன. இவற்றில் சில வெகு உயர்தரமாக இருக்கின்றன. இந்த நாடகங்களில் பல நாடெங்கும் நடிக்கப்பட்டிருக்கின்றன. இன்னும் நடிக்கவும் நடிக்கின்றனர். பலர் அவற்றைப் பார்த்து ஆனந்திக்கின்றனர். இதிகாசங்கள், புராணங்கள் முதலியவற்றிலிருந்து பக்தி நிறைந்த கட்டங்கள் நாடகங்களாக நடிக்கப்படுகின்றன. இன்னும் சில நாடகங்களுக்கு இந்திய தேச சரித்திர சம்பவங்கள் நாடகக் கட்டிடங்களாக அமைக்கப்பட்டிருக்கின்றன. தற்காலச் சமூகப் பிரச்னைகளைக் குறித்த நாடக்ங்கள் சொற்பம். நமக்காக நாம் ஒரு நாடக

பாணியை வைத்துக்கொண்டு அதை அபிவிருத்தி செய்து வருகிறோம்.

காலஞ்சென்ற பெல்லாரி ஸ்ரீ கிருஷ்ணமாச்சார்லு தெலுங்கில் பல நாடகங்கள் எழுதியுள்ளார். அதேபோல் என் நண்பர் ஸ்ரீ பி. சம்பந்த முதலியார் தமிழில் நாடகங்கள் பல எழுதியிருக்கிறார். அவை நடிக்கப்படுகின்றன. இத்துறையில் அவர்கள் மகத்தான சேவை செய்திருக்கின்றனர். ஆனால் அவர்கள் எழுதிய நாடகங்களில் பெரும்பான்மையும் மத சம்பந்தமானவை, புராணத்தைப்பற்றியவை, அல்லது காதல் ரஸமுள்ளவைகளாக இருக்கின்றன. தற்கால வாழ்க்கையைப்பற்றியோ நிலைமைகளைக் குறிப்பதாகவோ அந் நாடகங்கள் அமையவில்லை. மேலே சொன்ன நாடகங்கள் சிறந்தவை என்றாலும் அவை குறிப்பிட்ட ஒரு துறையில்தான் என்று சொல்ல வேண்டும்.

தற்கால வாழ்க்கையையும் நிலைமைகளையும் சித்திரித்துக் காட்டும்படி முக்கியமான பாஷைகளில் இந்திய நாடகங்கள் இன்னும் உருப்பெறவில்லை. தற்கால இந்தியாவில், சிக்கல்கள் மலிந்துள்ள வாழ்க்கைப் பிரச்னைகளைப் பற்றியெல்லாம் சில நாடக ஆசிரியர்கள் நாடகங்கள் எழுதலாம். இதன்மூலம் அவர்கள் மக்களுக்கு மகிழ்ச்சி தருவதுடன் இந்தியாவுக்குப் போதனை செய்வதாகவும் இருக்கும்.

இதைப்பற்றி அடுத்த கடிதத்தில் இன்னும் எழுதுகிறேன்.

14-6-'41.

நாடகத்தின் சரித்திர பூர்வமான அம்சம் குறித்தும், தற்கால இந்திய நாடகம்பற்றியும் சென்ற கடிதத்தில் உனக்கு எழுதியிருந்தேன். அதில் சில நாடக ஆசிரியர்களைப்பற்றியும் பிரஸ்தாபித்திருந்தேன். இந்திய நாடக மறுமலர்ச்சிக்காக டாக்டர் ரவீந்திரநாத் தாகுர் செய்திருக்கும் மகத்தான சேவையை இங்கே

குறிப்பிட விரும்புகிறேன். ரவீந்திரர் பெரிய கவி; நாடக ஆசிரியர்; அவரே பிரபல நடிகருங்கூட. கல்விக்கும் கலா நாகரிகத்துக்கும் உறைவிடமாக விளங்கும் சாந்தி நிகேதனத்தின் ஸ்தாபகரும் அவர்தான். தற்கால வங்காளி நாடகம் சீரான முறையில் அபிவிருத்தி அடைவதற்காக அவர் செய்திருக்கும் தொண்டு கொஞ்ச நஞ்சம் அல்ல.

நாடகத்தை மேடைமீது நடிப்பதன்மூலமே நன்கு சித்திரித்துக் காட்ட முடியும் என்பது உனக்குத் தெரிந்த விஷயம். நடிப்புத் தவிர, மேடை, காட்சிகள், விளக்குகளைப் பொருத்தும் வேலை, உடை, வேஷம், நாடகசாலையின் அமைப்பு, பின்னணிச் சங்கீதம் முதலிய எல்லாம் ஐரோப்பாவிலும் அமெரிக்காவிலும் அநேகமாகச் செவ்வையான நிலைமையில் வைக்கப்பட்டிருக்கின்றன. இவைகளெல்லாம் யுத்த கோரத்திலிருந்து தப்பி, மிஞ்சி நிலை பெற்றிருக்கும் என நம்புகிறேன் இந்தியாவில் இது விஷயமாக நாம் நிறையச் செய்ய வேண்டி இருக்கிறது.

கல்கத்தா, பம்பாய் ஆகிய இடங்களில் நவீன முறையில் சில தியேட்டர்கள் இருக்கின்றன. மற்றப்படி நமது இதர தியேட்டர்களெல்லாம் போதிய இட வசதியுள்ள பிரதேசத்தில் இல்லை. காற்றோட்ட சாதனத்துடன் கூடியனவாகவும் இல்லை. தியேட்டர்களுக்குள்ளே இட வசதி ஏற்பாடுகள் திருப்திகரமாக இல்லை. சுகாதாரத்துக்காகச் செய்யப்பட்டிருக்கும் ஏற்பாடுகளோ நவீன முறைப்படி இல்லை. ஜோடனைகள் எல்லாம் அநேகமாகக் கலை அழகுடன் அமைவதில்லை. நாடகங்களுக்கு உகந்த முறையில் அவைகள் இருப்பதில்லை. பார்க்கப்போனால் அந்த ஜோடனைகள் எல்லாம் சரியான முறையில் நாடகத்தைச் சித்திரித்துக் காட்ட ஒட்டாமல் தடையாகவே இருக்கின்றன.

நமது நடிகர், நடிகைகள் தரித்துக்கொள்ளும் உடைகளைப் பற்றியோ சொல்ல வேண்டியதில்லை. இந்த விஷயத்தில் சரியான முறையைப் பின்பற்றியோ சரித்திரத்தை ஒட்டியோ கவனம் செலுத்தப்படவில்லை. கண்ணியமான முறையில் உடுப்பதும்

இல்லை. நாடகங்களைச் செவ்வனே நடித்துக் காட்டுவதற்கு இவைகளெல்லாம் அத்தியாவசியமானவை என்று நினைக்காவிட்டாலும் அவை வெகு முக்கியமான விஷயங்கள் என்பதை நீ ஒப்புக்கொள்ளவே வேண்டும். நாடகத்தில், பின்னணி ஜோடனை மிக முக்கியமானது. நாடகத்தைப்பற்றிய உணர்ச்சியும் பிரேமையும் பார்ப்பவர்கள் மனத்தில் குடிகொள்ளும்படி செய்ய வேண்டுமானால், நடிக, நடிகைகள் திறம்பட நடிப்பது மட்டும் அன்றி, ஜோடனைகளையும் உதவியாக இருக்கும்படி அமைக்க வேண்டும். நடிக, நடிகைகள் சமயத்துக்கு ஏற்றபடி நல்ல மாதிரியில் உடுப்புகள் தரிக்க வேண்டும்.

சரித்திர சம்பந்தமாக உள்ள நாடகங்களை நடிக்க நேருவதாக வைத்துக்கொள்வோம். எந்தக் காலத்தில் அந்தச் சரித்திர சம்பவம் நிகழ்ந்தது என்பதை நன்கு பரிசீலனை செய்ய வேண்டும். அத்துடன் அந்தக் காலத்தில் எந்த விதமான உடுப்பு உபயோகத்தில் இருந்தது என்பதையும் கவனிக்க வேண்டும். இதை அநுசரித்து நாடக பாத்திரங்களுக்கு வேஷம் அமைத்து, உடுப்புகளைத் தயாரிக்கும்படி செய்ய வேண்டும். புராண சம்பந்தமான நாடகம் நடிக்க வேண்டுமானால், ரவிவர்மா தமது படங்களை வர்ணம் தீட்டுகையில் கவனித்துச் செய்வதைப்போல நாம் ஏதாவது ஒரு சம்பிரதாயத்தை ஒட்டிச் செய்ய வேண்டும். தற்கால இந்திய நாடகங்களைப்பற்றிய மட்டும் வேஷம் புனைவதற்கு உடைபற்றிய வேலை சுலபம் ஆயினும் இவ் விஷயத்திலும் போதிய கவனம் செலுத்தப்படவில்லை. நாடக மேடைமீது தீபங்களை அமைப்பது வெகு முக்கியமான அம்சம். நாடகசாலையில், மேடைமீது மட்டும் வெளிச்சம் தெரியும்படி செய்து, சபையில் விளக்கில்லாமல் செய்தால், நடிப்பின் திறமையை உயர்வாகக் காட்டலாம். இது சுலபமான ஒரு யுக்தி. நமது தியேட்டர்கள் பலவற்றில் இம்முறை அநுஷ்டிக்கப்படவில்லை. மேடைமீதுள்ள விளக்குகளை திறமையான முறையில் எரியவிட்டோ அணையும்படி செய்தோ நாடகக் கட்டங்களுக்கு ஏற்ப ஏற்பாடுகளைச் செய்தால், மிகவும் அபூர்வமான சோபை ஏற்

படும்படி செய்யலாம்; இது பிரமிப்புத் தட்டும் வண்ணம் இருக்கும்.

பொருத்தமான நடிக நடிகைகளைப் பொறுக்குவது சுலபமான காரியம் அல்ல. நான் ஒரு நடிகனாக இருந்திருக்கிறேன். எனவே இதிலுள்ள கஷ்டத்தைப் போதியபடி நான் உணர்ந்திருக்கிறேன். அத்தோடு நடிப்பிலுள்ள கவர்ச்சி மிகுந்த தன்மையையும் அறிவேன். நீகூட உன் பள்ளிக்கூட நாடகத்தில் நடித்திருக்கிறாய். ஸெயின்ட் தாமஸ் கான்வென்டில் நடந்த நாடகத்தில் நாட்டுப்புறத்து ஸ்பானியப் பெண் வேஷத்தில் உன்னை நான் பார்த்திருப்பதாக ஞாபகம். முதலில் உன்னை எனக்கு அடையாளமே தெரியவில்லை. பிறகுதான் உன் அம்மா எனக்குச் சொன்னாள். நடிப்பது வெகு சிரமமான காரியம்; ஏனெனில், உன்னுடைய சொந்த உணர்ச்சிகளையெல்லாம் அடக்கிக்கொண்டு நாடக பாத்திரத்துக்குள்ள உணர்ச்சியைப் பெருக்கிக்கொள்ள வேண்டி இருக்கிறது. ஆனால், இது கட்டுக்கடங்காத நிலைமையிலும் போய்விடக் கூடாது. இயற்கையைத் தத்ரூபமாகப் படம் பிடித்துக் காட்டுவதல்ல நடிப்பு. இயற்கையுடன் கலாரஸ உணர்ச்சியும் கூடி இருக்க வேண்டும். சபையில் இருப்பவர்கள் நீ ஏற்றிருக்கும் பாத்திரம் உனக்குப் பொருத்தம் என்று நம்பிக்கை கொள்ளும்படி இருக்க வேண்டும். இதில் அதிக கவனம் செலுத்துவது அவசியம். இன்று நம் நாட்டில் இந்த விஷயம் சீரான முறையில் கவனிக்கப்படவில்லை. நம் நாட்டிலே நடிப்பதற்குப் பயிற்சி அளிக்க நல்ல பாடசாலைகள் ஏற்பட வேண்டும்.

இதைப்பற்றிச் சொல்லும்போது இன்னொரு விஷயம் எனக்குத் தோன்றுகிறது. பெண்கள் வேஷத்தை ஆண்கள் ஏற்றுக்கொள்கிறார்கள். ஆண்கள் வேஷத்தைப் பெண்கள் ஏற்றுக்கொள்ளுகின்றனர். இதில் விலக்குகள் உண்டு என்றாலும், இது இயற்கைக்கு விரோதமாக இருப்பதால் இம்முறை மறைய வேண்டும். ஆண்கள், ஆண்களின் பாகத்தையே ஏற்று

**தப்புந பலவே!'** என்று கூறியுள்ளார். ஒரு மனிதன் தானுகப் பாடுபட்டு உழைத்துப் பெற்ற பொருளை எளிதில் ஈந்துவிட விரும்ப மாட்டான். ஆனுல், இந்தப் பற்று உள்ளமே அவனுக்குப் பெருந்தீங்காகப் பின்னர் விளையப் போகிறது. மனிதனைப் பற்றிய தன்னலப் பேய் ஒழிய, விருந்தோம்பல் முதற் படி ஆகும். அதிலும், வேளாண்மை செய்பவன் பிறருக்குச் சோறு கொடுத்தலை ஒரு பெரும்பாரமாகக் கருதமாட்டான். எனவே, விருந்தோம்பலின் மூலமே அவனுக்குப் பரந்த மனப்பான்மை வருமாறு செய்யலாம்.

**புதிய காரணம்**

விருந்தோம்பலை இவ்வளவு அழுத்தமாக வள்ளுவர் கூறுவதற்குப் பிறிது ஓர் காரணமும் இருக்கலாமோ என ஐயுற வேண்டி உளது. இன்றுங் கூடத் தமிழ் நாடு உணவு நிலைமையில் 'சுயதேவை' அளவுக்குக் குறைவாகவே உற்பத்தி செய்யக்கூடிய நிலைமையில் உள்ளது. இன்றைய நிலைமையே இவ்வாறு என்றுல், இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் இந்நிலை இன்னும் மோசமாகத்தானே இருந்திருக்கும்? இன்றுள்ள அளவு கூட அன்று விளை நிலங்கள் பண்படுத்தப்பெற்றுப் பயன் தந்திருக்க முடியாது. இன்று தமிழ்ச் சமுதாயம் பெருகியுள்ள அளவு தமிழ் மக்கள் கூட்டம் அன்று இல்லாமல் இருந்திருக்கலாம். எனவே, உணவு நெருக்கடியும் இவ்வளவு இல்லாமல் இருந்திருக்கலாமெனில், விளை நிலங்களும் குறைவாகவே இருந்திருத்தல் வேண்டும். மேலும், தமிழ் மக்கள் இடையே ஓயாது போர் ஏற்பட்டு வந்தமையின், அமைதியாக இருக்கும் காலத்தில் மட்டுமே அதிகமான வேளாண்மை

## அருமைப் புதல்விக்கு

பேசும் படங்கள் வந்துவிட்டனவே! இந்திய நாடகங்களுக்கு எதிர்காலம் உண்டா? இவைபற்றி என் அடுத்த கடிதத்தில் எழுதுகிறேன்.

15-6-'41.

அன்றும் இருந்த உணவுப் பஞ்சத்திற்கு அறி குறியோ என நினைய வேண்டி உளது. இத்தகைய சூழ்நிலையில் பாட வந்த ஆசிரியர், விருந்தோம்பலை மிகுதிபடுத்திக் கூறியது சாலப் பொருத்தம் உடையதே.

சூழ்நிலை நாட்டில் இவ்வாறு இருந்தமையின் விருந்து இடுபவர் தம்மைப் பெரியராக நினைத்துக் கொண்டு, விருந்ினரை மட்டமாக நினைக்கவும் இடம் உண்டு அன்றோ? அனைவரும் இவ்வளவு மோசமாய் இராவிடினும், ஒரு சிலராவது இத்தவற்றைச் செய்தல் இயல்பேயன்றோ? இது கருதியே ஆசிரியர்,

> 'மோப்பக் குழையும் அனிச்சம்; முகந்திரிந்து
> நோக்கக் குழையும் விருந்து.'

என்று கூறுவாராயினர். விருந்திடுபவர் தாம் செய்வதை ஏதோ பெரிய உபகாரமாக நினையாமல், கடமையைச் செய்வதாகவே நினைக்க வேண்டும். அதிலும், மகிழ்ச்சியோடு கடமையைச் செய்வது எவ்வளவு சிறப்புடையது! வெறுஞ் சோற்றை இட்டு, இன்முகம் காட்டவில்லையாயின், இட்டும் பயன் இல்லையாய்விடும். எனவே, இன்முகம் காட்டலே விருந்திடுவதினும் இன்றியமையாதது என அறிவுறுத்துகிறார் ஆசிரியர். விருந்தோம்பல் இல்லறத்தானுக்கு இன்றியமையாத கடமை என்றால், இன்முகங்காட்டி விருந்தினரை உபசரித்தல் அவ்விருந்து இடுதலினும் தலையாய கடமையாகும். அன்றைய தமிழர்களுக்கு வள்ளுவப் பெருந்தகை கூறிய இப்பொன்மொழிகள் இன்றைய தமிழ் நாட்டிற்கும் எவ்வளவு தேவை என்பதை உன்னிப் பார்ப்போமாக.

பதாக இருக்கும் நாடகங்களைவிடப் பேசும் படத்துக்குப் பூர்வாங்கமாகச் சில அநுகூலங்கள் இருக்கின்றன; உண்மைதான். பேசும் படம் தயாரிக்கையில் ஒரே காட்சியைத் திரும்பத் திரும்ப எவ்வளவு முறை வேண்டுமானாலும் நடிக்கலாம். அது மிகத் தரமாக இருக்கும்போது படம் எடுத்துக் காட்ட முடிகிறது. இதை ஒரே தரம் படம் எடுத்தால் போதும். அதையே பல வருஷங்கள்வரை காட்டலாம். அதி அற்புதமான தோற்றங்களை யெல்லாம் படத்திலே சிருஷ்டிக்க முடியும். நல்ல சாரீரம் இல்லாதவர்களிடமிருந்துகூடப் பலரை வசீகரிக்கும்படியான கானம் வெளிவரச் செய்ய முடியும்.

இவை எல்லாம் இருந்தாலும் ஒரு நல்ல நாடகத்தை நன்கு நடித்தால் அதில் ரசிகர்களுக்குள்ள ஆனந்தம் தனியாகத்தான் இருக்கும். நாடகங்களில் கதைகளுக்கும் கட்டங்களுக்கும் வேண்டிய விஷயத்தை நமது நாடகாசிரியர்கள், புராணங்களி லிருந்து பொறுக்குகின்றனர். ராமாயணம், மஹாபாரதம் இவற்றை அவர்கள் அதிகமாகப் பயன்படுத்திக்கொள்ளவில்லை. நன்கு தெரிந்த சில கட்டங்களை மட்டும் அவற்றிலிருந்து அவர்கள் எடுத்துக்கொள்கின்றனர். அநேகமாக அவை மட்டமான முறை யிலேயே பயன்படுத்தப்பட்டிருக்கின்றன. நாம் இருவரும் எப்போ தாவது ஒரு தடவை ராமாயணத்தையும் மகா பாரதத்தையும் சேர்ந்தாற்போல் பார்க்கலாம். நமது ஜனங்களுக்கு மிகவும் உணர்ச்சி உண்டாக்கக் கூடிய அற்புதமான கட்டங்கள் அவற்றில் இருப்பதை நிகவனிக்கலாம். இதேபோல் தமிழிலும் இதர இலக்கி யங்களிலும் இதுவரை பயன்படுத்திக்கொள்ளாமல் விடுபட்டுப் போன கட்டங்கள் பல இருக்கின்றன.

நமது தேச சரித்திரத்திலே வடக்கு, தெற்கு, கிழக்கு, மேற்கு திக்குகளில் ஹிந்து, முஸ்லிம், ரஜபுத்திரர், சீக்கியர், மஹாராஷ்டிரர், சேர சோழ பாண்டியர் இவர்களது வாழ்க்கைக் காலத்தில் இந்தி யரின் கௌரவம், வீரம், தியாகம் முதலிய அம்சங்கள் நிறைந்த சம்பவங்கள் குறைவில்லாமல் நடந்திருக்கின்றன. இவற்றை அடிப்படையாகக் கொண்டு நெஞ்சை அள்ளும் நாடகங்களைத்

தயாரிக்கலாம், 'ராஜஸ்தானத்தின் சரித்திரம்' -டாட் எழுதியது- என்ற புத்தகத்தில் அநேகம் நாடகங்களைத் தயாரிக்க இடம் இருக்கின்றது.

கடைசியாக ஒரு விஷயம். நமது தற்கால இந்தியாவில் நெருக்கடியான நிலைமைகள், சிக்கல் மலிந்த பிரச்னைகள், முரண்பட்ட உணர்ச்சிகள், திகைக்க வைக்கும் பிரச்னைகள், அரசியல் பொருளாதாரப் பிரச்னைகள் ஆகியவை நிறைந்திருக்கின்றன. நாடகம் எழுதும் திறமை படைத்த யாராவது ஒருவர் முற்றும் பாஷத்தில் இவற்றை ஆதாரமாகக் கொண்டு நாடகங்களை எழுதிவிடலாம். நல்ல பாஷையில் நடுத்தரமான நடையில் இவற்றை நாடகமாக அமைத்தால் அது நமது நாட்டில் நல்ல மாதிரியான நாடக அபிவிருத்திக்கு அஸ்திவாரம் போட்டதுபோல் இருக்கும்.

நல்ல நடிகர்களுக்கும் நடிகைகளுக்கும் நாம் பயிற்சி அளிக்க வேண்டும். அவர்கள் நாடகத்தில் மட்டுமே நடிக்க வேண்டும். பேசும் படங்களில் நடிப்பதற்கு அவர்கள் இசையக் கூடாது. மறுத்துவிட வேண்டும். உயர்ந்த விதமான உணர்ச்சியும், அதைத் தெரிவிக்கும் சக்தியும் நம்மவர்களுக்கு உண்டு. அப்படி இருக்கையில் இதர நாட்டினரைவிட மிகப் பெரிய நடிகர்களை நாம் ஏன் தயாரிக்கக் கூடாது?

நாடகத் தயாரிப்புப்பற்றி நான் போன கடிதத்தில் சில பிரச்னைகளைக் குறிப்பிட்டிருந்தேன் அல்லவா? அவற்றைத் தீர்த்துவிட்டால் நாம் நம் நாட்டிலே முதல்தரமான நாடகங்களுக்கு அடிகோலிவிடலாம். இவ்விஷயத்தில் எனக்கு அதிகச் சிரத்தை இருக்கிறது. இதை முக்கியமாகவும் கருதுகிறேன் பேசும் படம், ரேடியோ இவற்றைவிட ஜனங்களுக்கு நேர்மையான கல்வி பயிற்சியைப் புகட்ட நாடகம் சிறந்த மார்க்கம். நாடகத்துக்குப் பணபலம் வேண்டும். எனவே இதற்கு ஜனங்கள் ஆதரவு அவசியம்.

இதர கலைகளில் செய்வதுபோலவே நாடகம் சம்பந்தப்பட்டவரையிலும் வருஷத்திற்கு ஒருமுறை பெரிய நாடகங்களை வெட்ட

## அருமைப் புதல்விக்கு

வெளியில் நடித்துக் காட்ட வேண்டும். ஒலிபெருக்கும் கருவியின் உதவி இதில் அமைய வேண்டும்; எல்லோரையும் இதற்கு இலவசமாக அநுமதிக்க வேண்டும். இதன் மூலம் கலைக்குப் பொதுஜன ஆதரவு பெருக வழி உண்டு. நாடகம் நம் நாட்டில் செழித்துத் தழைப்பதாகுக!

16-6-'41.

# சங்கீதம்

என் அன்புள்ள
லீக்ஷ்மிக்கு,

அநாகரிகமாகவும் கொடிய சித்தமுள்ளவர்களாகவும் இருப்பவர்களது மனத்தைக்கூடக் கவரும் சக்தி சங்கிதத்துக்கு உண்டு என்பது கவிஞனின் வாக்கு. இது உண்மைதான். அந்த வசீகரத் தன்மை சங்கிதத்துக்கு இருக்கத்தான் இருக்கிறது. படித்தவர்கள், பாமரர்கள், ஏழைகள், பணக்காரர்கள், பட்டண வாசி, கிராம வாசி, ஸ்திரீகள், புருஷர்கள், குழந்தைகள், ஏன்? மிருகங்களைக்கூட வசீகரிக்கக் கூடிய சக்தி கானத்துக்கு இருக்கிறது. ஸம்ஸ்கிருத கவி சங்கீதத்தைப்பற்றிப் பின்வருமாறு தெரிவிக்கிறார்:

'पशुर्वेत्ति शिशुर्वेत्ति वेत्ति गानरसं फणी'

மிருகங்கள், சிசுக்கள், பாம்புகள் ஆகியவற்றிற்குச் சங்கீதத்தின் அழகு தெரியும் என்பது இதன் அர்த்தம்.

கடவுள், தேவதைகள் இவர்களுடன் சங்கீதம் நெருங்கிய சம்பந்தம் கொண்டிருப்பதாக ஹிந்துக்களாகிய நாம் கருதுகிறோம். கண்ண பெருமான் வேணுகானத்தில் ஒப்புயர்வின்றி விளங்கினான். கலைமகள் வீணையிலே கானம் பயின்றாள். ஸ்ரீ நடராஜமூர்த்தி நடனம் புரிகிறார். ரிஷிகளில் மிகச் சிரேஷ்டரான நாரதர் சங்கீதத்தில் விற்பன்னர். சங்கீதத்தை உபாஸனை செய்வது என்பது நமது மதத்தில் சாதாரணமான ஒரு ஐதிகம் நமது கோயில்களிலெல்லாம் சங்கீதத்துக்கு விசேஷமாக இடம் அளிக்கப்பட்டுளது. சங்கீதத்தில் விசேஷமான அம்சம் இருக்கிறது. பாடுபவருக்கு அது திருப்தி தருகிறது; ரசிப்பவர்களுக்கும் ஆனந்தம் ஏற்படுகிறது. சங்கீதத்தால் யாருக்கும் ஹிம்ஸை கிடையாது. நம்மையோ அன்றிப் பிறரையோ மகிழ்விக்கச் செய்ய வேண்டுமென்று முற்படும்போது

# அருமைப் புதல்விக்கு

இக் கடிதத்தில் பொதுவாக நடக்கும் சங்கீதக் கச்சேரிகளைப் பற்றியே சொல்லுகிறேன். ஆனால் ஒவ்வொரு குடும்பத்திலும் நல்ல சங்கீதம் பெருக வேண்டும் என்பது என் லட்சியம். சமீப காலம் வரையில் இதுபோலத்தான் நம் நாட்டில் சங்கீதம் பெருகி வந்தது. பணக்காரர்கள் வீடு, நடுத்தர அந்தஸ்துள்ளவர்களின் குடும்பம், ஏன்? ஏழைகளின் வீடுகளில்கூடப் பெண்களுக்குப் பாடத் தெரியும்; நன்றாகவும் பாடினார்கள். வெகு நாளைக்கு முன்னால் நான் சில கல்யாணங்களுக்குப் போயிருக்கிறேன. அங்கே வித்வான்களைக் கொண்டு கச்சேரிகள் வைக்கவில்லை. ஆனால் அவ்விடங்களில் இனிமையான சாரீரத்துடன் கூடிய ஸ்திரீகள் வெகு அழகான பாட்டுக்களைப் பாடினார்கள். இது எனக்கு நினைவிருக்கிறது. நம் சாரீரத்தை நன்கு சாதகம் செய்து பண்படுத்தலாம். நமது குடும்பங்களி லெல்லாம் சில பெண்க ளாவது நன்றாகப் பாடும் பட்சத்தில் நம்முடைய மந்தமான வாழ்க்கையில் எப்பேர்ப்பட்ட மாறுதலைச் செய்யலாம் தெரியுமா? நீ இதற்கு ஓர் உதாரணமாக இருக்க வேண்டும்.

17-6-'41.

# சங்கீதக் கச்சேரிகள்

**என் அன்புள்ள**
**லக்ஷ்மிக்கு,**

**பொ**துவாக எல்லோரும் வந்து, கேட்டு, ஆனந்திக்கும் சங்கீதக் கச்சேரிகளைப்பற்றி இந்தக் கடிதத்தில் உனக்குச் சில விஷயங்களைச் சொல்லப்போகிறேன். ரேடியோ மிகவும் முக்கிய மானது. இன்று இது வெகு பிராபல்யம் அடைந்திருக்கிறது. உலகத்தில் அநேகம் நாடுகளிலுள்ள ரேடியோ நிலையங்கள் சங்கீதக் கச்சேரிகளை ஒலிபரப்புகின்றன. பல்லாயிரக் கணக்கானவர்கள் சொந்தமாக ரேடியோ ஸெட்டுக்களை வைத்துக்கொண்டு கேட் கிறார்கள். சிலர் பொதுவில் அமைக்கப்பட்டுள்ள ஸெட்டுகளில் கேட்கிறார்கள். நமது நாட்டில் சுமார் ஒரு டஜன் ரேடியோ ஸ்டேஷன்கள் இருக்கின்றன. இதர விஷயங்கள் ஒலிபரப்பப் படுவதுடன், சங்கீதமும் இவற்றின்மூலம் தினசரி ஒலிபரப்பப் படுகிறது.

நமது நாடோ பெரிது; இதர விஷயங்களைப்போலவே சங்கீதத்திலுள்ள ருசியும், குறுகிய மனோபாவத்தால் வேறுபட் டிருக்கிறது. எனவே, நாம் நமது பிராந்திய ரேடியோ நிலைய நிகழ்ச்சிகளுக்கு மட்டுமே செவிசாய்க்கிறோம். ஆனால் நாம் இந் தியாவிலுள்ள ரேடியோ நிலையங்களில் ஒலிபரப்பும் இந்திய சங்கீ தத்தையாவது கேட்டு ஆனந்திக்க முற்பட வேண்டும். பார்க்கப் போனால் ஹிந்துஸ்தானி சங்கீதத்துக்கும் கர்நாடக சங்கீதத்துக்கும் அநேக அம்சங்களில் ஒற்றுமை இருக்கிறது. கொஞ்ச காலத்துக்கு முன்னால் அகில இந்திய ரேடியோ நிலையத்தார் அபிப்பிராயம் திரட்டுவதற்காக ஒரு வினாப் பத்திரத்தைத் தயாரித்து அனுப்பியிருந் தனர். அதில் இந்திய சங்கீதத்தைக் கூடுமானவரை ஒருமைப் படுத்தும் விஷயமும் சேர்ந்திருந்தது. இந்தத் துறையில் அகில

# அருமைப் புதல்விக்கு

இந்திய ரேடியோவுக்கு நல்லதொரு சந்தர்ப்பம் வாய்த்திருப்பதாக நான் கருதுகிறேன். ரேடியோ நிர்வாகிகள் இதைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். மேலே சொன்ன விஞ்ஞாபனப் பத்திரத்துக்கு நான் பதில் சொன்னேன். அதனால் நல்ல பலன் கிட்டுமென்று நம்புகிறேன்.

மொத்தத்தில் அகில இந்திய ரேடியோவில் ஒலிபரப்பப்படும் சங்கீதம் சில சமயங்களில் வெகு தரமாக இருக்கிறது; சாதாரணமாக நல்ல சங்கீதம் ஒலிபரப்பப்படுகிறது. சிற்சில சந்தர்ப்பங்களில் மட்டமாகவும் இருக்கிறது. மோசமான சங்கீதத்தை ஒரு முறை வேண்டுமானால் கேட்கலாம்; திரும்பத் திரும்ப அதைக் கேட்கும்படி செய்யக் கூடாது. யோக்கியதையை அநுசரித்தே பாடகர்களைப் பொறுக்க வேண்டும். சலுகை, வகுப்பு, மாகாணத்தைச் சேர்ந்தவர் என்ற பாத்தியதை ஆகிய விஷயங்களை எல்லாம் இதிலிருந்து விலக்க வேண்டும். அவற்றைக் கவனிக்கவே கூடாது. முன்னுக்கு வரக்கூடிய யோக்கியதை உள்ளவர்களை உற்சாகப்படுத்த வேண்டும்.

பேசும் படங்களிலும் சங்கீத அம்சம் இருக்கிறது. சில சந்தர்ப்பங்களில் படங்களில் வெகு தரமான சங்கீதத்தைக் கேட்டு ஆனந்திக்கும்படியும் இருக்கிறது. ஆனால், மோசமான பாட்டுக்கள், மட்டமான வர்ண மெட்டுக்களிலும் பாடப்படுகின்றன. நாடோடிப் பாட்டுக்களாக இருந்தாலும் பரவாயில்லை; அவற்றைப் பாட வேண்டும். நான் இவற்றை வரவேற்கிறேன். சங்கீதம் எதுவாக இருப்பினும் அதில் கம்பீரமான அம்சம் இருக்க வேண்டும். 'ஜனங்கள் மேலே சொன்னதுபோன்ற பாட்டைத்தான் விரும்புகிறார்கள். நாங்கள் என்ன செய்வது?' என்று ரஸிகர்கள்மீது குறை கூறுவதில் பயனில்லை. இது ஒரு விஷ சக்கரம் மாதிரி: இதைத் தகர்த்து எறிய வேண்டும்.

வித்வத் சபைகள், சங்கங்கள் இவற்றின் ஆதரவில் கச்சேரிகள் நடக்கின்றன. ரேடியோ, பேசும் படங்கள் இவை இருந்த போதிலும் சிறந்த சங்கீதக் கச்சேரிகள் நடத்தினால் அதற்கு ரஸிகர்கள் அதிகமாகவே வருவார்கள். இதுபோல நடக்கும்

## சங்கீதக் கச்சேரிகள்

கச்சேரிகள் வெகு நேரம் வரை நடக்கின்றன. சமீப காலமாக இந்த விஷயத்தில் அபிவிருத்தி காண்கிறது. 4-மணி நேரம் வரையில் சாதாரணமாகக் கச்சேரிகள் நடக்கின்றன. இது மிக அதிகமானதுதான். 15 நிமிஷம் ஓய்வுடன் 2-30 மணி நேரம் கச்சேரி நடந்தால் அதுவே பெரிது. கச்சேரிகள் மாலை 5-15 மணி முதல் 6-15 மணி வரை நடக்க வேண்டும். பிறகு 15 நிமிஷம் ஓய்வு. அதற்குப் பிறகு 6-30 முதல் இரவு 8 வரை நடக்கலாம். அத்துடன் முடிந்துவிட வேண்டும் வித்வானுக்கு இதனால் ஆயாசமோ களைப்போ ஏற்படாது. பக்க வாத்தியக் காரர்கள் ஓங்கிவிடும்படியான நிலைமை இல்லாமல் கச்சேரி தரமாக இருக்கும். வித்வான்கள் ஆரோக்கியத்துடனும் தீர்க்காயுளுடனும் இருப்பர். ரஸிகர்கள் கச்சேரியை முற்றும் அநுபவிப்பார்கள். முதலில் இதற்குச் சிலர் ஆக்ஷேபம் தெரிவித்து முணுமுணுப்பார் கள். போகப் போக இது சரிப்பட்டுவிடும். மேலும் இதனால் ஒரு துர்ப்பழக்கம் நின்றுவிடும் வித்வான்கள் மேடைமீதே காபி, சோடா முதலியவற்றைச் சாப்பிடும்படி ஏற்படாது. ரஸிகர் களும் அப்படிச் செய்ய இடம் இல்லாது போகும் உரக்கப் பேசுவதும் இல்லாமல் இருக்கும்

இன்னொரு யோசனை. ஒவ்வோர் உருப்படிக்கு முன்பாகவும், அதன் சாஹித்திய கர்த்தாவின் பெயர், ராகம், தாளம், அர்த்தம் ஆகியவற்றை ஒரு நிமிஷம் முன்னதாகச் சொல்லலாம். இதனைல் ரஸிகர்கள் நன்கு ஆனந்திக்க முடியும். அல்லது கச்சேரியில் பாடப்படும் உருப்படிகளின், 'விவரத்தை' அச்சிட்டு வழங்கி விடலாம். முதலில் தெரிவித்த யோசனையைத்தான் நான் விரும்பு கிறேன்.

பல்லவியைப்பற்றி உன் அபிப்பிராயம் என்ன என்பது எனக்குத் தெரியவில்லை. இந்தக் காலத்தில் பல்லவி நன்றாகப் பாடுகிறார்கள். ஆனால் இது மிகப் பெரியதாக இருக்கிறது. உத்ஸாகம் அளிக்கக் கூடியதாகவும் இல்லை. பிரபல வித்வான் களெல்லாம் இது மிக விசேஷமானது என்கிறார்கள். ஒருவேளை

அப்படி இருக்கலாம். ஆனால் சாமானியமான ஜனங்களின் சார்பாக நான் சொல்வது ஒன்று. கச்சேரிகள் அதிக நேரம் நடக்காமல் இருக்கும்போது பல்லவியை விட்டுவிடலாம் என்றே நான் கருதுகிறேன். எப்படி இருந்தாலும் பத்து நிமிஷத்துக்கு மேல் பல்லவி பாடக்கூடாது

தமிழ் நாட்டில் அதிகமான தமிழ்ப் பாட்டுக்களைப் பாட வேண்டுமென்று நான் கருதுகிறேன் தமிழில் நல்ல பாட்டுக்கள் இல்லை என்பது தவறு. கோபாலகிருஷ்ண பாரதியின் நந்தனார் சரித்திரம், அருணாசலக் கவியின் ராம நாடகக் கீர்த்தனைகள், தேவாரம், ஜாவளிகள், பாரதியார் கீதங்கள் இவற்றையெல்லாம் நன்கு பாடலாம்.

பிடில், மிருதங்கம் இவை மட்டுமே பாட்டுக் கச்சேரிக்குப் பக்க வாத்தியங்களாக இருக்க வேண்டும். பலவிதமான பக்க வாத்தியங்களை வைத்துக்கொள்வதைக் கேட்க எனக்குப் பொறுமை இல்லை. கூட்டத்தினால் பெருமை அதிகப்படாது. பக்க வாத்தியக்காரர்கள் என்றால் அவர்கள் பக்க வாத்தியக்காரர் களாகவேதான் இருக்க வேண்டும். கச்சேரியில் பாடகருக்குத் தான் அதிகமாகப் பாட இடம் இருக்க

கச்சேரியைக் கேட்க வரும் ரசிகர்கள் சப்தமின்றிக் கேட்டு, வித்வான்களுடன் ஒத்துழைக்க வேண்டும். மங்களம் பாடுகையில் எல்லோரும் மௌனமாக எழுந்து நிற்க வேண்டும்.

18-6-'41.

# சித்திரக் கலை

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

**சி**றந்த கலைகளில் ரஸானுபவ உணர்ச்சியும் ஆசையும் இருந்தால், அது உண்மையான படிப்புக்குள்ள லக்ஷணம். ஒரு ஸம்ஸ்கிருத கவி பின்வருமாறு தெரிவிக்கிறார் :

'கவிதை, கானம், கலை இவற்றில் உணர்ச்சி இல்லாதவன் உண்மையில் மிருகத்துக்கு ஒப்பானவன். வால் அல்லது கொம்பு இவை இல்லாததுதான் அவனுக்கு வித்தியாசம்.'

साहित्य-संगीत-कला-विहीनः
साक्षात् पशुः पुच्छ विषाणहीनः ।

சென்ற என் கடிதங்களில் சங்கீதம்பற்றி உனக்கு எழுதியிருந்தேன். அடுத்தபடியாக நீ சித்திரம் தீட்டும் கலையைக் கற்றுக்கொண்டு, அதை அபிவிருத்தி செய்துகொள்ளலாம். இப்போது நம் நாட்டில் இவ் வேலையில் சிலர் ஈடுபட்டிருக்கிறார்கள். மனிதர்களின் உருவம், இயற்கைக் காட்சிகள், அல்லது பெரிய சம்பவங்கள் இவற்றையெல்லாம் சித்திரமாக வரையும் கலை அது. சித்திரம் தீட்டுவதில் பல விதம். எல்லாக் கலைகளையும்போலவே சித்திரம் எழுதுவதிலும் சில நியதிகளைப் பின்பற்ற வேண்டும். சித்திரம் வரைவது என்பது, 'போட்டா' எடுப்பது போல் அல்ல. புகைப்படம் எடுப்பதைவிட இது மேம்பட்டது. இது அழகுள்ள வேலை. 1919-ம் வருஷத்தில் முக்கியமாக நான் ஐரோப்பாவுக்குப் போயிருந்தபோது ரோம், வெனிஸ், நேப்பிள்ஸ், பாரிஸ், லண்டன், எடின்பரோ முதலிய இடங்களிலுள்ள அதியற்புதமான ஓவியங்களைக் காணும் பாக்கியம் எனக்

குக் கிடைத்தது. இவைகளெல்லாம் இந்தக் கொடிய யுத்தத்தில் சிக்கிப் பாழாகாமல் தப்பிப் பிழைக்குமென நம்புகிறேன். அப்படி அவை பாதிக்கப்படாமல் இருப்பின் நாம் அவற்றைப் போய்ப் பார்க்க வேண்டும்.

இயற்கையைக் கலை அழகுடன் தத்ரூபமாக்கிக் காட்டுவது சித்திரக்கலை. இரண்டு பெரிய சித்திரக்காரர்களைப்பற்றியும், ஒரு ராஜாவைப்பற்றியும் கதை ஒன்று சொல்வார்கள். ஒரு சித்திரக்காரர் வெட்ட வெளியிலே தெரியும்படி சுவரில் சில பழங்களைச் சித்திரம் எழுதினார்; குறிப்பிட்ட நாள் வந்தது. ராஜாவின் முன்பாக அந்தச் சித்திரக்காரர் தாம் வரைந்த சித்திரத்தைத் திறந்துவைத்தார். உடனே அதிசய சம்பவம் ஒன்று நடந்தது. சுவரில் எழுதப்பட்டிருந்த பழங்கள் உண்மை என்று எண்ணிப் பறவைகளெல்லாம் அவற்றை வந்து கொத்த ஆரம்பித்துவிட்டன. இதைக் கண்ட ராஜாவுக்குச் சித்திரக்காரரிடம் பிரமாதமாகச் சந்தோஷம் ஏற்பட்டுவிட்டது.

இன்னொரு சித்திரக்காரர் இவரையும் மிஞ்சிவிட்டார். வெகு நாள் வரையில் இந்தச் சித்திரக்காரர் தம் அறையை விட்டு வெளியே வராமல் சித்திரம் வரைவதில் மூழ்கியிருந்தார். ஒரு நாள் ராஜாவையும் மற்றும் சிலரையும் தம்முடைய அறைக்கு வந்து, தம்முடைய சித்திரத்தைப் பார்த்துப்போகும்படி அழைத்தார். ராஜாவும் மற்றும் சிலரும் போனார்கள். அங்கே சுவரில் ஒரு சிறு துணி மாத்திரம் தொங்கவிடப்பட்டிருந்தது. சித்திரக்காரரை நோக்கி, "எங்கே சித்திரம்?" என்று கேட்டார் ராஜா.

"அந்த மெல்லிய துணியை எடுத்துவிட்டுப் பாருங்கள்; அதன் பின்னால் சித்திரம் இருக்கும்" என்றார் சித்திரக்காரர். மெல்லியதாக இருந்த மறைப்பை விலக்க ராஜா சுவருக்குப் பக்கத்தில் போனார். அவர் தலை சுவரில் மோதிவிட்டது. திரை போல் இருந்தது உண்மையில் திரை அல்ல. திரையைப்போல் சித்திரக்காரர் சுவரில் எழுதியிருந்தார்! உண்மையாகப் பழம் போல் எழுதியிருந்ததைக் கண்டு பறவைகள் ஏமாந்துபோயின;

திரைபோல் எழுதியதைக் கண்டு ஒரு ராஜாவே ஏமாந்து போனார். உயர்ந்த சித்திரத்தின் அழகு இது.

ஓவியம் தீட்டுவது என்பது நம் நாட்டில் பழம் பெரும் கலை. பல்லாயிரக் கணக்கான, மிகவும் அழகான சித்திரங்கள் நம் நாட்டில் இருக்கின்றன. அஜந்தா, எல்லோரா ஆகிய இடங்களிலுள்ள, குகைகளில் சித்திரங்கள் இருக்கின்றன. அவற்றை நான் இன்னும் காணவில்லை; நான், உன் அம்மாவுடனும் உன்னுடனும் ஒரு தடவை அவற்றைப் போய்ப் பார்க்க வேண்டுமென்று இருக்கிறேன். அங்கே உள்ள சித்திரங்களெல்லாம் வெகு பிரமாதமாக இருக்கும் என்று சொல்கிறார்கள். அதேபோன்ற சித்திரங்கள் இன்னும் சில இடங்களிலும் இருக்கின்றன. இவையெல்லாம் ஹிந்துக்களைப்பற்றியவை. புத்தமதத்தைச் சேர்ந்தவர்கள், மொகலாயர்கள், இவர்களது சித்திரங்களும் உண்டு. பிறகுதான் மகாராஷ்டிரர்களது சித்திரம் தலை எடுத்தது.

ரவி வர்மா சித்திரத் தொழிலிலேயே ஒரு புதிய மலர்ச்சியை உண்டுபண்ணினார். மைசூர் அரண்மனை, ஸர் ஸி. பி. ராமஸ்வாமி ஐயரின் வீடு, திருவாங்கூர்க் கலை மன்றம் இவ்விடங்களில் அவரது அசல் சித்திரங்கள் இருப்பதை நீ பார்த்திருப்பாய். பார்க்காவிட்டால் நீ கூடிய சீக்கிரம் அவற்றைப் பார்க்க வேண்டும். ரவிவர்மா படத்தைப்பற்றிக் குறைகள் சொல்வதென்பது சுலபந்தான்; ஆனால் அவை ஒரு பெரிய காரியத்துக்கு உபயோகமாக இருக்கின்றன. முக்கியமாக அவரது படங்கள் அநேகமாக ஒவ்வொரு ஹிந்துவின் வீட்டையும் அலங்கரிக்கின்றன.

வங்காளம், வட இந்தியா ஆகிய இடங்களில் எழுதப்படும் சித்திரங்கள் ஒரு வகை. டில்லி, கல்கத்தா ஆகிய இடங்களில் இந்தப் படங்களை நீ பார்த்திருக்கிறாய். நம் வீட்டில்கூட இது போன்ற படங்கள் இரண்டு மூன்று இருக்கின்றன. அவர்களுடைய வேலைப்பாடு நமக்குச் சில சமயங்களில் பிடிப்பதில்லை. ஆனால் அவர்களும் சில தரமான படங்களை எழுதியிருக்கின்றனர்.

சென்னைச் சித்திரக் கலைப் பாடசாலையைச் சேர்ந்தவர்கள் இந்தத் துறையில் பல வருஷங்களாக நல்ல வேலைகள் செய்து வரு

கின்றனர். ஒவ்வொரு வருஷமும் தங்கள் படத்துக்காக ஒரு காட்சி நடத்துகின்றனர். நீ இவற்றுக்குத் தவறாமல் போய்ப் பார்த்து வர வேண்டும். காலஞ்சென்ற ஸ்ரீ எஸ். வி. ராமஸ்வாமியின் வீட்டில் நிறையப் படங்கள் இருக்கின்றன. இதர நகரங்களில் இருப்பதைப்போல் சென்னையிலும் சித்திரங்களைச் சேகரித்து வைக்கக் கூடிய ஒரு கலை மன்றம் ஏற்பட வேண்டுமென்று எண்ணுகிறேன்.

ஒழிந்த நேரத்தில் நீயும் சிறிது சித்திரம் வரையக் கற்றுக் கொள்ளலாம் என்பது என் யோசனை. நல்ல உபாத்தியாயர் மட்டும் கிடைக்கும் பக்ஷத்தில் தினசரி நீ இதைத் தவறாமல் கற்றுக்கொண்டு வரலாம். இதில் சற்றுத் தீவிரமாகச் சிரத்தை கொண்டால் சில வருஷங்களுக்குள் நீ நன்கு சித்திரம் தீட்ட முடியும். ஸ்ரீ ஏ. வி. ராமநாதனின் பெண் சௌ. சுமித்ரா நன்கு சித்திரம் தீட்டியிருக்கிறாள். இன்னுங்கூட அவள் எழுதுவதாகவே நம்புகிறேன் எப்படி இருந்தாலும் நம் வீடுகளிலெல்லாம் குறைந்த அளவில் சில சித்திரங்களாவது இருக்க வேண்டும் என்பது என் எண்ணம். இவை வீட்டின் சோபையை அதிகம் ஆக்குகின்றன. குழந்தைகளுக்கும் படங்களில் ஆசை இல்லையா?

20-6-'11

# சிற்பக் கலை

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

உனக்கு இன்னும் இரண்டொரு கலைகளைப்பற்றி இந்தக் கடிதத்தில் எழுத விரும்புகிறேன். அவைபற்றி நீ கொஞ்சம் தெரிந்துகொள்ள வேண்டும். சித்திரக் கலைக்கு அடுத்தபடியாக உள்ள கலை சிற்பம். சலவைக் கல்லிலோ பாறையிலோ மனிதர்களையும் கடவுளையும் சித்திரித்துக் காட்டவல்ல கலை இது. சித்திரத்தைப்போலவே இதுவும் புராதனமான கலைதான். பூர்விக இந்தியா, எகிப்து, கிரீஸ், ரோம் முதலிய நாடுகளில் சிற்பம் மிக்க உயர்வான நிலைமையில் வளமுற்றிருந்தது. கலைகளில் முக்கியமான ஸ்தானத்தைச் சிற்பக் கலை வகித்து வந்திருக்கிறது.

சித்திரம், சிற்பம் இவை இரண்டிலும் நோக்கம் கிட்டத்தட்ட ஒன்றேதான். தெய்வம், தேவதைகள், கந்தர்வர்கள், அவதாரங்கள், கடவுளின் லீலா விநோதங்கள், தெய்வ வழிபாடு இவற்றையெல்லாம் உருவாக்க வேண்டும் என்பது சித்திரம் வரைவதன் நோக்கம் நாம் விரும்பி மரியாதை செய்து, கௌரவப்படுத்த வேண்டும் என்பவர்களைச் சலவைக் கல்லிலோ பாறைகளிலோ சிலையாக வடிக்க வேண்டுமென்பது சிற்பத்தின் நோக்கம். இவைதான் உருவச் சிலைகள்.

சிற்பத் தொழில் மிகவும் கடினமான கலை. முக்கியமாகப் பெண்களுக்கு இவ்வேலை வெகு கஷ்டமானது. இத் தொழில் பயின்ற பெண் யாராவது இருப்பார்கள் என நான் எண்ணவில்லை. இந்தக் கலையிலுள்ள இதர அம்சங்கள் ஒருபுறம் இருக்கட்டும். இதில் தேகத்தைக்கொண்டு உழைக்கும் வேலை பெண்களுக்கு மிகவும் அதிகமானதாகும். சிற்பத்தைப்பற்றி நினைக்கும்போது

## அருமைப் புதல்விக்கு

அதியாச்சரியமாக இருக்கிறது. உயிரற்ற சலவைக் கற்கள், பாறைகள் இவற்றை உளி கொண்டு செதுக்கி ஆச்சரியப்படும் படியான உருவங்களைச் சிருஷ்டிப்பதைக் கவனிக்கும்போது மனிதனின் புத்தி, கைத்திறமை இவற்றின் சிறப்பு நன்கு துலங்கு கிறது. சிலையின் அமைப்பு, உரு, அழகு முதலிய அனைத்தும் ஆச்சரியமாக இருக்கின்றன.

உயிரற்ற இந்தச் சிலைகளிலே காணப்படும் முகபாவ உணர்ச்சி யைக் கண்டுதான் நான் எப்போதும் அதிசயிக்கிறேன். நான் ஒரு முக்கியமான உதாரணத்தை உனக்குச் சொல்லுகிறேன். 1925-ம் வருஷம் நான் பாரிஸில் இருந்தேன். அங்கே காட்சி சாலைக்குப் போகும்போது வாசலில் இரண்டு பெண்களின் நிர்வாணச் சிலைகள் இருந்தன. ஒன்று தெய்விகத் தன்மையுடன் பொருந்தியது; மற்றொன்று சாதாரணமானது. இரண்டு சிலைகளின் உருவமும் கிட்டத்தட்ட ஒன்றுகவே இருந்தது. ஆனல் அச்சிலைகளின் கண்கள், முகபாவம் இவற்றில் மட்டும் ஏதோ மாறுதல் தோன்றி யது. இது இரண்டு சிலைகளுக்கும் உள்ள வேற்றுமையை வெகு வாக உணர்த்தியது. ஒரு சிலை – உலகம், உலக விவகாரங்கள் இவற்றை உணர்த்தியது. இன்னொரு சிலை கடவுள், தெய்வாம்சம் முதலியவற்றை உணர்த்தியது. இதுதான் சிற்பியின் மேதை.

நமது நாட்டிலே, முக்கியமாகத் தென்னிந்தியக் கோயில் களில் மனிதர்கள், மிருகங்கள், குதிரை, யானை முதலியவற்றை யெல்லாம் அதியற்புதமாசப் பாறைகளில் செதுக்கியிருக் கிறார்கள். வேலூரில் மலைக் கோட்டையில் பாழடைந்திருக்கும் கோயில், ஸ்ரீ மீனாக்ஷி கோயில், சிதம்பரம் ஸ்ரீ நடராஜர் கோயில், மகாபலிபுரம், காஞ்சீபுரம் முதலிய இடங்களில் இந்தக் கல்வெட் டுச் சிலைகளை நீ காண வேண்டும். ஒவ்வோர் அம்சத்திலும் கவனம் செலுத்தியிருக்கும் நேர்மை, முகபாவ உணர்ச்சிகள், ரத்தம் ஓடும் நரம்புகள்கூட அவற்றில் தென்படும். மிருகங் களெல்லாம் தத்ரூபமான முறையில் உருவாக்கப்பட்டிருக் ...லாம் சிற்பக் கலையின் வெற்றியாகும்.

## சிற்பக் கலை

இந்தக் கலை தற்காலம் பலவீனமடைந்திருக்கிறது. ஆனால் நகரத்தார்கள், நமது ஆலயங்களைப் புதுப்பிப்பதன் மூலம் இக் கலைக்கு மிக்க உயர்ந்த சேவை செய்திருக்கின்றனர். சிலையைச் செய்துவைத்துப் பெரிய மனிதர்கள் கௌரவிக்கப்பட்டிருக்கின்றனர். இத்துறையில் சென்னைச் சித்திரக் கலைப் பாடசாலை கொஞ்சம் சேவை செய்து வருகிறது. நமது நாட்டிலும் நம் மாகாணத்திலும் சிற்பக் கலை பயில்வதற்கு நல்ல பள்ளிக்கூடம் இருக்க வேண்டும் என்பது என் எண்ணம்.

இந்தியாவில் அதியற்புதமான ஆலயங்கள், கோட்டைகள், அரண்மனைகள் இவையெல்லாம் இருக்கின்றன; சில பாழாகி விட்டன என்பது உண்மைதான். ஆனால் அவையும் தாஜ்மஹாலும் நமது சிற்பக் கலைச் செல்வத்தின் சின்னங்கள். சிற்பக் கலை பலதரப்பட்டது. ஹிந்துக்கள், கிரேக்கர், ரோமர்கள், மொகலாயர்கள், பல்லவர்கள் ஆகியவர்களது சிற்பங்கள் உண்டு. சில சந்தர்ப்பங்களில் இவை ஒருமைப்பாட்டுடன் அமைக்கப்பட்டிருக்கின்றன. பிரபல சிற்பிகள் ஆதரவில்லாமல் இருக்கின்றனர். இந்த யுத்தம் முடிந்த பிறகு சிற்பக் கலையுடன் கூடிய கட்டிடங்கள் நிர்மாணிப்பதில் சிரத்தை இருக்குமா என்பது எனக்குச் சந்தேகமாக இருக்கிறது. அந்தச் சிரத்தை குறையாமல் இருக்குமென்றே நம்புகிறேன். கலைகளை, முக்கியமாகச் சங்கீதம், சித்திரம், சிற்பம் முதலியவற்றையெல்லாம் நாகரிகமுள்ள சர்க்கார் ஆதரித்து ஆக்கம் அளிக்க வேண்டும் என்பது எனது எண்ணம். எழில் மிகுந்த விஷயங்கள் எப்போதும் நிலையாகச் சந்தோஷத்தைத் தரத் தக்கவை. அழகைக் கண்டு அநுபவிக்காமல் போனால் வாழ்க்கை சுவைக்காது.

சொந்த வீடுகளைக் கட்டும்போதுகூடத் தனிப்பட்டவர்கள் சிறிய அளவில் சிற்பக் கலைக்கு இடம் கொடுக்கலாம். அழகான வீடுகள் இல்லாமல், 'சௌந்தரிய நகர'த் திட்டத்தைச் சாதிக்க முடியாது.

## அருமைப் புதல்விக்கு

கலையழகைக் கண்டு, களித்து, மற்றவர்களோடு பகிர்ந்து கொண்டு அதை அநுபவிப்பதென்பது ஒரு பெரிய பாக்கியம்.

இந்தப் பாக்கியம் உனக்குக் கிட்ட ஆண்டவன் ஆசீர்வதிப் பாராக!

20-6-'45

# சமூக சேவை

என் அன்புள்ள

லக்ஷ்மிக்கு,

'சமூக சேவை' என்று நாம் அடிக்கடி கேள்விப்படுகிறோம். இதனுடைய கருத்து என்ன, தெரியுமா? அது வெகு விசேஷமானது. கடவுள் இயற்கையில் அருமைய வசதிகள் காரணமாகச் சிலர் நல்ல ஸ்திதியில் இருக்கிறார்கள்; உலகத்தில் சிலருக்கு நிறைய உடைமைகள் இருக்கின்றன; மற்றவர்களையெல்லாம்விடச் சிலர் மிகவும் மனித வர்க்கத்திடம் அதிக அன்பு பூண்டவர்களாக இருக்கின்றனர். இவர்களெல்லாம் தங்களைவிடக் கீழ்ப்பட்ட நிலைமையில் இருப்பவர்களுக்கு உதவி செய்ய வேண்டும்.

வாழ்க்கை வெகு சிக்கலானது. மற்றவர்களுடைய வாழ்க்கையிலே ஒளி பரவி இன்பம் சுரக்கும்படி செய்வதில் நம்மில் வசதி உள்ளவர்கள் ஈடுபடவில்லையானால் அவர்களது நிலைமை மிகவும் கஷ்டமானதாகிவிடும். இதுதான், 'சமூக சேவை' என்பதன் தாத்பரியம். இந்த நோக்கம் கிறிஸ்துவ மதத்தினரைச் சேர்ந்ததென்றும், அது ஹிந்துக்களுக்குத் தெரியாதென்றும், அல்லது பெரும்பாலும் அவர்கள் அதை அநுஷ்டிப்பதில்லையென்றும் சொல்லப்படுகிறது. ஒரு விதத்தில் இது உண்மைதான். அதாவது ஒரு கட்டுப்பாடான மாதிரியில் நவீன சமூக சேவை முறையில் ஆஸ்பத்திரிகளுக்கு விஜயம் செய்வது, சேரிகளுக்குப் போவது, சுகாதார இயக்கங்களில் ஈடுபட்டுச் சேவை புரிவது, எழுத்தறிவு இயக்கங்களைப் பரவச் செய்வது, பிரசவ வசதிகளைக் கவனிப்பது முதலியவற்றை ஹிந்துக்கள் அவ்வளவாகக் கவனிப்பதில்லை. அவற்றை நாம் தீவிரமாகக் கவனித்துப் பக்குவப்படுத்தவும் இல்லை. புராதன காலத்தில் நம் கிராமங்களில் எப்போதும் ஏதாவது ஒரு வகையில் பணக்காரர்கள் ஏழைகளுக்கு உதவி

செய்வார்கள். ஏழைகளுக்கு அன்னதானம் செய்வார்கள்; அரிசி கொடுப்பார்கள்.

தற்போது இந்தியாவிலே சமூக சேவைக்கான ஏற்பாட்டைச் செய்ய வேண்டியது நியாயம்; அது முறையும் ஆகும். நகரங்கள் எல்லாம் பெருகி வருகின்றன; அவற்றை அடுத்துச் சேரிகள் இருக்கின்றன; தொழிலாளர்கள் தொகை அதிகமாக இருக்கிறது; வீடற்ற ஜனங்களும் பிச்சைக்காரர்களும் இருக்கின்றனர். எனவே படித்த, தன்னலமற்ற, சகோதர சகோதரிகள் அவர்களுக்கெல்லாம் உதவி செய்ய முன்வர வேண்டும். வீட்டு வசதி செய்து கொடுப்பது, பிச்சைக்காரர்களுக்கு வாழ வசதி அளிப்பது, பாமரர்களுக்குக் கல்வி போதித்தல், அங்கஹீனர்களுக்குச் சிகிச்சை செய்தல் ஆகிய இவைபோன்ற பிரச்னைகளையெல்லாம் சர்க்காரும் நகர சபைகளும் கவனிக்க வேண்டும். ஆனால் மனிதவர்க்கத்துக்குப் பச்சாத்தாபத்தோடு செய்ய வேண்டிய சேவையைத் திறமைசாலிகளாக உள்ள சமூகத் தொண்டர்கள் ஏற்றுக்கொள்ள வேண்டும்.

சென்னையிலே இதுபோன்ற சேவையைப் பல சமூக க்ஷேம அபிவிருத்திச் சங்கங்கள் செய்கின்றன. திருவல்லிக்கேணியிலுள்ள சமூக சகோதர சங்கம் இத்துறையில் வெகு காலமாகத் தொண்டாற்றி வரும் ஸ்தாபனமாகும். சேரிகளுக்குச் சென்று தொண்டு செய்வதென்பது மிக்க சிரமமான காரியம். இதில் எனக்கு அநுபவம் உண்டு. அவ்விடங்களில் வசிப்பவர்களில் பாதிப் பேர் நோயினால் கஷ்டப்படுகின்றனர். இதைத் தடுக்கலாம். ஆனால் அவர்களோ ஏழைமை நிலையில் இருக்கின்றனர்; விஷயம் இன்னதென்று தெரியாதவர்கள். தங்களுக்குத் தாங்களே வசதிகளைத் தேடிக்கொள்ளக் கூடிய மார்க்கங்களைக் காட்டி அவர்களுக்கு உணர்ச்சி ஏற்படச் செய்வது சமூகத் தொண்டர்களின் வேலையாகும். சேரி வாசிகளைச் சமாளிப்பது வெகு கஷ்டம். அவர்களில் சிலருக்குத் தங்களைப்பற்றித் தாழ்வான அபிப்பிராயம்; சமூக சேவை செய்யும் சிலருக்குத் தங்களைப்பற்றி உயர்வான அபிப்பிராயம். இந்த இரண்டு சாராரும் தங்கள் தங்கள் அபிப்

## சமூக சேவை

பிராயங்களை மறந்து மனித வர்க்கத்துக்குச் சேவை செய்ய வேண்டும் என்பதை உணர்ந்தால் எவ்வளவோ உயர்வாகச் சேவை செய்யலாம். கோகுலம் ஹரிஜன் காலனியில் ஸ்ரீமதி விசாலாட்சியும் தன்னலமற்ற இதர சேவகர்களும் மிகத் தரமான சேவை செய்திருக்கின்றனர். சேரி வாசிகளுடைய சுயமதிப்பு உணர்ச்சியை எழுப்புவதில் உள்ள சக்தியிலேதான் சமூக சேவை வெற்றி பெறுவது பொருந்தியிருக்கிறது. தாங்களே தங்கள் வேலையைச் செய்துகொள்ளும்படி செய்ய வேண்டும். தங்கள் வீடு, சூழ்நிலை இவற்றிலெல்லாம் அவர்கள் கௌரவம் கொள்ள வேண்டும்.

சேரி வாசிகளுக்கு முக்கியமான எதிரிகளாக இருப்பவை மூன்று விஷயங்கள் ஆகும்: குடி, அறியாமை, கடன் கொடுக்கும் மார்வாரி போன்ற நபர்கள் ஏழைகள் சாராயத்தையோ கள்ளையோ குடிக்கக் கூடாது என்று தடை செய்துவிட வேண்டும்; இந்நாட்டில் காங்கிரஸ் சர்க்கார்கள் எந்த எந்த இடங்களில் எல்லாம் மதுவிலக்குத் திட்டத்தை அமுலுக்குக் கொண்டுவந்தனவோ அந்த அந்த இடங்களிலெல்லாம் அது வெற்றிபெற்றிருக்கிறது. கண்டிப்பாக அது வெற்றிபெற்றே தீரும். மிதக் குடிப் பிரசாரங்களினால் பிரயோசனம் இல்லை.

மதுவிலக்குக்கு அடுத்தபடியாக மக்களின் அறியாமையைப் போக்கவும் எழுதப் படிக்கும் ஞானத்தை ஊட்டவும் இயக்கங்கள் தோன்ற வேண்டும் எழுத்தறிவு ஊட்டும் வேலை மிகவும் கடினமானது. நல்ல பேசும் படங்கள், கிராமபோன் ரிகார்டுகள், பிரசங்கங்கள், சங்கீதம் முதலியவற்றின் உதவியின்மூலம் முக்கியமான அநேகம் விஷயங்களைப்பற்றி உபயோகமான தகவல்களை ஜனங்களுக்குத் தெரிவிக்கலாம்; அவர்களுடைய கடமை, பொறுப்பு, உரிமை இவற்றை உணரும்படியும் செய்யலாம். இத்தோடுகூட முதியோருக்குக் கல்வி புகட்டும் நிலையங்களுக்கும் ஏற்பாடு செய்து தர வேண்டும். முன் வந்து முயற்சி செய்யக் கூடிய சமூகத் தொண்டர்கள், சர்க்கார், ஸ்தல ஸ்தாபனங்கள் இவற்றின் உதவியுடன் இவ்வேலையில் ஈடுபடலாம். மேயராக

நான் இருந்தபோது சென்னையில் இதுபோன்ற நிலையங்களை ஆரம்பித்தேன். இவை வெற்றி பெறும் என்பது என் நம்பிக்கை.

கடைசியாகச் சேரியிலுள்ள ஏழைகளைக் கடன்காரர்கள் தொல்லையிலிருந்து மீட்க வேண்டும். கடன்காரர்களால் இவர்களுக்குத் தொடர்ச்சியாகத் தொந்தரவுகள் ஏற்படுகின்றன. கூட்டுறவும் சிக்கன முறையும் இந்தக் கேட்டை நிரந்தரமாக ஒழிக்கக்கூடிய உபாயங்கள். கூட்டுறவு இயக்கம் நன்கு நடைபெறப் படிப்பு, நாணயம், சுயநலமற்ற தன்மை இவ்வளவும் கூடிய தொண்டர்கள் வேண்டும். சமூக க்ஷேமாபிவிருத்தித் தொண்டர்கள் உதவி செய்ய வேண்டும்; அது அவர்களால் முடியும்.

21-6-'41.

# பிச்சைக்காரர்கள் தொல்லை

**என் அன்புள்ள**
**லக்ஷ்மிக்கு,**

சமூக க்ஷேமாபிவிருத்திப் பிரச்னைகளைச் சமாளிப்பதில் கஷ்டங்கள் இருக்கின்றன. இதை விளக்குவதற்காக ஓர் உதாரணம் உனக்குச் சொல்லுகிறேன். பிச்சை எடுப்பவர்களைப்பற்றி இக்கடிதத்தில் எழுதுகிறேன். மத சம்பந்தமான சேர்க்கைகளினால் இப் பிரச்னை நம் நாட்டிலே சிக்கலுள்ளதாக இருக்கிறது. பூர்விக ஹிந்து இந்தியாவில், சமூகத்தில் கண்ணியமுள்ள ஒரு பகுதியினர் மற்றவர்களுடைய தர்மத்தை நம்பி வாழ்க்கை நடத்தி வந்தனர். பழைய ஆசாரியர்கள் - அநேகமாகப் பார்ரிஷிகள் - கூட்டம் அதிகமாக உள்ள பகுதிகளிலிருந்து விலகி, தொலைவிலுள்ள தங்கள் ஆசிரமங்களில் வசித்து வந்தார்கள். அங்கே தங்களுடைய சிஷ்யர்களுக்கும் சிறுவர் சிறுமியருக்கும் வாழ்க்கை ரகசியங்களைப்பற்றிப் போதனை செய்து வந்தார்கள். இந்தப் பாட போதனை எல்லாம் இலவசமாக நடந்தது. சிஷ்யர்களுக்கு அன்ன வஸ்திரங்கள் ஆசிரமத்திலேயே கொடுக்கப்பட்டன. பிரும்மசாரிகள் வீடு வீடாகச் சென்று கிருகஸ்தர்களிடம் யாசிப்பார்கள். பிரும்மசாரிகளுக்குப் பிக்ஷை போடுவது கடமையென்றும், அது ஒரு பாக்கியமென்றும் கிருகஸ்தர்கள் கருதுவார்கள். இவ்வாசிரமங்கள் படிப்புச் சொல்லித் தருவதற்காக ஏற்பட்ட பெரிய ஸ்தாபனங்கள்; ஏன்? அக்காலத்திலிருந்த சர்வகலாசாலைகள் என்றே சொல்லிவிடலாம். பிக்ஷை எடுக்கும் சம்பிரதாயம் இப்போதுகூடப் பிராம்மண குடும்பங்களில் அநுஷ்டானத்தில் இருந்து வருகிறது. உபநயனம் முடிந்த பின்னர் சிறுவர்கள், 'பவதி பிக்ஷாம் தேஹி (भवति भिक्षां देहि)' என்று கூறிக் கிருஹஸ்தர்களிடம் பிக்ஷை கேட்பார்கள். கிரு

ஹஸ்தர்கள் இதைத் தங்கள் கடமையாகப் பாவித்துப் பிக்ஷை போடுவார்கள்.

இதேபோல் கிருஹஸ்தர்களுக்கும் ஒரு கடமை உண்டு. தாய், தந்தை, ஆசாரியன் இவர்களுக்கு அடுத்தபடியாக அதிதிகளை வணங்க வேண்டும். அந்தக் காலத்தில் நாட்டில் எதற்கும் குறைவில்லை; செழிப்பாக இருந்தது. சமூகத்திலுள்ள நோக்கமும் அநுசரணையாக இருந்தன. எனவே இவைகளெல்லாம் அக்காலத்தில் சாத்தியமாக இருந்தன. ஆனால் பிக்ஷை வாங்கி, காலக்ஷேபம் நடத்தியவர்களெல்லாம் அப்போது சோம்பேறிகளாக இல்லை. அவர்கள் சமூகத்தில் மிகவும் முக்கிய கடமையான கல்வி போதனையை மேற்கொண்டு வாழ்ந்தார்கள்; அல்லது சந்நியாசிகளாகவோ ரிஷிகளாகவோ இருந்தனர். அவர்களைத் தரிசிப்பதே புனிதமாக இருந்தது. ஆத்மிகத் துறையிலும் மத சம்பந்தமாகவும் போதனைகளைச் செய்து வாழ்க்கைக்கான உபதேசங்களை எல்லோருக்கும் எடுத்துக் கூறி வந்தனர்.

இடைக்காலம் முழுவதும், ஏன் – சமீப காலம் வரையில்-பிக்ஷை கொடுப்பது, பெறுவது என்ற தர்மம் தொடர்ந்து நடந்து தான் வந்தது. இப்போதோ என்றால் எல்லாம் மாறிப் போய் விட்டது. தற்காலத்தில் வேகமாகப் போகக்கூடிய வாகன வசதிகள் கிட்டிவிட்டன. எனவே யாத்ரிகர்களுக்கு வழியில் சாப்பாடு செய்துவைக்க வேண்டிய அவசியம் இல்லாமல் போய்விட்டது. தற்கால ஸ்கூல்கள், காலேஜ்கள் இவை காரணமாகப் பழைய குருகுலங்கள் மறைந்துவிட்டன. நகரங்களிலும் கிராமங்களிலும் பொதுவிலே வந்து பிட்சை எடுக்கின்றனர். இது சமூகத்திற்கு ஒரு நோய்போல் ஆகும். இதை ஒழிக்க வேண்டும். சாதாரணமாக உள்ள ஹிந்துக்கள், முஸ்லிம்கள், கிறிஸ்துவர்கள் ஆகியவர்களெல்லாம் தாமே நேரில் ஒரு காலணவையோ அல்லது அரிசியையோ பிச்சைக்காரரிடம் கொடுப்பது ஒரு மதிப்பு என்றும், காருணியச் செயல் என்றும் எண்ணுகின்றனர். பிச்சைக்காரர் தொல்லைக்கு இதுதான் பெரும்பாலும் காரணம்.

கட்டுப்பாடான ஒரு முறைப்படி தர்மத்துக்கு நாம் ஏற்பாடு செய்யலாம். இதற்கெனப் பொதுவாக ஒரு நிதி ஏற்படுத்தி, அவரவர்கள் சக்திக்கு ஏற்றபடி பொருளுதவி செய்யலாம்; உதவிக்குப் பாத்திரமாகவுள்ள பிச்சைக்காரர்களுக்கு அதாவது அங்கஹீனர்களாக இருப்போரையும் வேலை செய்ய முடியாமலும் ஆதரிப்பார் யாரும் இல்லாமலும் திக்கற்றிருப்பவர்களையும் பொதுவான ஒரு ஸ்தாபனத்தில் இருக்கச் செய்து உதவலாம். இவற்றையெல்லாம் நாம் இன்னும் கற்றுக்கொள்ளவேண்டியிருக்கிறது. கற்றுக்கொண்டு விட்டால் பிச்சைக்காரர் பிரச்னை பாதி தீர்ந்து விடும்.

இதற்கு அடுத்தபடியாகவுள்ள பிரச்னை கஷ்டமானது. அதாவது திடகாத்திரத்தோடு உள்ள பிச்சைக்காரர்கள் பிரச்னை. இவர்களெல்லாம் பிச்சை எடுப்பதை ஒரு தொழிலாகக் கொண்டிருக்கின்றனர். நொண்டி, முடம் இவர்களை உபயோகப்படுத்திக்கொண்டு பிச்சைக்கு வருகின்றனர். அவர்களிடம் ஒரு சிறு பகுதியைக் கொடுத்துவிட்டுப் பாக்கியைச் சுருட்டிக் கொண்டு போய்விடுகின்றனர். இதை ஒழிக்க வேண்டும். மேயர் என்ற முறையில் சென்ற வருஷம் நான் அவ்விஷயத்தில் விசேஷமாகச் சிரத்தை எடுத்துக்கொண்டேன். இப்போது சென்னையில் இதுபற்றி ஒரு சட்டம் செய்யப்பட்டிருப்பதாக நம்புகிறேன். இதன்படி திடகாத்திரமாக உள்ள பிச்சைக்காரர்கள், ஒன்று பொதுஸ்தலங்களில் போய்ப் பிச்சை எடுப்பதைக் கைவிட வேண்டும்; அல்லது அவர்களுக்காக உள்ள பிச்சைக்காரர் விடுதிக்கு அனுப்பப்படுவார்கள்; அங்கே கட்டாயமாக வேலை செய்து ஜீவனத்தை நடத்த வேண்டும். இச்சட்டம் மும்முரமாக அமுல் நடக்கும் என்று நம்புகிறேன்.

தேக வலுவுள்ளவர்கள் பொது ஸ்தலங்களில்—முக்கியமாக —ரயில்வே ஸ்டேஷன், டிராம், பஸ், மசூதி மாதா கோயில் ஆகிய இடங்களில் – பிச்சை எடுப்பது மிகவும் பெரிய தொல்லை. மேலே சொன்ன சட்டம் இதைத் தடுக்க உதவி செய்யும் என்று நம்புகிறேன். ஆனால் பொதுஜனங்களும் இவ் விஷயத்தில் ஒத்துழைக்க

வேண்டும். மேற்படி பொதுஸ்தலங்களில் எல்லாம் பிச்சை கொடுக்க மறுக்க வேண்டும்.

வீடு வீடாகச் சென்று பிச்சை கேட்கும் நபர்கள் வேறு இருக்கின்றனர். இவர்களாலும் பெரிய தொல்லைதான். இதைச் சட்டங்கொண்டு அடியோடு ஒழிக்க முடியாது; ஏனெனில் இதை மீறியும் பிச்சையெடுப்பார்கள் வீட்டுக்காரர்கள், எப் போதுமே பிச்சை போடாமல் இருக்க வேண்டும் என்பதற்குச் சுலபமாக உடன்படாமலும் இருக்கக் கூடும். பிச்சைக்குப் பாத்திரமாக இருப்பவர்களுக்கு லைசென்ஸ் கொடுத்து, அவர் களுக்கு மட்டும் பிச்சை போடும்படி கோட்டயத்தில் ஏற்பாடு செய்திருக்கின்றனர். இதனால் லைசென்ஸில்லாத பிச்சைக்காரர்கள் மறைந்துவிடுவார்கள்

எப்படி இருப்பினும் அருவருப்பை உண்டுபண்ணக் கூடிய தொத்து நோய்கள் உள்ள பிச்சைக்காரர்களைப் பொதுத் தெருக் களிலிருந்தும் ஸ்தலங்கள், நகரங்கள், கிராமங்கள் முதலியவற்றி லிருந்தும் வெளியேற்றிவிட வேண்டும், எத்தனைக் கெத்தனை இதைச் சீக்கிரம் செய்கிறோமோ அவ்வளவுக் கவ்வளவு நல்லது. இந்த அபிப்பிராயங்களை யெல்லாம் உனக்குச் சொல்லியிருக்கிறேன். அவகாசம் உனக்கு ஏற்படுகையில் இவைபற்றியும், இவை போன்ற இதர சமூகப் பிரச்சனைகளைப்பற்றியும், நீ யோசி. அவற் றிற்கான பரிகாரங்களைத் தேடச் சீரான முறைப்படி உதவியும் செய்.

21-6-'41.

# கிராமப் புனருத்தாரணம்

**என் அன்புள்ள**
**லக்ஷ்மிக்கு,**

இந்தியாவில் 7 லட்சம் கிராமங்கள் இருக்கின்றன. ஜன சங்கியையில் பெரும்பான்மையோர் அந்தக் கிராமங்களிலேதான் வசிக்கின்றனர். அவற்றைப் புனருத்தாரணம் செய்து மக்கள் அவ்விடங்களில் வசிப்பதற்கு லாயக்காக, நிலைமையைச் சீர்ப்படுத்தி னலன்றி உண்மையில் அபிவிருத்தி ஏற்பட முடியாது. ஆகவே இன்று, 'கிராமப் புனருத்தாரணம்' பற்றி எல்லாரும் பிரபல்யமாகச் சொல்கின்றனர்.

மகாத்மா காந்தி இந்த விஷயம் மிக முக்கியமானதென்று கருதுகிறார். இதை உத்தேசித்துத்தான் சர்க்கா, அ. இ. கிராமக் கைத்தொழில் சங்கம், வர்தாக் கல்வித் திட்டம் முதலியவற்றை அவர் ஆரம்பித்தார். அவரும் சேவாக்கிராமத்திலேயே இருந்து, அவ்விடத்தையே தமது நிரந்தர வாசஸ்தலமாகவும் செய்து கொண்டிருக்கிறார். இந்திய சர்க்கார்கூட இதற்குச் சொல்லள வில் மரியாதை தெரிவிக்கிறது மாகாண சர்க்கார்களும் காங்கி ரஸ் சர்க்கார்களும் இப்பிரச்னையைத் தீர்ப்பதில் ஈடுபட்டன. இதையொட்டி மதுவிலக்கு, விவசாயிகள் கடன் நிவாரணச் சட்டம், கிராம சுகாதாரம், ஜல சப்ளைத் திட்டம் முதலியன ஏற்பட்டன.

கிராமப் புனருத்தாரணத்தில் உள்ள உண்மையான பிரச்னை, கிராமத்தின் பொருளாதார வாழ்க்கையைப்பற்றியதாகும். தென் னிந்தியாவிலுள்ள கிராமங்கள் சம்பந்தப்பட்டவரையில் அநேகம் கிராமங்கள் கவனிப்பாரற்றுப் போய்விட்டன. ஊக்கமும் சிரத்தையும் உள்ளவர்கள் அங்கிருந்து நகரங்களுக்கு வந்துவிட்

டார்கள். கிராமத் தொழில்களெல்லாம் இருக்கும் இடமே தெரியாமல் நசுக்கப்பட்டு விட்டன விவசாயம் நவீன முறைப்படி இல்லாமல் பழைய கால முறையிலேயே நடந்துவருகிறது. வருவாயில் எவ்வித உயர்வும் இல்லாத நிலையில் கிராமங்களில் வாழ்க்கைச் செலவு ஏறிவிட்டது. கிராமங்களில் சௌகார்களும் கடன் தருபவர்களுந்தான் பிழைக்கின்றனர். வழக்குகளின் தொகை பெருகி விட்டது. கிராமப் பொதுவாழ்வு அடியோடு மறைந்து போய் விட்டது; அதன் முழு வனப்பையும் சோபையையும் இப்போது

ஆகவேதான் பிரசங்கிகளும் மற்றவர்களும், 'கிராமங்களுக்குத் திரும்ப வேண்டும்' என்கின்றனர். இதைக் கேட்டு யுவர்களும் யுவதிகளும் சிரிக்கின்றனர். ஆனால் வேறு வழி இல்லை. விவசாயத்தைத் தற்கால நிலைமைக்கு ஏற்றவாறு அமைப்பது முதல் சீர்திருத்தம்; நீர்ப்பாசன மார்க்கங்கள் சீரான நிலையில் இருக்கின்றனவா என்று பார்க்க வேண்டும்; அவசியமானால் கிராமவாசிகளின் உதவியைக்கொண்டே இதைக் கவனித்துக் கொள்ளலாம். எருவைச் சேகரித்துக் கிராமங்களிலேயே உபயோகிக்க வேண்டும்; போக்கு வரத்தை நல்ல முறையில் அமைக்க வேண்டும்; ஜல சப்ளை சுத்தமாகவும் போதுமானதாகவும் இருக்கும்படி செய்ய வேண்டும்; கிராமங்களிலே உள்ள கால் நடைகளை அபிவிருத்தி செய்ய வேண்டும்; ஒவ்வொரு கிராமத்துக்குமோ அல்லது பல கிராமங்களுக்காகச் சேர்ந்து ஒன்றுகவோ ஒரு பள்ளிக்கூடம் இருக்க வேண்டும்; ஒரு வைத்தியசாலையும் ஒரு பொது ரேடியோவும் இருக்க வேண்டும். இவற்றிற்கெல்லாம் பணம் வேண்டும். ஆனால் கிராமவாசிகளின் உதவியும் சர்க்கார் ஆதரவும் இருப்பின் இவற்றையும் செய்யலாம்; இன்னும் அதிகமாகவும் செய்ய முடியும்.

படித்த நமது இளைஞர்களைத் தம்பதிகளோடு கிராமங்களுக்குப் போய் வசிக்கும்படி செய்யலாம். இது மிகவும் முக்கியமென்று நான் எண்ணுகிறேன். கிராமங்களில் தலைவர்கள் இருக்க வேண்டும். அவர்கள் அங்கே கிராமவாசிகளோடு சேர்ந்து வாழ

வேண்டும். தங்களுக்குத் தாங்களே எப்படி உதவி செய்து கொள்வது என்பதை அத் தலைவர்கள் உணர்த்த வேண்டும். முதலில் கிராமங்களிலுள்ள தெருக்களைச் சுத்தமாக வைத்துக் கொள்ள வேண்டும். கிராம ஜல சப்ளையைச் சுத்தமாகவும் தொத்து நோய் பரவ விடாமலும் பாதுகாத்துக்கொள்வது அவசியம். முக்கியமாக வைசூரி, காலரா போன்றவை பரவாமல் நவீன முறைப்படி தடுத்துக்கொள்ள வேண்டும். கிராமங்களுக்குச் செல்லும் இளைஞர்கள் பள்ளிக்கூட உபாத்தியாயர்களாக இருக்கலாம். முதியோர் எழுத்தறிவு வகுப்புகளையும் அவர்கள் அங்கே நடத்தலாம். அன்றாடப் பத்திரிகைகளைப் படித்து ஜனங்களுக்குச் செய்திகளைச் சொல்லலாம். கிராமவாசிகளுக்காகக் கடிதங்கள் எழுதிக்கொடுக்கலாம்; வரும் கடிதங்களையும் வாசித்துச் சொல்லலாம். அதிகச் செலவில் கோர்ட்டுகள் வரையில் போக வொட்டாமல் கிராமச் சச்சரவுகளைத் தீர்த்து வைக்கலாம். ரெவின்யூ, போலீஸ், பாசன இலாகா அதிகாரிகளிடையே லஞ்சப் பழக்கம் இருப்பதை விலக்கவும் உதவி புரியக் கூடும்.

இவ்வேலைகளைக் கவனிப்பதற்காகப் போகும் யுவர்களுக்குப் பயிற்சி அளிக்க வேண்டும். அவசியமாயின் கட்டாயப் பயிற்சி அளிக்க வேண்டும். இதற்காக அவர்களுக்கும் அவர்களது குடும்பத்தாருக்கும் முதல் 5 வருஷம் வரையில் வாழ்க்கைக்குப் போதுமான சம்பளம் தரப்பட வேண்டும்.

எப்படி இருந்தபோதிலும் நமது கிராமங்களைப் புனர் நிர்மாணம் செய்ய வேண்டும். எந்தச் சர்க்காரும் இதை அலட்சியம் செய்வதற்கில்லை. பண பலம், ஆள் பலம் இன்னும் இதர சாதனங்கள் இவற்றையெல்லாம் தேடியே ஆக வேண்டும். நில முறையை அடியோடு மாற்றி அமைக்க வேண்டும். விவசாயத் தொழில் புரியும் குடும்பத்துக்கு 3 ஏகரா நிலமும் ஒரு பசுவும் இருக்க வேண்டும் என்பது நடைபெற முடியாத காரியம் அல்ல. சிறிய நிலங்களுக்குள்ள தீர்வை வெகு அதிகம். அதைக் குறைக்க வேண்டும். விவசாயிகள் தங்கள் தொழிலுடன் உபதொழில்

களாக நூல் நூற்றல், நெசவு, கோழி வளர்த்தல், தேனீக்களை வளர்த்தல், பாய் முடைவது முதலியவற்றைக் கைக்கொள்ள வேண்டும். கிராமங்களும் கிராமவாசிகளும் மீண்டும் புத்துயிர் பெறச் செய்ய வேண்டும். பிறகு எல்லாம் சரியாகிவிடும்.

23-6-'41.

# நகர சுகாதாரம்

**என் அன்புள்ள**
**லக்ஷ்மிக்கு,**

கிராமப் புனருத்தாரணம் முக்கியமானது; நம் நாட்டில் பல நகரங்கள் இருக்கின்றன. அவை நம் கிராமங்களுக்கு உதாரணமாக விளங்க வேண்டும். எனவே அப் பட்டணங்களின் விஷயத்தில் சரியான வகையில் கவனம் செலுத்துவது அவசியம். நகரங்களில் கூட்டம் அதிகம்; ஆகவே சமூகத்தினர் சுத்தமாக இருக்க வேண்டியது முக்கியம். தென்னிந்தியாவிலுள்ள நமது நகரங்கள் சாதாரணமாக நல்ல முறையில் அமைந்திருக்கின்றன. வட இந்தியாவிலுள்ள சில நகரங்களை நீ பார்த்திருக்கலாம். அங்கே தெருக்களெல்லாம் வெகு குறுகலாக இருக்கின்றன. வீடுகளெல்லாம் மிக்க உயரம்; சூரிய வெளிச்சத்துக்கான வசதி இல்லை. ஆதலால் அங்கே சுகாதாரப் பிரச்னை நம்முடையதைக் காட்டிலும் சிக்கலாக இருக்கிறது.

சொந்த விஷயத்திலும் சரி; உடுப்புகள் விஷயத்திலும் சரி; நாம் இதர நாட்டினரைப்போல் சுத்தமாகத்தான் இருக்கிறோம். நான் தென்னிந்தியாவைப்பற்றி மட்டும் சொல்லுகிறேன். நம்மவர்கள் தினசரி ஸ்நானம் செய்து, வஸ்திரங்களையும் சுத்தம் செய்கிறார்கள். இதுதான் முறை. ஆனால் தெருக்களைச் சுத்தமாக வைப்பதற்கும் அதற்கு உதவியாக இருப்பதற்கும் நாம் மற்றவர்களைப் பார்த்துத்தான் தெரிந்துகொள்ள வேண்டியிருக்கிறது.

நான் இங்கே ஓர் உண்மையான விஷயத்தைச் சொல்லியே தீர வேண்டும். பொது இடங்களை அசுத்தமாக்கி அவற்றைக் குப்பைக்காடாகச் செய்வதற்கு நாம் கூசுவதே இல்லை. படித்தவர்கள்கூட இந்த மாதிரி செய்கின்றனர். கூட்டம் மிகுந்த

# அருமைப் புதல்விக்கு

பட்டணங்களிலே நல்ல மாதிரியில், போதுமானபடி கக்கூஸ்கள் கட்டிவைக்க வேண்டும். ஆனால் அவை இருக்கும் இடங்களில் கூடப் பக்கத்திலுள்ள இடங்களை நம்மவர்கள் அசுத்தமாக்கி விடுகின்றனர் இதுபோன்ற ஆபாசங்கள் நடக்காமல் தடுக்க நமது அறிவை வளர்த்துக்கொள்ள வேண்டும். இந்த விஷயத்தில் ஜனங்கள் மனப்பூர்வமாக ஒத்துழைத்தாலன்றி எந்த நகர சபையும் நகரத்தைச் சுத்தமாக வைத்திருக்க முடியாது.

சென்ற வருஷம் நகர சுத்தி இயக்கம்பற்றி எனக்கு அநுபவம் ஏற்பட்டது. பிரசாரம் செய்வது நல்லதுதான் என்றாலும், தண்டனை விதிக்கப்படுமோ என்ற அச்சமும் இருப்பது அவசியம் என்பதை அநுபவ பூர்வமாக நான் அறிந்துகொண்டேன். நமது தெருக்களை அசுத்தமாக்குவோரை ஸ்பெஷல் போலீஸாரை நியமித்து அவர்கள் மூலம் போதுமானபடி தண்டிக்கச் செய்ய வேண்டும் இம்மாதிரி அசுத்தம் செய்பவர்களை விசாரணை செய்யும் கௌரவ மாஜிஸ்ட்ரேட்டுகளும் இன்னும் இதர மாஜிஸ்ட்ரேட்டுகளும், அக்குற்றவாளிகள் பொதுஜன சுகாதாரத்துக்குப் பெரிய அபாயத்தை உண்டாக்கக் கூடியவர்கள் என்பதை உணர வேண்டும்.

நமது நகரங்களைச் சுத்தமாக வைக்கும் விஷயத்தில் பெண்கள் வெகுவாக உதவி புரியலாம். குப்பை வண்டி போன பிறகு வீட்டிலுள்ள குப்பைகளையெல்லாம் அவர்கள் தெருவிலே கொட்டக் கூடாது. மூடிய தொட்டி ஒன்றில் அவற்றைப் போட்டுவைத்து முனிஸிபல் குப்பை வண்டி வந்ததும் அதில் போட வேண்டும். கொழும்பில் இது சரி வர நடக்கிறது. சென்னையிலும் ஏன் அம்மாதிரி செய்யக் கூடாது?

அடுத்தபடியாக, வீட்டுச் சமையற் பாத்திரங்களையும் மற்றப் பாத்திரங்களையும் தெருவில் போட்டுக்கொண்டு கழுவக் கூடாது. சகல விதத்திலும் இது ஆபாசமான பழக்கம். கடைசியாகக் குழந்தைகள் தெருவிலே அசுத்தம் செய்யாமல் பார்த்துக்கொள்ள வேண்டும்.

இதுபோன்ற விஷயங்களைப்பற்றிப் பள்ளிக்கூடங்களில் சிறுவர்களுக்குப் போதிக்க வேண்டும். அப்போதுதான் அவர்கள் நகரத்திற்கு உபயோகமான மக்களாக இருக்க முடியும்.

கூட்டம் மிகுந்த பட்டணங்களிலே எப்போதும் தொத்து நோய்கள் பரவக் கூடும். இரண்டாம் முறை அம்மை குத்திக் கொள்வதைப்பற்றி அபிப்பிராய பேதம் இருக்கலாம். மறு முறை அம்மை குத்திக்கொள்ளும் வழக்கம் அமுலில் உள்ள நாடுகளில் வைசூரியே இல்லாமல் இருக்கிறது எனப் புள்ளி விவரங்களிலிருந்து தெரிகிறது. ஆகவே எல்லோரும் அம்மை குத்திக் கொள்ளும்படி செய்ய வேண்டும். அதேபோல் காலரா, டைபாய்டு போன்ற நோய்களுக்கு இக்காலத்தில் செய்யப்படும் இன்ஜெக்ஷன்கள் பயன் தருவனவாக இருக்கின்றன. ஆனால் தக்க காலத்தில் நோயை அறிந்து சிகிச்சை செய்ய வேண்டும். இவ்விஷயத்திலும் பொதுமக்கள் ஒத்துழைக்க வேண்டும்.

நகரில் கால்நடைகள் இருப்பதால் பொதுச் சுகாதாரத்துக்கு ஏற்படக் கூடிய பிரச்னை மகத்தானது. இங்கிலாந்தில் கறவை மாடுகள் பெருவாரியாக இருக்கின்றன. இருப்பினும் லண்டன் நகரில் ஒரு மாடுகூடக் கிடையாது; பால் மட்டும் சப்ளையாகி விடுகிறது. ஆனால் அங்கே இருப்பதுபோன்ற நிலைமை சென்னையில் ஏற்படுவது சாத்தியம் அல்ல. குடும்பங்களை உத்தேசித்து அவசியமாக இருக்க வேண்டியவை தவிர மற்ற எல்லாக் கால்நடைகளையும் நகரத்துக்கு வெளியே கொண்டு போய்விட வேண்டும். பின்பு கொட்டில்களில் ஈக்கள் இரா; நோய்களும் மறையும். கால்நடைகளுக்கும் மேய்வதற்கு நல்ல புல்லும் குடிக்க நல்ல தண்ணீரும் நல்ல காற்றும் கிடைக்கும். நமக்கும் நல்ல பால் கிடைக்கும்.

நகரில் தயாரிக்கப்படும் தின்பண்டங்களை சுகாதாரமான இடங்களில் தயாராக்கி விற்கும்படி செய்ய வேண்டும். இன்று நிலைமை அப்படி இல்லை. ஏழைகள் உள்ள பிரதேசங்களில் சாக்கடைகள் உள்ள பகுதிகளுக்குப் பக்கத்தில் அடுப்பை

வைத்துக்கொண்டு பலகாரங்களைத் தயாரிக்கின்றனர்; ஈக்கள் மொய்க்கின்றன. ஜனங்கள் அவற்றை வாங்கித் தின்கிறார்கள். இதையெல்லாம் நாம் பார்க்கவில்லையா? இந்த நிலைமை மறைய வேண்டும்.

இவைபோன்ற பிரச்னைகளை யெல்லாம் தீர்க்கலாம். ஆனால் சரியான முறைப்படி நகரம் சுத்தமாக இருக்க வேண்டும் என்ற உணர்ச்சி ஏற்பட வேண்டும். சென்னைக்குக் கூடிய விரைவில், போதிய தண்ணீர் வசதி கிட்டும். எங்கும் தரைக்குக் கீழே போகும் சாக்கடைகள் ஏற்படும். மொத்தத்தில் சென்னை நன்கு அமைந்த நகரம். ஏராளமாகத் திறந்த வெளிகள் உள்ள பகுதிகள் இங்கே இருக்கின்றன. மிக்க வனப்புள்ள கடற்கரை இருக்கிறது. எனவே சென்னை அழகுள்ள நகரமாக மாற வேண்டும்.

24-6-'41.

# குடும்ப வாழ்க்கை

**என் அன்புள்ள**
**லக்ஷ்மிக்கு,**

நேற்று நான், 'குடும்ப வாழ்க்கை' என்பதைப்பற்றி உனக்கு எழுதப் போகிறேன் என்று சொன்னேன். 'சரி, எனக்கு இப் போதே நீ ஏற்பாடு பண்ண ஆரம்பிச்சுட்டாப்போல் இருக்கு!' என்று நீ பரிகாசம் பண்ணினாய். ஒரு விதத்தில் நீ சொன்னதும் உண்மைதான். ஆனால், 'குடும்ப வாழ்க்கை' என்பதுபற்றி நான் பொதுவாகவே இங்கே எழுதப்போகிறேன். தற்கால இந்தியாவில் குடும்ப வாழ்க்கை என்றால் கணவன், மனைவி, குழந்தைகள் என்றே கருதப்படுகிறது. வெகு தூரத்தில் உள்ள இடங்களுக்குப் போய், ஜனங்கள் ஜீவனோபாயத்துக்காகச் சம்பாதிக்க வேண்டியிருக்கிறது. இந்த நிலைமை சில தீராத காரணங்களை முன்னிட்டு ஏற்பட்டதாகும்.

ஹிந்துக்களிடையே உள்ள அவிபக்த குடும்பம் என்ற முறை இப்போது துரிதமாக அழிந்துகொண்டு வருகிறது. அதனால் ஒவ்வொருவரும் சோம்பேறியாக இராமல் உழைத்துச் சம்பாதிக் கும்படியான நிலைமை உண்டாகிறது. அந்த அளவுக்கு விபக்த குடும்பம் உண்டாவது நல்லதுதான். ஆயினும் அழியவிடாமல் பாதுகாக்க வேண்டிய சில நல்ல அம்சங்கள் அவிபக்த குடும்ப முறையில் உள. தகப்பனார் இல்லாத குழந்தைகள், விதந்துக்கள், மைனர்கள் முதலியவர்களுக்கு இம்மாதிரி அவிபக்த குடும்ப மாக இருப்பதால் ஆதரவு உண்டு. அத்துடன் அவிபக்த குடும் பத்தில் இருப்பவர்களிடையே பொறுமை, அநுதாபம், நல்லு ணர்ச்சி ஆகிய அம்சங்கள் வளரும். சிறந்த முறையில் வாழ் வதற்கு இதுபோன்ற குடும்ப நிலைமை நல்ல பயிற்சி அளிக்கிறது.

# அருமைப் புதல்விக்கு

சகோதரர்கள், சகோதரிகள், மாமா, அத்தை, தாத்தா, பாட்டி யுடன் சேர்ந்து வாழ்வது அறிவை வளரச்செய்கிறது. அதற்குச் சந்தர்ப்பம் வாய்க்கிறது. நீ எங்களுக்கு ஒரே குழந்தை. அதனால் பலருடன் சேர்ந்து வாழக்கூடிய பெரிய குடும்பம் இல்லாத குறை உனக்கு உண்டு. நான் எழுத வேண்டாம்; உனக்கே நன்கு தெரியும்; சிற்றப்பா பெரியப்பா மக்களைப் போய்ப் பார்க்கும்போதும் அவர்கள் இங்கே வந்து தங்கும்பொழுதும் நீ எவ்வளவு சந்தோஷம் அடைகிறாய் என்பதை அறிவேன். அந்த மாதிரி சந்தோஷம் அடைவது மனிதனிடத்தில் மட்டுமே அதிகமாகக் காணப்படும் உணர்ச்சியாகும். இந்த விதமாக அவி பக்த குடும்ப முறையில் அநேகம் அநுகூலங்கள் இருக்கின்றன.

ஆனாலும் இது வெகு எளிதில் சீர்கேடடைந்து சதா சண்டை சச்சரவுகள் ஏற்பட்டு, சந்தோஷம் இல்லாமலும் போய்விடக் கூடும். மனிதன் சுபாவத்தில் சுயநலம் கருதுபவன்; பட்ச பாதகமாகவும் இருப்பவன். தாத்தாவோ பாட்டியோ குறிப்பிட்ட ஒரு பேரனையோ பேத்தியையோ ஆசைப்பட்டு நேசிப்பார்கள். தகப்பனும் தாயும் தங்கள் சகோதர சகோதரிகளின் குழந்தைகளைவிடத் தங்கள் குழந்தைகளையே உயர்வாக எண்ணி, அவர்களிடம் அன்பு செலுத்துவார்கள். மருமக்களுக்குப் பொறாமை ஏற்படும். மருமகளிடம் இருப்பதைவிட மகளிடம் தாயாருக்கு அதிக அன்பு ஏற்படுவது உண்டு. சிலர் நிறையச் சம்பாதிப்பார்கள்; இன்னும் சிலர் அப்படிச் சம்பாதிக்க முடியாமல் இருக்கலாம். சிலர் சம்பாதிக்காமலே இருப்பதும் உண்டு. இவையெல்லாம் நடக்கின்றன; ஆனால் இவை நடக்க வேண்டாதவை; பார்க்கப்போனால் ஒன்றுபட்ட குடும்பத்திற்கு இடமே இல்லைபோல் காண்கிறது.

அன்பு, தன்னலம் இல்லாமை, விவேகம் இவைகள் இல்லாமற் போனால் சிறிய குடும்பங்களில்கூடச் சிக்கல்கள், கஷ்ட நிலைமைகள் ஏற்பட்டே தீரும். உனக்கு நான் வற்புறுத்திச் சொல்ல வேண்டிய விஷயம் இது. குடும்பத்தில் பெரியவர்களாக இருப்பவர்களுக்கு மரியாதை கொடுக்க வேண்டும்.

அவர்கள் எப்பொழுதும் உன்னிடம் அன்பாகவே இருப்பார்கள். சில சமயங்களில் அவர்கள் கடுமையாக இருப்பது போல் உனக்குத் தோன்றலாம். நியாயம் இல்லாமலும் சில சமயங்களில் அவர்கள் நடக்கக் கூடும். ஆனால் நீ அவர்களுடைய கருத்தறிந்து நடக்க வேண்டும்.

சுடுசொல்லைக் குடும்பத்தில் உபயோகித்தால் அது மிகுந்த கொடுமையான குற்றமாகும். இந்த விஷயத்தில் நானும் ஒரு பெரிய குற்றவாளிதான். சுமுகமான பதில் கோபத்தைப் போக்கிவிடும் என்பதை நான் உணர்ந்திருக்கிறேன். உணர்ந்தும் வருகிறேன். சுமுகமான முறையில் பதில் சொல்வதால் வாழ்க்கை எல்லோருக்கும் இன்பமயம் ஆகிறது. நீ எப்போதும் மரியாதையுடனும் பட்சமாகவும் இருக்கப் பயில வேண்டும். ஒருபோதும் துடுக்காகப் பேசிவிடாதே. இதைச் சொல்வது எளிது, செய்வது கஷ்டந்தான். நான் நடப்பது போல் நடக்காதே. எனைப்போலவே உனக்கும் கொஞ்சம் முன் கோபம் உண்டு என்பதைக் கவனித்திருக்கிறேன். இதை விட்டுவிடு. நீ சின்னப் பெண். அதனால் இந்தத் துர்க்குணத்தை முளையிலேயே கிள்ளிவிட முடியும்.

உனக்குச் சரிசமமான வயதுள்ளவர்களிடையே உனக்கு அதிகப் பழக்கம். அவர்கள் சௌகரியமான நிலைமையில் இருக்கும்படி கவனித்துக்கொள்ள வேண்டும். அவர்களுடன் விளையாடு; கிண்டல் செய்; உன்னையும் அவர்கள் கேலி செய்தால் அதற்கு இடம் கொடு. உயர்வு, தாழ்வு என்ற உணர்ச்சிக்கு இடம் கொடுக்காதே குழந்தைகளிடம் அன்பாக இரு. உனக்குக் குழந்தைகளைக் கண்டால் பிரியம். வீட்டில் உள்ளவர்களிடம் தாராளமாகச் சம்பாஷிக்கப் பழக வேண்டும். சௌஜன்யமாக நாம் குடும்பத்தில் பழகினோமானால் குடும்ப வாழ்க்கை வெகு பயனுடையதாக இருக்கும் இந்த விஷயத்தில் நான் சரியாக நடக்கவில்லை என்பதை அறிவேன். இனிமேலாவது சரியாக நடக்க வேண்டும் என்று முயன்றுகொண்டிருக்கி



8

றேன். நீயோ இப்பொழுது முதலே சரியாக நடக்கப் பழகி வரவேண்டும்.

நம் குடும்பங்களில் எல்லாரும் தினசரி ஒரு மணி நேரமாவது சேர்ந்தாற்போல் கூடியிருந்து குடும்ப விஷயம், உலக விவகாரம் முதலியவற்றைப்பற்றிப் பேச வேண்டும். பரஸ்பரம் ஒருவரை ஒருவர் நன்கு தெரிந்துகொள்ளவும் நேசிக்கவும் கற்றுக்கொள்ள வேண்டும்.

வேலைக்காரர்களைப் பட்சமாக நடத்த வேண்டும். அவர் களும் மனிதப் பிறவிகள்தாம். பட்சமாக இருந்தால் அதில் அவர் களுக்குத் திருப்தி; அதற்கேற்றபடி நடக்கவும் நடப்பார்கள். வேலைக்காரர்கள் விஷயத்தில் நாம் ஜீவகாருண்யத்துடன் இருப் பது விசேஷம்.

25-6-'41

# கிளப் வாழ்க்கை

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

கிளப் வாழ்க்கை என்பது இந்தியாவில் புதிதாக ஏற்பட்ட விஷயம். இந்தியாவில், 'கிளப்' என்ருல், ஜனங்கள் பணத்தைக் கொடுத்துவிட்டு, சாப்பாடு முதலிய வசதிகளைப் பெறும் இடம் என்று கருதுகிருர்கள். மேல் நாடுகளில் அப்படி அல்ல. நான் இங்கே சொல்லப்போகும், 'கிளப்' என்ற பதத்தின் கருத்து வருமாறு. தாங்களாக ஒரு சிலரைப் பொறுக்கிக்கொண்டு ஒன்று சேர்வது; பிற்பகலிலும் மாலை வேளைகளிலும் ஒன்றுகூடுவது; அப்போது சம்பாஷணை செய்வது. சிற்றுண்டி, விளையாட்டுக்கள், புத்தகசாலை இவைகள் அங்கே அமைந்திருக்கும். வாசகசாலையோ எழுதும் அறையோ இருக்கும். ஸ்நான வசதிகளும், ஓடி, ஆடி விளையாடும் சௌகரியங்களும் அங்கே உண்டு அநேகமாக இந்தக் கிளப்புகளில் படுக்கை அறைகளும் உண்டு. அங்கத்தினர்கள் பணம் கொடுத்து, வாடகை பேசி, அவற்றில்

அங்கத்தினர்களுக்குள் நெருங்கிய சம்பந்தம் வேண்டியது, கிளப் வாழ்க்கையின் முக்கிய அம்சம். அநேக கிளப்களில் அங்கத்தினர்கள் தொகை பெரியதாகி விடுவதால் மேலே சொன்ன நெருங்கிய தொடர்பு ஏற்படச் சாத்தியமில்லாமல் போகிறது. அதனல், ஏதேனும் ஒரு கொள்கையை வைத்து அங்கத்தினர்களின் தொகையை வரையறை செய்ய முயற்சி செய்யப்படுகிறது. நேஷனல் லிபரல் கிளப்பில் 1919-ம் வருஷம் முதல் நான் மெம்பர். கன்ஸர் வேடிவ்களுக்காக உள்ள சங்கத்துக்கு, 'கார்ல்டன் கிளப்'

என்று பெயர். 'லேபர் கிளப்', 'ஓவர்ஸீஸ் கிளப்'போன்ற பல கிளப்புகளும் இருக்கின்றன.

இக் கிளப்புகளி லெல்லாம் வரவேற்புக்காகப் பெரிய அறைகள் உண்டு. சௌகரியமாக உட்கார்ந்து சம்பாஷித்துக் கொண்டிருப்பதற்கான அறை உண்டு. சாப்பாட்டுக்காக ஒரு பெரிய அறை, பிலியர்டு அறை, ஸ்நான அறைகள், புத்தகசாலை, வாசக சாலை முதலியவைகள் அங்கே உண்டு. மெம்பர்கள் அங்கே தங்களுடைய அலுவல்களை அமைதியாகக் கவனிக்கலாம்; புத்தகங்கள் படிக்கலாம்; கடிதங்கள் எழுதலாம்; சாப்பாட்டு வேளைகளிலோ வேறு சமயங்களிலோ நண்பர்களைச் சந்தித்து அளவளாவலாம். அன்றுடம் வரும் பத்திரிகைகளைப் படிக்கலாம். நல்ல புத்தகசாலைகளும் இருக்கின்றன. கிளப்பில் விளையாடுவதற்கான வசதிகளோ இருக்கவே இருக்கின்றன.

இவை எல்லாம் சாதாரண விஷயங்கள். ஆனல் உண்மையான கிளப் வாழ்க்கையின் விசேஷ அம்சம் என்னவெனில் பல தரப்பட்ட தொழில்களிலும் ஈடுபட்டிருக்கும் நண்பர்களைச் சந்தித்துப் பேசிப் பழகச் சந்தர்ப்பம் கிடைப்பதே யாகும். அது தான் உண்மையான கிளப் வாழ்க்கை. இந்தச் சம்பாஷணை அற்ப விஷயங்களைப்பற்றியதாயும், வீண் வம்பளப்பாகவும், ஆகி விடக் கூடும் என்பது உண்மைதான். எப்போதேனும் இம்மாதிரி நேர்ந்தால் பரவாயில்லை. அம்மாதிரி நேருவதைத் தடுக்கவும் முடியாது. மெம்பர்கள் படித்தவர்களாகவும் நன்கு சம்பாஷிக்கக் கூடியவர்களாகவும் இருப்பின் கிளப் வாழ்க்கையினுல் ஒவ்வொருவருடைய மனேபாவமும் நன்கு வளம்பெறும்; அநுதாபத்துடன் கூடிய மனேநிலை விசாலமடையும்; அத்தோடு நல்ல ஹாஸ்ய ரஸ உணர்ச்சியும் பெருகும்.

நமது நாட்டில் இதுபோன்ற முறையில் கிளப்புகள் பெருவாரியாக இனித்தான் ஏற்பட வேண்டியிருக்கின்றன. இந்தியர்களுக்கும் ஐரோப்பியர்களுக்குமாகச் சேர்ந்து, கிளப்புகள் ஆரம்பிக்க முயற்சி நடந்து வருகிறது. இதுவரை

அவை உருவான முறையில் வெற்றி பெற்றதாகக் காணவில்லை. அந்தவிதமான கிளப்புகள் உண்டாக வேண்டும் என்பதை ஒப்புக்கொள்கிறேன். அதற்காகச் செய்யும் முயற்சிகளுக்கு நாம் ஆதரவு அளிக்க வேண்டியது அவசியமே. ஆயினும் சீக்கிரமாகவும் பெருவாரியாகவும் பலன் கிடைக்க வேண்டுமானால் இந்தியர்களுக்குள்ளேயே, கிளப் வாழ்க்கை அபிவிருத்தி பெறும்படி சகல முயற்சியையும் செய்ய வேண்டும்.

கிளப் வாழ்க்கையை நாம் விரும்ப வேண்டும். நமக்குக் கல்வி அறிவு, பரந்த அளவில் வளர்ச்சி பெற அவ்வாழ்க்கையை ஒரு சாதனமாகக் கருத வேண்டும். அத்துடன் வீட்டு வாழ்க்கைக்கும் கிளப் வாழ்க்கைக்கும் ஒற்றுமை இருக்கும்படி செய்ய வேண்டும். குடும்ப வாழ்க்கை முக்கியமானது. கிளப் வாழ்க்கை அதைப் பாதிக்கும்படி இருக்கக் கூடாது.

ஆண்கள், பெண்கள் இருவர்களுமாகச் சேர்ந்தாற்போல் உள்ள கிளப்புகள் மேலைநாடுகளில்கூட இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. நேஷனல் லிபரல் கிளப்பில், பார்வையிட வரும் பெண்கள்கூட வாசலுக்கு அருகில், 'பெண்களுக்கு' என்று குறிப்பிட்ட ஓர் அறை வரையில்தான் போகலாம். நம் நாட்டிலும் அதுபோன்ற கிளப்புகள் இல்லை.

பெண்கள் மட்டுமே சேரும் கிளப்புகளும் இருக்கின்றன. உதாரணமாகத் தியாகராய நகரில் ஒரு கிளப் இருக்கிறது. உன் தாயார் அதன் தலைவியாக இருக்கிறாள். நீ அதில் மெம்பர். ஆடவர்களைப்போலவே பெண்களும் தங்கள் நண்பர்களைச் சந்தித்துப் பழக வேண்டும். அப்படிப் பழகுவதற்குப் பழைய காலத்தில் வேறுவிதமாகச் சந்தர்ப்பங்கள் ஏற்பட்டிருந்தன. ஆற்றங்கரை, குளக்கரை, கோயில், கடைத்தெரு முதலிய இடங்களில் பெண்கள் சந்தித்துச் சம்பாஷிப்பார்கள். பிற்பகல் வேளைகளில் இன்னொருவர் வீட்டுக்குப் போய்ச் சந்திப்பார்கள். அது ஒரு சிறு சான கிளப் வாழ்க்கையாக இருந்தது. கமலாம்பாள் சரித்திரத்தில் காலஞ்சென்ற பி. ஆர். ராஜம் ஐயர் இதைத் தெரிவித்துள்

ளார். இவற்றில் சில கெடுதல்களும் உண்டு; நல்ல அம்சங் களும் உண்டு.

பெண்களுக்காக உள்ள கிளப்புகளின் நேரத்தைச் சரிவர வகுக்க வேண்டும். வீட்டுக் காரியங்கள் செய்வதற்கு முரணுகக் கிளப் நேரம் இருக்கக் கூடாது. டில்லி, ஸிம்லா ஆகிய இடங் களிலுள்ள பெண்களின் சங்கங்கள் பிற்பகல் வேளைகளில்தான் நடக்கின்றன. உன் அம்மாவுக்கு இது தெரியும். அதுபோலவே தான் இங்கும் இருக்க வேண்டும்.

இதுபோன்ற பெண்கள் சங்கங்கள் நன்கு நிறுவப்பட்டால் தேகம், புத்தி, சமூகம் முதலிய எல்லா அம்சங்களிலும் நல்ல பயன் ஏற்படும் காரியங்கள் செய்யலாம். ஆடவர்களைப்போலவே பெண்களும் கிளப் வாழ்க்கையைச் சுலபமாகவும் சுகமாகவும் அநுபவிப்பதற்கான குணங்களைக் கற்றுக்கொள்ள வேண்டும்.

உன்னைப்போன்ற யுவதிகளே பெண்கள் கிளப்புகள், நல்ல உயர்ந்த முறையில் நடைபெறும்படி செய்ய வேண்டியவர்கள்.

26-4-'41.

## ஹாஸ்யச் சுவை

**என் அன்புள்ள**
**லக்ஷ்மிக்கு,**

'ஹாஸ்யச் சுவையை வளர்த்துக்கொள்ள வேண்டும்' என்று சொல்லப்படுவதை நாம் அடிக்கடி கேட்கிறோம். பொதுவாக அம்மாதிரி செய்ய வேண்டியதுதான் என்றே நாமும் அபிப்பிராயப்படுகிறோம். ஆனால் இம்மாதிரி சொல்வதன் அர்த்தம் என்ன என்பதைத் திட்டமாக நாம் அறிந்தோமா? இதைச் சொன்னதும் உடனே மனத்தில் உதிக்கும் அர்த்தம் ஒன்றே தான். நாம் பிறரைக் கேலி செய்வது, பிறர் நம்மைக் கேலி செய்தால் அதைச் சந்தோஷமாக அநுபவிப்பது என்பதுதான் அந்த அர்த்தம். அந்த மாதிரி ஹாஸ்யமாகப் பேசாமலும், ஹாஸ்யத்தை அநுபவிக்காமலும் இருந்துவிடுவோமாயின் வாழ்க்கையில் சுவையே இராது. ஆனால் நன்மையான ஹாஸ்யப் பேச்சும் உண்டு; தீமையான ஹாஸ்யப் பேச்சும் உண்டு. அநேகர் பிறரிடம் காணப்படும் அங்கஹீனங்களை வைத்துக்கொண்டு ஹாஸ்யமாகப் பேசுகிறார்கள். அதனால் கேலி செய்யப்படுகிறவர்கள் எவ்வளவு வருத்தப்படுவார்கள்! இந்த மாதிரி செய்வது கெட்ட குணம் என்பதுடன் மிகக் கொடியதும் ஆகும். ஒருவருக்கு அங்கஹீனம் உண்டாயிருந்தால் அதற்கு அவர் என்ன செய்வார்? படித்து அறிவு படைத்தவர்கள் மனத்திலே மேலே சொன்னது போன்ற சந்தர்ப்பங்களில் அநுதாபமே பிறக்கும்; மறந்தும் கொடுமையான ஹாஸ்யங்களைச் செய்யத் தோன்றாது. இதைப்போல் பிறரைப் பார்த்துப் பரிகாசம் செய்பவர்களுக்கு நீ இடம் கொடுக்கமாட்டாய் என்பது என் நம்பிக்கை; நீ அதற்கு இடம் கொடுக்கவில்லை என்பதும் எனக்குத் தெரியும்.

## அருமைப் புதல்விக்கு

நேரடியாக ஆளைக் குறிக்காமல் செய்யும் ஹாஸ்யம் விசேஷமாகும். அதற்கு வேண்டிய கதைகளும் சம்பவங்களும் எத்தனையோ இருக்கின்றன. அவற்றைத் தெரிவித்து அநுபவிக்கலாம். ஆளைக் குறித்த பரிகாசமானல் அது பரிகாசம் செய்யப்படுபவருக்கு நன்மை செய்வதாக இருக்க வேண்டுமே யன்றி அவரைப் புண்படுத்துவதாக இருக்கலாகாது. உதாரணமாக ஆங்கிலம் நன்கு தெரியாத ஒருவர் ஆங்கிலத்திலேயே பேச முயலலாம். அல்லது தமக்குச் சிறிதும் தெரியாத ஒரு விஷயத்தைப்பற்றிப் பேச முற்படலாம்; அல்லது அவர் தமது மனேசக்தி, தேக வலு இவைபற்றி மிகைப்படுத்திக்கொண்டு பிரதாபம் அடித்துக்கொள்ளலாம். இதுபோன்ற கட்டங்களில் அவரைப்பற்றித் துவேஷமோ விஷமோ இல்லாத முறையில் ஹாஸ்யம் பேசினல் அது நன்ருக இருக்கும். அதே சமயத்தில், சம்பந்தப்பட்டவருக்கு இதனல் வருத்தம் ஏற்பட்டாலும் நாளடைவில் அவருக்கு அநுகூலமே ஏற்படும்.

தமாஷ் என்று எண்ணப்படும் ஒருவகை ஹாஸ்யம் இருக்கிறது. நான் அதைப் பார்த்திருக்கிறேன். நீயும், உன் அம்மாவும் கூடப் பார்த்திருக்கலாம். ஆனல் அது ஹாஸ்யம் அல்ல. நமக்கு முன்பின் தெரியாத ஒருவருக்கு ஒரு சிறு விபத்து நேருவதாக வைத்துக்கொள்ளலாம்; அவரை நமக்கு முன்பின் தெரியாது. வாசல்படி ஏறும்போது தவறி விழுந்துவிடுகிருர். அநேகமாக இதுபோன்ற சந்தர்ப்பங்களில் அவரைப் பார்த்து ஜனங்கள் சிரிக்கிருர்கள். இது ஹாஸ்யமே அல்ல. இப்பேர்ப்பட்ட சமயங்களில் மனத்தில் அநுதாப உணர்ச்சியும், உதவி செய்ய வேண்டும் என்ற எண்ணமும் உதிக்க வேண்டுமே அன்றி நகைப்பு உண்டாகக் கூடாது. இந்த மாதிரி சந்தர்ப்பங்களில் நகைப்பது வெறும் மிருக உணர்ச்சியே அன்றி வேறன்று. அந்த உணர்ச்சிக்கு இடம் கொடுக்கவே கூடாது. தேக நலம் கெட்டுக் கஷ்டப்படுவோருக்கு, உதவி செய்ய வேண்டும் என்ற எண்ணம் நம் நாட்டில் மென்மேலும் வளர வேண்டும் என்று ஆசைப்படு

# ஹாஸ்யச் சுவை

ஹாஸ்ய ரஸ உணர்ச்சி என்பது தமாஷ் செய்வதைவிட மேம்பட்டதாகும். நம் குறைகளை உணரும்படி செய்வதுதான் உண்மையான ஹாஸ்ய உணர்ச்சி. நம்மைத் தவிரக் குடும்பத்திலும் பள்ளிக்கூடத்திலும் உலகத்திலும் எவ்வளவோ பேர் இருக்கிறார்கள். அநேகர் நமக்குச் சரிசமமாக இருப்பவர்கள்; சிலர் உயர்ந்தவர்கள். நாம்மட்டுந்தான் உலகத்தில் முக்கியமானவர்கள் என்பதில்லை. முக்கியமானவர்கள் என்று எண்ணிக்கொள்ள நமக்கு உள்ளதைப்போலவே பிறருக்கும் உரிமை உண்டு என்பதை மறக்கக் கூடாது.

ஆகவே உன் சொல்லிலும் செயலிலும் இவற்றையெல்லாம் நன்கு கவனித்துக்கொள்ள வேண்டும். நமக்கு நல்லதோ கெட்டதோ ஏற்படுகிறது. நமக்கு ஹாஸ்யச் சுவை இல்லாவிட்டால் அவற்றை நாம் மிகைப்படுத்திவிடுகிறோம். நாம் ஒன்று, நிரம்பச் சந்தோஷமாக இருக்கிறோம்; அல்லது நிரம்பத் துயரப்படுகிறோம். இவற்றை நாம் விலக்க வேண்டும்.

கீதையில் பகவான் சொல்லுகிறார்:

' துக்கத்தில் நாம் துயரப்பட்டுத் துவண்டு போகக் கூடாது; சந்தோஷ காலத்திலும் அகங்காரம் அடையக் கூடாது.

(दुःखेष्वनुद्विग्नमनाः सुखेषु विगतस्पृहः).

நல்ல ஹாஸ்யச்சுவை இருந்தால் இப்படி நேராது. இந்த உலகம் பெரிது; பிறர் நம்மைவிட அதிருஷ்டசாலிகளாகவாவது அல்லது துரதிருஷ்டசாலிகளாகவாவது இருப்பார்கள். இதை உணர்ந்தால் உனக்கு எந்த அளவுக்கு எது எதை நிர்ணயிக்க வேண்டும் என்ற உணர்ச்சி தோன்றும்.

இவ்வுணர்ச்சி காரணமாக உனக்கு உண்மையான அடக்கம் ஏற்படும். நமக்கு நல்ல தீர்மானங்கள் வேண்டும்; அவற்றின்படி நடக்கவும் வேண்டும். ' அடிக்கடி சந்தேகம் கொள்பவன் மடிவான் (संशयात्मा विनश्यति)'. நமக்குப் பிடிவாதம் கூடாது.

நாம் தவறிழைக்கக் கூடும். எனவே எதிர்க்கட்சியார் சொல்வதை மரியாதையாகக் கேட்டுக்கொள்ள வேண்டும். நமது முடிவு களையும் புனராலோசனை செய்ய வேண்டும். அநேகமாக அடிக்கடி போலிக் கௌரவம் நமக்குக் குறுக்கே வந்து நின்றுவிடுகிறது. நான் தவறு செய்தேன் என்று பகிரங்கமாக ஒப்புக்கொள்ளலாமா? இதுபோன்ற நிலைமையில் நல்ல ஹாஸ்ய உணர்ச்சி இருந்தால் அது உதவியாக இருக்கும். 'தவறுவது சகஜம்' என்பது பழமொழி. ஆனால் தவற்றையே தொடர்ந்து இழைப்பது மனித வர்க்கத் துக்கு ஒத்ததல்ல; அது மகா மட்டம். நாம் எப்போதாவது தவறு செய்வோம் என்பதை உணர்ந்து அடக்கமாக இருக்க வேண்டும்.

ஹாஸ்யச் சுவை காரணமாக, மனித வர்க்கத்திடம் திடமான நம்பிக்கையும் கௌரவமும் ஏற்படும். பார்க்கப்போனால் மனிதன் பலவீனமானவன்; அவன் அடிக்கடி தவறு இழைக்கிறான். தவற் றைத் திருத்திக்கொள்ள முயல்பவனுக்குப் பெருமை உண்டு. அவன் வேண்டுமென்றே தப்புச் செய்யவில்லை. இந்த உலகத்தில் நல்லவர்களும் உண்டு; கெட்டவர்களும் இருக்கிறார்கள். தவறு செய்பவர்களைச் சுட்டிக்காட்டிக் குறை சொல்வது சுலபம். இதற்காகத் தப்புச் செய்பவர்களைச் சகித்துக்கொண் டிருக்க வேண்டும் என்று நான் சொல்லவில்லை. ஆனால் சமூக க்ஷேம அபிவிருத்தியின் பொருட்டு நாம் அவர்களை ஹாஸ்ய ரஸ உணர்ச்சி யுடன் சீர்திருத்துவதோடு நாமும் வெகு சரியாக நடந்துவிட வில்லை என்று நினைந்து அடங்க வேண்டும். இந்த மனோபாவத் துடன் தவறு செய்பவருக்கு உதவி செய்ய வேண்டும்.

மற்றவர்கள் செய்யும் தவறுகளை மறந்து, மன்னித்து அவர் கள் திருந்த உதவிசெய்து, சமுதாயத்தைச் சரிப்படுத்தும் பட்சத் தில் நாம் நமக்கும் பிறருக்கும் உலகுக்கும் சிறந்த சேவை செய் தவர்களாக ஆவோம்.

நல்ல,' உண்மையான ஹாஸ்யச் சுவை இருப்பதன் பயன்தான் இது.

# சாப்பாடு

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

நான் உனக்கு இதுவரையில் அநேக விஷயங்களைப்பற்றி எழுதியிருக்கிறேன். இந்தக் கடிதத்தில் வெகு சாமானியமான ஆனால் முக்கியமான ஒரு விஷயத்தைப்பற்றி எழுதுகிறேன். சாப்பிடும் முறைபற்றியதே அவ்விஷயம். குடும்பத்தில், தான் மட்டுந்தான் என்ற நினைப்போடு இருந்து, நண்பர்களைக்கூடச் சாப்பிடக் கூப்பிடும் வழக்கம் இல்லாமல் இருக்கும் பேர்வழிகளைத் தவிர, மற்றவர்களெல்லாம் நண்பர்கள், உறவினர்கள், ஊழியர்கள் இவர்கள் முன்னிலையில்தான் சாப்பிட வேண்டி இருக்கிறது. ஒருவரையுமே கூப்பிடாமல் தான்மட்டும் தனியே சாப்பிடுவது என்பது அபூர்வம். சாப்பிடுவதுதான் தங்கள் வேலை என்று இருப்பவர்கள் சிலர் உண்டு. ஆனால் நம்மில் பெரும்பான்மையோர் உயிர் வாழ்வதற்காகவே உண்கிறோம். சாப்பிடும் முறையிலும் ஒரு தனி அழகு உண்டு. நாம் அதற்கு அநுசரணையாக நடக்க வேண்டும். ஒரு வைபவத்தில் தமாஷாகச் சாப்பிட வேண்டுமானால் மற்றவர்களுடன் சேர்ந்துதான் நாம் உணவு கொள்ள வேண்டும்.

முதலில் வீட்டில் இருந்தாலும் சரி; வெளியில் இருந்தாலும் சரி; அவசரப்படாமல் சாப்பிட வேண்டும்; சாப்பிடும்போது வேறு கவனமும் கூடாது. மெதுவாக இருந்து அமைதியாகப் பேசிக்கொண்டே சாப்பாட்டைச் சுவைத்து உண்ண வேண்டும். அநேகர் படு அவசரமாக அள்ளி அள்ளிப் போட்டுக்கொள்கிறார்கள். இது நல்ல பழக்கத்தின் அடையாளம் அல்ல. சாப்பிடும் போது வாயை, 'ஹா' என்று திறந்துகொண்டிருக்கக் கூடாது.

உதட்டை மூடிய வண்ணம் சாப்பிட வேண்டும். கொஞ்சங் கொஞ்சமாகவும் சிறிய பிடிகளாகவும் உணவை எடுத்துக் கொண்டால்தான் உதட்டை மூடியவண்ணம் சாப்பிடலாம். சாப்பிடும்போது கூச்சல் போடக் கூடாது. அநேகர் இரைச்சல் போட்டுக்கொண்டே சாப்பிடுகிறார்கள். கொஞ்சமாக மென்று சாப்பிடுவது உண்பவருக்கே நல்லது; இதனால் ஜீர்ணமாவது சுலபமாக இருக்கும். மேலும் உணவை நன்கு சுவைக்கவும் முடியும்.

கையால் சாப்பிடுவதா ஸ்பூன், போர்க் முதலியவற்றின் உதவி கொண்டு சாப்பிடுவதா? என்றால் அதற்குத் திட்டமாகப் பதில் சொல்வதற்கில்லை. இது அந்த அந்த நாட்டின் சீதோஷ்ண ஸ்திதியைப் பொறுத்த விஷயம். டில்லியிலும் சிம்லாவிலும் குளிர் அதிகம். எனவே நாம் மேஜைமீது உணவை வைத்துக்கொண்டு, நாற்காலிகளில் உட்கார்ந்தவண்ணம் சாப்பிடுகிறோம். அப்போது கூட நாம் கையாலேயே எடுத்துச் சாப்பிட்டோம். மேஜைமீது உணவு பரிமாறுவது என்று ஏற்பட்டுவிட்டால் கத்தி, போர்க், ஸ்பூன் முதலியவற்றை உபயோகிப்பது சௌகரியமாக இருக்கும். புதிய இலைகளைப் போட்டு, கைகளைச் சுத்தமாக்கிக்கொண்டு சாப்பிடுவது, பிளேட்டுகளில் சாப்பிடுவதைவிட மிகவும் சுகாதார மானதுதான். என்னதான் தட்டுகளைச் சுத்தமாக வைத்த போதிலும் புதிய இலைகளில் சாப்பிடுவதற்குச் சமானமாக இராது. இதில் முக்கிய அம்சம் சுத்தந்தான்.

இன்னொரு முக்கியமான விஷயம் இருக்கிறது. சாப்பிடும் போது சாதாரணமாக நாம் மணைப்பலகையில் உட்கார்ந்துகொள் கிறோம். நீ அப்படி உட்காருவதில்லை. பலகையில் உட்கார்ந்து சாப்பிடப் பழகிக்கொள்ள வேண்டும். தரையில் இலையைப் போட்டுவிட்டு நாம் சாப்பிட ஆரம்பிக்கிறோம். தரையை நாம் சுத்தி செய்கிறோம் என்பது உண்மைதான். கொழும்பிலும் இன்னும் சில இடங்களிலும் கல்லாலோ அல்லது சலவைக் கல்லாலோ ஒரு மேடை அமைத்து, அதன்மீது இலை போடுகிறார்

கள். அந்த இடம் அடிக்கடி சுத்தம் செய்யப்படுகிறது; இதனால் தரையிலுள்ள தூசி இலைகளில் விழுவதில்லை.

நாம் பரிமாறும் முறை அவ்வளவு சரியாக இல்லை. அடிக்கடி இலையில் அதிகமாகப் பண்டங்களைப் போடுகிறோம். போதுமான அளவுதான் போட வேண்டும்; இதில் குறையவும் கூடாது; அதிகமும் கூடாது. நம்முடைய உறவினர்கள் சிலரும் நண்பர்கள் சிலரும் நன்கு புசிப்பதை நாம் பார்த்திருக்கிறோம். போட்டபோது எப்படி இருந்ததோ அதேபோல் அவர்கள் சாப்பிட்டு முடிந்த பின்னும் இலை இருப்பதை நாம் கண்டிருக்கிறோம். இது நல்ல முறை. நீயும், நானும் அப்படிச் செய்வதில்லை.

சாப்பாட்டு வேளையில் நல்ல சம்பாஷணை நடத்த வேண்டும். ஆனால் நமது நாட்டில் பெரிய பொது விருந்துகளில் அடிக்கடி நாம் உரக்கக் கூச்சல் போடுகிறோம். ஒவ்வொருவரும், 'இதைக் கொண்டுவா', 'அது வேண்டும்' என்று பேரிரைச்சல் போடுகின்றனர். இதனால் விருந்தின் லட்சணம் கெட்டு, விகாரமான நிலைமை மேலோங்கிவிடுகிறது. நம் வீடுகளில் விருந்து நடக்கையில் பரிமாறுவதைப்பற்றி நான் அதிக ஆர்ப்பாட்டம் பண்ணுவதாக உன் அம்மா அடிக்கடி புகார் சொல்கிறாள். உண்மை; நான் செய்வது தப்பு என்று ஒப்புக்கொள்கிறேன். ஏதாவது வேண்டும் என்று கேட்கும் நிலைமையில் நாம் விருந்துகளை நடத்தக் கூடாது என்பதே என் கருத்து. இலையில் நாம் அதிகப் படியாகப் போடும் முறையைத் தவிர்க்க வேண்டியதுதான். சாப்பிடுபவர்களுக்கும் பரிமாறுபவர்களுக்கும் ஒருமைப்பாடு இருக்க வேண்டும். நமது பொது விருந்துகள் இப்போது இருப்பதைவிட இன்னும் அமைதியாகவும் கண்ணியமான முறையிலும் இருக்க வேண்டும். இங்கிலாந்தில் பெருவாரியான நபர்கள் பொது இடங்களில் சாப்பிடும்போது நான் பார்த்திருக்கிறேன். கத்தி, போர்க் இவற்றின் சப்தத்தைத் தவிர வேறு எவ்விதமான இரைச்சலுமே அவ்விடங்களில் இருப்பதில்லை.

பந்தியில் உட்கார்ந்து சாப்பிடும்போது நீ முதலிலேயே சாப்பிட ஆரம்பித்துவிடக் கூடாது. மற்றவர்கள் எழுந்திருக்குமுன்

நீ எழுந்துவிடவும் கூடாது. பிராம்மணர்கள் பரிசேஷணம், ஆசமனம் முதலிய நியதிகள் வைத்துக்கொண் டிருப்பதன்மூலம் இம்முறையை வலியுறுத்தி வருகின்றனர். பிராம்மணர் அல்லாதாரும் மற்றவர்களும் இந்தச் சம்பிரதாயத்தை அநுஷ்டிக்கிறார்கள். மேல்நாடுகளில்கூட இந்த மாதிரி அநுஷ்டானம் இருப்பதை நான் கவனித்திருக்கிறேன். அங்கே முன் பின் தெரியாதவர்களுடன் உட்கார்ந்திருந்தாலும் மற்றவர்கள் சாப்பிடுமுன் சாப்பிடக் கூடாது; அல்லது அவர்கள் அநுமதியைக் கேட்டுக்கொண்டே சாப்பிட வேண்டும். இதேபோல் மற்றவர்கள் எழுந்திருக்குமுன், அநுமதியின்றி எழுந்துவிடவும் கூடாது. நல்ல மரியாதையுள்ள இந்த நடத்தை முறைகள் எல்லாம் தற்காலத்தில் மீறப்படுகின்றன. ஆனால் இவற்றை அநுஷ்டிப்பதே நல்லது.

'சாப்பாட்டைப்பற்றியும் சாப்பிடும் முறையைப்பற்றியும் இவ்வளவு பெரிய கடிதமா!' என்று நீ ஆச்சரியம் அடையலாம். சிறியதோ பெரியதோ எல்லா விஷயங்களிலும் நல்ல முறைகளை உணர்ந்தவளாக நீ விளங்க வேண்டும் என்ற நோக்கத்துடனேயே இதை எழுதினேன் நாம் குறைந்தது தினசரி மூன்று தடவையாவது சாப்பிடுகிறோம்; அப்படிச் சாப்பிடும்போதெல்லாம் லக்ஷணமான முறையில் சாப்பிட வேண்டும் என்பதே என் அபிப்பிராயம்.

# சௌஜன்ய வாழ்க்கை

**என் அன்புள்ள**
**லக்ஷ்மிக்கு,**

மனித உணர்ச்சிதான் மனிதர்கள் அனைவரையும் ஒரே குலமாக ஆக்குகின்றது. வேறு எந்தவிதமான வித்தியாசங்கள் இருந்தாலும் மனித உணர்ச்சிதான் மனிதனை மனிதனாக மதிக்கும்படி செய்வதாகும். நிறம், மொழி, குலம், மதம், தேசம், பதவி முதலியன மனிதனை மனிதனாகச் செய்வதில் பயன்படுவதில்லை. ஒருவன் நல்லவனா கெட்டவனா என்பது அவனுடைய ஒழுக்கத்தைமட்டுமே பொறுத்ததாகும். ஆயினும் எந்த மனிதனையும் முற்றும் நல்லவன் என்றோ முற்றும் கெட்டவன் என்றோ கூறிவிட முடியாது என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். ஒவ்வொருவனிடத்திலும் நல்ல குணங்களும் தீய குணங்களும் கலந்தே காணப்படுகின்றன. இது விஷயத்தில் மனிதனுக்கு மனிதன் வித்தியாசம்; அவனிடம் எந்த குணங்கள் பிரதானம், அவை எத்தனை, எவ்வளவு காலமாக உள என்பதுதான் முக்கியம். இதுபோலவேதான் ஒருவனுடைய திறமை விஷயமும். ஒருவன் அறிவும் சுறுசுறுப்பும் படிப்பும் விவேகமும் உடையவனாகவோ இல்லாதவனாகவோ இருப்பான். இங்கும் முற்றும் அறிவு படைத்தவனும் முற்றும் அறிவு இல்லாதவனும் இல்லை. ஒருவனுக்கு அறிவு அதிகமாக இருக்கலாம்; ஒருவனுக்குக் குறைவாக இருக்கலாம்; அவ்வளவுதான் வித்தியாசம்.

இன்று உலகத்தில் இந்த வேற்றுமைகளைப்பற்றி வெகுவாக அபிப்பிராய பேதம் இருக்கிறது. வகுப்புகளை எடுத்துக்கொள்வோம். வெள்ளை வகுப்பினர் தாங்கள்தான் உலகத்துக்குப் பாத்தியம் உடையவர்கள் என்றும், தாங்கள் ஆட்சி புரியவே கடவுள் கறுப்பு இனத்தினரைச் சிருஷ்டித்திருக்கிறார் என்றும் நினைக்

கின்றனர். பிரிட்டிஷ் பிரதம மந்திரி மிஸ்டர் சர்ச்சில், ஜனாதிபதி ருஸ்வெல்ட் ஆகிய இருவரின் உணர்ச்சியுள்ள பிரசங்கங்களிலும் வெள்ளைச் ஜாதியினரைத் தவிரப் பாக்கிப் பேர்களின் எதிர் காலம் எப்படி இருக்கும் என்பதுபற்றித் திட்டமாக எவ்விதப் பிரஸ்தாபமும் இல்லை. இந்த சிறு ஜாதி உணர்ச்சி ஒடுங்க வேண்டிய காலம் வந்துவிட்டது. உலகிலுள்ள சகல ஜாதியினரும் மனித வர்க்கத்தின் அடிப்படை, ஒற்றுமை என்பதை உணர்ந்து மேலெழுந்த வாரியாகவுள்ள வேற்றுமைகளை மறக்க வேண்டும். இந்த யுத்தம் இந்த விஷயத்தையாவது நமக்குப் போதிக்க வேண்டும்.

மத விஷயத்தில் சகிப்புத் தன்மை இல்லாமல் இருக்கும் அசட்டுத்தனம்பற்றி ஏற்கனவே உனக்கு எழுதியிருக்கிறேன். அவற்றை இங்கே மீண்டும் குறிப்பிடத் தேவை இல்லை. மதம் நம்மை வளர்ச்சியடையச் செய்து, ஒற்றுமை உண்டாக்கி, ஆத்மிகத் துறையில் நடத்திச் செல்ல வேண்டுமே அன்றி அது நம்மைக் கேவலமாக்கிப் பிரிவினையை உண்டாக்குவதாக இருக்கக் கூடாது.

பாஷை சம்பந்தப்பட்டவரையில் அதன் கருத்து இதுதான். அதாவது மனிதனுடைய எண்ணத்தைத் தெரிவிப்பதற்குப் பாஷை ஒரு சாதனம். உலகத்துக்கெல்லாம் ஒரே பாஷை இருந்தால் ஒற்றுமைக்கு இதைவிடச் சிறந்த மார்க்கம் வேறு இல்லை. 'எஸ்பரான்டோ' வை உலக பாஷையாக்க முயன்றனர். அது வெறும் கனவாகிவிட்டது. நமது நாட்டில் ஹிந்துஸ்தானி பொதுப் பாஷை ஆகிவிடும். பாஷையால் பிரிவினை கூடாது; அபிப்பிராய பேதமும் கூடாது.

தேசாபிமானம் இருப்பது நல்ல விஷயம். தாய் நாட்டிடம் அன்பு செலுத்துவது அவசியம். ஆனால், பக்கத்து நாடுகளை வெறுப்பானேன்? உலக சரித்திரத்தைப் பார்த்தால் தேசாபிமானம் என்பது தன் தேசத்திடம் அன்பு செலுத்துவதைக் காட்டிலும் அயல் நாடுகளிடம் துவேஷ உணர்ச்சி கொள்ளுவதே.

என்று பொருள் கூறும்படியாகவே இருந்துவருகிறது. இந்த யுத்தம் மிகக் கேவலமான சக்திகளைக் கிளப்பிவிட்டிருக்கிறது. இன்று நண்பர்களாக இருப்பவர்கள் நாளை விரோதிகள் ஆகிவிடுகின்றனர். அதேபோல் இன்று விரோதியாக இருப்பவர்கள் நாளை நண்பர்கள் ஆகிவிடுகின்றனர். இது அவர்களுடைய குணம் மாறுபட்டுவிட்டது என்பதால் அல்ல. யாருடன் சேர்ந்து ஆதிக்கம் செலுத்தலாம் என்ற ஆசையேதான் காரணம்.

" ஒரு நாட்டில் உள்ள பணக்காரருக்கு ஏழையிடம் உள்ள நல்ல தன்மைகள் தெரிவதில்லை. நம் நாட்டில் மூன்று முக்கியமான மதங்கள் இருக்கின்றன. அத்துடன், ஜாதிப் பாகுபாடுகள் மறைந்து வருகின்றன. என்றாலும் அவை இன்னும் இருந்து கொண்டிருக்கின்றன. இதன் பலன் என்ன தெரியுமா? அடிக்கடி நமது திருஷ்டி மறைந்துவிடுகிறது. மனிதர்களையும் சம்பவங்களையும் நிஷ்பட்சபாதகமாக நிர்ணயம் செய்வதில்லை. பிறப்பு, ஜாதி, மதம் முதலியவற்றைக்கொண்டே அவற்றை நாம் நிர்த்தாரணம் செய்கிறோம்.

ஒரு முஸ்லிமோ ஹிந்துவோ தவறு செய்துவிட்டதால் முஸ்லிம்களெல்லாம் கெட்டவர்கள் என்றோ ஹிந்துக்களெல்லாம் மோசமானவர்கள் என்றோ அவசரப்பட்டு முடிவு கட்டிவிடுகிறோம். வகுப்புக் கலவரங்கள் மலிந்த இந்தக் காலத்தில் இந்த மாதிரி முடிவு செய்வதுதான் அதிகமாகக் காணப்படுகிறது. இதற்கு ஏதாவது காரணம் இருக்கலாம். எப்போதேனும் நாம் ஒற்றுமைப் பிரச்னையை வெற்றிகரமாகத் தீர்க்க வேண்டுமானால் நல்லது கெட்டது எது என்பதைப் பகுத்தறிய முற்பட வேண்டும். ஹிந்துக்களிலும் முஸ்லிம்களிலும் உள்ள நல்லவர்கள் சேர்ந்து, தங்களிடையே உள்ள கெட்டவர்களை அடக்க வேண்டும். நமது மனத்தைத் தெளிவான முறையில் வைத்துக்கொண்டால் அன்றி இது சாத்தியமாகாது.

ஹிந்துக்களுக்குள்ளேயே, 'இந்த ஐயங்கார்களெல்லாம் கெட்டவர்கள்; இந்த ஐயர்கள் எல்லோரும் பொல்லாதவர்கள்' என்ற கூச்சலைக் கேள்விப்படுகிறோம். 'சூத்திரர்கள்!, செட்டியார்கள்!



9

நாயுடுகள்!' என்றும் கூறுகிறோம். இவையெல்லாம் விஷமத்தன மானவை; நியாயம் இல்லாத உணர்ச்சிகள். எல்லா வகுப்பிலும் நல்லவர்களும் கெட்டவர்களும் கலந்தே இருக்கின்றனர். இந்த வித்தியாசங்களும் பாகுபாடுகளும் மனிதனுல் சிருஷ்டிக்கப்பட்ட தடைகள். இதை நாம் சமாளித்து, மீண்டும் நிலைமையை நிதா னிக்கக் கற்றுக்கொள்ள வேண்டும். அப்படிச் செய்தால் உண்மை துலங்க ஏதுவாகும்.

நீ சிறு பெண். பள்ளிக்கூடத்திலும் இதர இடங்களிலும் பல தரப்பட்ட மதம், பாஷை, வகுப்பு முதலியவற்றைச் சேர்ந்தவர் களுடன் உனக்குத் தொடர்பு ஏற்படுகிறது. அவர்கள் ஒவ் வொருவரிடமும் காணப்படும் நல்ல அம்சங்களைக் கற்றுக்கொள். பிறகு எல்லாம் உனக்கு இனியதாவே இருக்கும்.

# பள்ளிக்கூட வாழ்க்கை

**என் அன்புள்ள**

**லக்ஷ்மிக்கு,**

குடும்ப வாழ்க்கை, விளைப் வாழ்க்கை இவைபற்றி உனக்கு முன்பு இரு கடிதங்கள் எழுதினேன். இப்போது அதைத் தொடர்ந்து, 'பள்ளிக்கூட வழ்க்கை' பற்றி எழுத விரும்புகிறேன். நாளை உனக்குப் பள்ளிக்கூடம் திறக்கிருர்கள். எனவே இதுவரை அதைப்பற்றி நான் உனக்கு எழுதவில்லை. இரண்டு மாதம் வரை உனக்கு லீவ். மீண்டும் தினசரி முறையை அநுஷ்டிப்பது உனக்குக் கஷ்டமாக இருக்கும். ஆனால் சீக்கிரமே இது சரிப்பட்டுவிடும்.

வீட்டைப்போலவே பள்ளிக்கூடத்திலும் உன்னிடம் அன்பும் கவனமும் இருக்கும்படி பார்த்துக்கொள்ள வேண்டும். ஞான வளர்ச்சி, நல்ல உழைப்பு, ஒழுக்க முறை, நட்பு, உபாத்தியாயர்களுக்கும் மாணவர்களுக்கும் இடையே இருக்க வேண்டிய உண்மையான உறவு முதலியவற்றிற்கெல்லாம் பள்ளிக்கூடம் முக்கியமான இடமாகும். பள்ளிக்கூடத்துக்குப் போய், அங்கிருந்து உன் வேலையைச் சரியாகச் செய்தால்தான் பள்ளிக்கூட வாழ்க்கையின் பயனை அநுபவிக்க முடியும். வாழ்க்கை முழுதும் பள்ளிக்கூட வாழ்க்கையைப்பற்றி மகிழ்ந்துகொண் டிருக்கும்படியும் அதற்கு நன்றி செலுத்தும்படியும் பள்ளிக்கூட நாட்களைச் செலவிட வேண்டும்.

இது கஷ்டமானதல்ல. சாதாரணமாக உபாத்தியாயர் அன்புள்ளவர். தம்முடைய மாணவர்களிடத்தில் அவர் சிரத்தை எடுத்துக்கொள்வார்; அவர்களது க்ஷேமத்தையும் கோருவார். முக்கியமாக உன்னுடைய பாடசாலையில் தங்களுடைய தொழிலுக்காகவே தங்களை அர்ப்பணித்துக்கொண்ட ஆசிரியர்கள் இருக்கி

ருர்கள். அவர்கள் எளிய வாழ்க்கை நடத்துகின்றனர். உயர்ந்த விஷயங்களைப்பற்றிச் சிந்திக்கின்றனர். சகல துறைகளிலும் தங்கள் மாணவர்கள் முன்னேற்றம் அடைய வேண்டும் என்பதிலேயே கருத்தாக இருக்கிருர்கள். மாணவர்களுக்கும் உபாத்தியாயர்களுக்கும் நேசபாவ உணர்ச்சி இருக்க வேண்டும். ஆனல் அநேகமாக அப்படி இருப்பதில்லை. அடிக்கடி இந்த உறவில் பிளவு காண்கிறது. இதுபோல் இருக்கக் கூடாது.

மாணவர்களைவிட உபாத்தியாயருக்கு அதிக விஷயங்கள் தெரியும். ஆனல் தங்களுக்குத் தெரிந்த விஷயங்கள் சொற்பம் என்பது உபாத்தியாயர்களுக்குத் தெரியும்; இல்லாவிட்டால் அவர்கள் தெரிந்துகொள்ள வேண்டும். உபாத்தியாயருக்குத் தெரியாத விஷயங்கள் அநேகம். மாணவர்களிடமிருந்து ஆசிரியர்கள் தங்களையும் அறியாமலே அநேகம் விஷயங்களைத் தெரிந்துகொள்ளலாம். எப்படி இருப்பினும் மாணவர்களும் ஆசிரியர்களும் அறிவு வளர்ச்சியில் ஒரே படியில் இருப்பவர்கள்தாம் என்பதை உணர்ந்தால் அவர்களிடையே உண்மையான நேசபாவம் இருந்தே தீரும். தற்காலப் பள்ளிக்கூடங்களில் தண்டனை விதிப்பதற்கான அவசியமே இல்லை. உன்னுடைய பள்ளிக்கூடத்தில் தண்டிக்கும் முறை இல்லை என்றே நான் எண்ணுகிறேன். உன் வயதுள்ள குழந்தைகளுக்கு அன்பு, நம்பிக்கை இவை இரண்டும் இருந்தால் போதும். அவை தண்டனையைவிடச் சக்தி வாய்ந்தவை. நீ உன்னுடைய உபாத்தியாயர்களிடம் நேசபாவ உணர்ச்சியுடன் இருக்கப் பழக வேண்டும். அவர்களும் உன்னைப்போலவே நடந்துகொள்வார்கள் என்பதில் சந்தேகமில்லை.

பள்ளிக்கூடத்தில் உனக்கு நல்ல நண்பர்கள் இருக்கிருர்கள். நல்ல நண்பர்களைத் தேடித் தெரிந்தெடுத்துக்கொள்ளப் பள்ளிக்கூடம், காலேஜ் இவை சிறந்தவை என்பதை ஏற்கனவே உனக்கு எழுதியிருந்தேன். நட்பு நீடிப்பதற்கு நண்பர்களிடையே ஒரே விதமான ருசியும் சிரத்தையும் இருக்க வேண்டும். சிலரிடம் இந்த அம்சங்கள் கூடியிருப்பதைக் காணலாம். உன்

## பள்ளிக்கூட வாழ்க்கை

றுடைய பள்ளிக்கூடத்தில் உனக்கு நெருங்கிய நண்பர்கள் இருப்பார்கள் என்று நம்புகிறேன்.

பள்ளிக்கூடச் சிநேகிதர்கள் ஒரு புறம் இருக்க, எல்லாக் குழந்தைகளிடமும் நீ நேசமாக நடந்துகொள்ள வேண்டும். பள்ளிக்கூடத்தில் நீ தொடர்பு கொள்ளக்கூடிய உபாத்தியாயர்கள், சேவகர்கள் முதலியவர்களிடமும் நீ நட்பு உணர்ச்சி கொள்ள வேண்டும். இப்போது நீ உன் பள்ளிக்கூடத்தில் பெரிய வகுப்பில் படிக்கிறாய். கீழ் வகுப்புகளில் அநேகங் குழந்தைகள் படிக்கின்றனர். அவர்களிடம் அன்பாகப் பேசிப் பழக வேண்டும். அவர்கள் அதில் மிக்க பெருமை கொள்வார்கள். உன் வகுப்பு உபாத்தியாயர்களைத் தவிரப் பள்ளிக்கூடத்தில் வேறு உபாத்தியாயர்களும் உளர். நீ அவர்களிடமும் பழக்கம் வைத்துக்கொள்ள வேண்டும். வீட்டில் இருப்பதைப்போல் பள்ளிக்கூடத்திலும் பணியாட்களிடம் அன்பாக நடந்துகொள்ள வேண்டும்.

பள்ளிக்கூடம், கட்டிடம், அங்குள்ள நாற்காலி, மேஜைகள் தோட்டம் முதலியவற்றில் நீ சிரத்தை எடுத்துக்கொள்ள வேண்டும். அவைகளெல்லாம் சுத்தமாக இருக்கும்படி பார்த்துக் கொள்ள வேண்டும். பார்க்கப்போனால் பள்ளிக்கூடத்தில் தினசரி ஆறு மணி நேரமே நீ இருக்கப்போகிறாய்; உன்னுடைய உபாத்தியாயர்கள் இவற்றிற்கெல்லாம் உதவியாக இருந்து, ஊக்கம் ஊட்ட, நீயும் இதில் சிரத்தை காட்டினால், பள்ளிக்கூடம் சந்தோஷமான இடமாக விளங்கும்.

இவை தவிரப் பள்ளிக்கூடத்தில் நடைபெறும் சங்க நடவடிக்கைகள், விவாதங்கள் பந்தய விளையாட்டுக்கள், சங்கீதம், நாடகம் முதலியவற்றிலெல்லாம் நீ தீவிரமாகச் சிரத்தை எடுத்துக் கொள்ள வேண்டும். இதுபோன்ற சாதனங்களில் பல இப்போது உன் பாடசாலையில் இல்லை என்று எண்ணுகிறேன். இவை பள்ளிக்கூடங்களில் இருப்பது அவசியம். பள்ளிக்கூடங்களில் நடத்தப்படும் விவாதங்களில் நீ பங்கெடுத்துக்கொள்ள வேண்

டும். பேச்சு வன்மை வளர்வதற்கு இது உதவியாக இருக்கும் என்பதோடு இதர வகுப்பிலுள்ள புதிய பெண்களோடு நீ சம்பந்தம் வைத்துக்கொள்வதும் சாத்தியமாகும். பள்ளிக்கூட நாடகங்கள், சங்கீதம் இவற்றில் பங்கு எடுத்துக்கொள்வதால் அவற்றில் உனக்குள்ள திறமையையும் நீ அபிவிருத்தி செய்துகொள்ளலாம். இவையெல்லாம் உன் பள்ளிக்கூட வாழ்க்கையை இனிமை ஆக்கும்; பயன்தரத்தக்கதாகவும் இருக்கும். கூடிய சீக்கிரம் நீ காலேஜுக்குப் போக வேண்டும். அதற்கு நீ தயார் செய்துகொள்.

30-6-'41.

# கடிதங்கள் எழுதும் முறை

**என் அன்புள்ள**
**லக்ஷ்மிக்கு,**

ஒரு மாத காலமாக உனக்கு நான் அடிக்கடி கடிதங்கள் எழுதி வருகிறேன். எனக்கு இதில் சந்தோஷம். இதுபோல் நீண்ட கடிதங்களை உனக்கு இனி எழுத முடியும் என்று தோன்றவில்லை. சாதாரணமாக ஒவ்வொருவருக்கும் ஏதாவது அவசரமான ஜோலிகள் இருக்கும்; கடிதங்களை இதுபோல் எழுத அவகாசம் இராது. ஒரு காலத்தில் கடிதம் எழுதுவது ஒரு பெரிய கலையாக விளங்கி வந்தது. பெரியவர்கள் எழுதிவைத்த கடிதங்கள் காப்பாற்றப்பட்டு, நமக்கு உண்மையான இலக்கியங்களாகத் திகழுகின்றன.

தகவல்களை நன்கு தெரிவித்து, நீளமாகக் கடிதங்கள் எழுத வேண்டிய நிலைமை அந்த நாட்களில் அவசியமாக இருந்தது. போக்குவரத்துச் சாதனங்கள் சொற்பம். டெலிபோன், டிரங் டெலிபோன் முதலியவையெல்லாம் அக்காலத்தில் இல்லை. தந்திகளுக்குச் செலவு அதிகம்; அவை தாமதமாகவும் போய்ச் சேரும். சுருக்கெழுத்து எழுதி, டைப் அடிப்பவர்களும் கிடைக்கமாட்டார்கள். தபால்கள் போய்ச் சேர நாளாகும். அதனால் அந்தக் காலத்தில் கடிதங்களை நீளமாகவும் கையினாலும் எழுத வேண்டியதாக இருந்தது.

இந்தக் காரணங்களால் அந்தக் காலத்தில் படித்தவர்கள் கடிதம் எழுதுவதை ஒரு சிறந்த கலையாகப் பயின்றுவந்தார்கள். அதை அப்படிச் சிறந்த கலையாக ஆக்கவும் முடியும். அந்நிய பாஷையைக்கொண்டு கடிதம் எழுதும் இந்தியாவில் அம்மாதிரி செய்ய முடியாதோ என்று நினைக்கிறேன். தமிழே நம் தாய்ப் பாஷை என்று நாம் இருவரும் கருதுகிறோம். நான் தமிழில்

எழுதினால் உனக்குப் புரியும். ஆனால், நான் என் கடிதங்களை யெல்லாம் உனக்கு ஆங்கிலத்திலேயே எழுதுகிறேன். இது அகஸ்மாத்தாக ஏற்பட்ட சம்பவம். நாம் இருவரும் தமிழிலேயே கடிதம் எழுதிக்கொள்ள வேண்டும் என்பது என் விருப்பம். தமிழில் கடிதம் எழுதினால் நாம் நமது கருத்தை நன்றாகவும் வன்மையோடும் தெரிவிக்கலாம்.

கடிதங்களில் பலவகை; தொழிலை உத்தேசித்து எழுதும் கடிதங்கள்; சாதாரணமாக எழுதும் கடிதங்கள்; நண்பர்கள், உறவினர்கள் பரஸ்பரம் முக்கியமான தகவல்களைப்பற்றி எழுதிக் கொள்ளும் கடிதங்கள். இக் கடிதங்கள் நிரந்தரமாகப் போற்றத் தகுந்தன அல்ல. அவற்றின் நடை சர்வ சாதாரணமானது; விசேஷமாக இராது.

கலை அம்சத்தோடு எழுதும் கடிதங்களில் எழுதுபவரின் ஆத்மா ஒளிவிட்டுக்கொண் டிருக்கும். இந்த உண்மையைக் காதல் கடிதங்களில் அதிகமாகக் காணலாம். அந்த மாதிரியான கடிதங்கள் நம்முடைய நாட்டில் அதிகமாக எழுதப்படுவதில்லை. ஏனெனில் கல்யாணம் செய்துகொள்ளுமுன் காதலர்கள் சந்தித்துப் பழகுவது என்ற முறை இங்கே இல்லை. கணவனுக்கும் மனைவிக்கும் கடிதப் போக்குவரத்துகள் நடக்கின்றன. அவை காதற் கடிதங்களாகவும் இருக்கலாம். இருப்பினும் காதற் கடிதங்களிலுள்ள—உள்ளம் திறந்து எழுதுவது, உணர்ச்சி வேகம், இவை யெல்லாம்—அவற்றில் இருப்பதில்லை. அதனால் அத்தகைய கடிதங்கள் நமக்குச் சுவை தருவதில்லை. அவற்றில் கணவன் மனைவி கூறிக்கொள்ளும் அன்பு மொழிகள் காணப்படுமே அன்றி இலக்கியச் சுவை எதுவும் காணப்பட மாட்டாது. அந்தச் சுவை யுடைய காதற் கடிதங்களை அறிவில் சிறந்தவர்களே எழுத

நம் இருவருக்கும் சுவை அளிக்கக் கூடிய ஒரு வகைக் கடிதங்கள் உண்டு. இப்போது உனக்கு நான் எழுதுவது போன்ற கடிதங்கள்தான் அவை. நீயும் நானும் எதிர்பார்க்கக்

கூடிய அளவுக்கு அவை உயர்ந்தவைகளாக இல்லாமல் இருக்கலாம். இத்தகைய கடிதங்களின் நோக்கம் எழுதுகிறவரின் உயர்ந்த கருத்துக்களை எழுதப்படுகிறவருக்குப் புலப்படுத்துவது ஒன்றே. ஆயினும் அவை வெறும் கட்டுரைகளாக ஆகிவிடக் கூடாது; அவைகளில் எழுதுகிறவரின் ஆன்மா பிரதிபலித்துக் கொண்டிருக்க வேண்டும்.

அதுமட்டும் அன்று. எழுதுகிறவருக்கும் எழுதப்படுகிறவருக்கும் நெருங்கிய சம்பந்தம் இருக்க வேண்டும். இருவருடைய கருத்துக்களும் ஒரே விதமானவைகளாக இருக்கலாம். ஆயினும் நான் எழுதுவதுபோல், தந்தை மகளுக்கு எழுதுவதாக இருந்தால் அந்தக் கருத்துக்கள் புதிய சுவை பெற்றுவிடுகின்றன. அப்படிப் புதிய சுவை பெற்றுவிடுவது அவசியமே ஆகும்.

இந்தக் கடிதங்களிலெல்லாம் தனிப்பட்ட விஷயங்கள் பற்றியோ நபர்களைப்பற்றியோ தகவல் இராது. இவை, பார்த்து விட்டுத் தூக்கி எறியக் கூடியவை அல்ல. திரும்பத் திரும்பப் படித்துப் பாதுகாக்க வேண்டிய கடிதங்கள் இவை. இக் கடிதங்களில் குறிப்பிட்ட கருத்துக்கள் பாதுகாக்கத் தகுந்தவை என்பது ஒரு காரணம். அடுத்தபடியாகக் கடிதங்கள் எழுதிய சந்தர்ப்பம், கடிதம் எழுதிய காலம், எந்தச் சந்தர்ப்பத்தில் யாரால், யாருக்கு எழுதப்பட்டது என்பது ஆகிய அனைத்தும் முக்கியமானவை.

கடிதங்களைப் பத்திரமாகப் பாதுகாத்து, எதிர்காலத்தில் இன்பமாகப் படிக்க வேண்டுமானால் அவற்றை ஜாக்கிரதையாகக் கவனித்து எழுத வேண்டும். அந்தரங்க சுத்தியாக எழுதுவதே ஜாக்கிரதையாகக் கவனித்து எழுதுவதற்கு அடையாளம். தாங்கள் எழுதும் விஷயங்களைப்பற்றிய உண்மையான கருத்துக்களையே கடிதம் எழுதுபவர் தெரிவிக்க வேண்டும்.

கடிதம் எழுதுவதற்கு விஷயத்தைத் தேர்ந்துகொள்வது கடினம். விஷயங்கள் எழுதுபவருக்கும் எழுதப்படுகிறவருக்கும் ருசியுள்ளனவாக இருக்க வேண்டும். ருசியில்லாத விஷயங்களைப் பற்றி எழுதக் கூடாது. மனிதவர்க்கத்துக்கு ஒத்த மாதிரியில்

## அருமைப் புதல்விக்கு

அவை இருக்க வேண்டும். நான் இதுவரை பலதரப்பட்ட விஷயங்களைக் குறித்து உனக்கு எழுதியிருக்கிறேன். இவற்றில் சில உனக்கு ருசிகரமானவை என்பது எனக்குத் தெரியும். சில விஷயங்கள் எனக்குப் பிடிக்கின்றன. அவற்றில் நீயும் சிரத்தை கொள்ள வேண்டும் என்பது என் விருப்பம். இனிமேல் கடிதம் எழுதுவதற்கான விஷயங்களைத் தெரிந்தெடுக்க உன்னுடைய ஒத்துழைப்பையும் உன் அம்மாவின் ஒத்துழைப்பையும் நான் நாடப் போகிறேன். விஷயங்களும் ருசியாக இருந்து, நானும் என்னுடைய ஆழ்ந்த கருத்துக்களைத் தெளிவான பாஷையில் தெரிவிக்கும் வரையில் அக்கடிதங்கள் எப்போதும் சுவையுள்ளவைகளாகவே இருக்கும்.

1-7-'41.

# ஓய்வு நேரம்

**என் அன்புள்ள**
**லக்ஷ்மிக்கு,**

எனக்கு இப்போது பூர்ணமாக ஓய்வு. எனவே அவகாசம் நிறைய இருக்கிறது. அவகாசம் அதிகமாக இருப்பதால் என்ன பண்ணுகிறது என்றுகூடச் சில சமயங்களில் எனக்குத் தெரிய வில்லை. இது அகஸ்மாத்தாக ஏற்பட்ட விஷயம். சாதாரணமாக ஒவ்வொருவருக்கும் கொஞ்ச நேரந்தான் ஓய்வு கிடைக்கும். மாணவராக இருக்கும்போது சிறுவரும் சிறுமியரும் வெகு தீவிரமாகப் படிப்பில் கவனம் செலுத்த வேண்டி யிருக்கும். பின்பு சம்பாதிக்க வேண்டி யிருக்கிறது; அல்லது குடும்பக் காரியங்களையோ சொந்த அலுவல்களையோ கவனிக்கும்படி நேருகிறது. இவை தவிர, நகர, சமூக, அரசியல் பொது வேலை களை அவரவர்கள் இஷ்டத்துக்கு உகந்தபடி பார்க்கவேண்டி யிருக்கும்.

நம் தேசத்தில் ஜனங்கள் வெகு மும்முரமாகத் தங்கள் வேலை களைக் கவனிப்பதில் மூழ்கிவிடுகின்றனர். ஒழிவு நேரத்திலோ உல்லாஸ வேளையிலோ அல்லது வெளியேயுள்ள இதர விஷயங் களிலோ அவர்களுக்குச் சிரத்தை இருப்பதில்லை. பதவிகளி லிருந்து விலகிய பின்னரும், வயோதிக காலத்திலும் தங்களுடைய காலத்தை எப்படிப் போக்குவது என்று தெரிவதில்லை. வேலை களைக் கவனிக்கும் காலத்தில்கூட ஒவ்வொருவரும் தங்களுடைய புத்தி தீக்ஷணியத்தை உத்தேசித்தும் தேக வலுவை முன்னிட்டும் அன்றாடமும் ஒவ்வொரு வாரமும் வருஷத்திற்கு ஒரு முறையும் ஓய்வு எடுத்துக்கொள்ள வேண்டும். அதை நன்கு பயன்தரத் தக்கவாறு உபயோகப்படுத்திக்கொள்வதும் அவசியம். சோம்

பேறியாக இருப்பது ஓய்வு நேரத்தைப் பயன்படுத்திக்கொண்டதாக ஆகாது.

மாணவி என்ற முறையில் பொழுதுபோக்காக இளைப்பாற்றிக் கொள்வது எவ்வளவு அவசியம் என்பதை நீ உணர்வாய். நீ உன் பாடங்களைத் தீவிரமாகப் படிக்கிறாய். பிறகு உன் புத்திக்கு உல்லாஸமான வகையில் பொழுது போக்கவேண்டி இருக்கிறது. எனவே நாவல்கள், பத்திரிகைகள், சஞ்சிகைகள் இவற்றைப் புரட்டுகிறாய்; அல்லது ரேடியோ கேட்கிறாய். உன்னிடம் வரும் நண்பர்களைக் கண்டு பேசுகிறாய். அல்லது நண்பர்களைப் போய்ப் பார்க்கிறாய், உலாவுகிறாய். வீட்டில் அப்பா அம்மாவுடனும் மற்றவர்களுடனும் சம்பாஷியாமல் தேகாப்பியாச விளையாட்டுகளில் ஈடுபடுகிறாய். தேகத்துக்கும் புத்திக்கும் இவையெல்லாம் அவசியம்.

ஓய்வு நேரத்துக்கும், அதைப் பயன் தரும்படி செலவிடுவதற்கும் நமக்குத் திட்டமான ஓர் ஏற்பாடு இருக்க வேண்டும் என்பது குறித்து, நான் இக் கடிதத்தில் எழுதுகிறேன். காலை நேரங்களில் படிப்பில் ஈடுபட்டிருப்பாய் பிறகு பள்ளிக்கூடம் போகிறாய். மாலையில் பள்ளிக்கூடத்திலிருந்து வீட்டுக்கு வருகிறாய். சிற்றுண்டிக்குப் பிறகு உனக்கு ஓய்வு நேரம் இருக்க வேண்டும். இந்த ஓய்வு நேரம் தற்சமயம் இரண்டு மணியாக இருக்கலாம் உனக்குப் பரீக்ஷை சமீபிக்கும்போது இந்த அவகாசத்தை ஒரு மணியாகக் குறைத்துக்கொள்ளலாம். ஆனால் தினசரி இந்த அவகாசம், பரீட்சை தினங்களில்கூட இருக்குமாறு செய்துகொள்ள வேண்டும்.

இந்த ஒரு மணி நேரத்தையும் புத்திசாலித்தனமாகச் செலவிட வேண்டும். உலாவலாம்; அல்லது டென்னிஸ்போன்ற விளையாட்டுகளிலும், திறந்த வெளியில் நடக்கக் கூடிய பந்தய விளையாட்டுகளிலும் ஈடுபடலாம். பிறகு அரை மணி நேரம் நண்பர்களுடனும் வீட்டில் இருப்பவர்களுடனும் சம்பாஷணை செய்யலாம். அரை மணி நேரம் ரேடியோவில் நல்ல சங்கீதமாக இருந்தால் கேட்கலாம்; அல்லது நீயே வேண்டுமானாலும் பாடலாம்.

இப்படிச் செய்தால் புத்துணர்ச்சி தோன்றும். இதனால் இரவில் பாடங்களைச் செவ்வையாகப் படிக்கலாம். விடியற்காலையில் சில நிமிஷம்வரையில் சூரியோதயத்தையும், செடி, புஷ்பங்கள் இவற்றையும் கண்டு களிக்கலாம். காலை வேளையில் பறவைகளின் உல்லாஸ கீதத்தை அநுபவிக்கலாம். இப்படிச் செய்வதால் உன் மனம் ரம்மியமாக இருக்கும்; அன்றாட வேலையை நன்கு செய்யவும் முடியும்.

பிரதி வாரமும் நமக்கு ஓய்வு இருக்க வேண்டும். அந்தச் சந்தர்ப்பத்தையும் நன்கு பயன்படுத்திக்கொள்ள வேண்டும். பள்ளிக்கூடங்கள், காலேஜ்கள், ஆபீஸ்கள் இவையெல்லாம் சனி, ஞாயிறுகளில் மூடி விடுமுறை விடுவதன் நோக்கம் இதுதான். வாரத்தில் குறைந்தது ஒரு நாளேனும் ஒவ்வொருவரும் தம்முடைய வழக்கமான வேலையினின்று விடுபட்டிருக்க வேண்டும். வழக்கமாகக் கவனிக்கும் வேலையிலிருந்து ஒரு நாள் விடுபட்டிருப்பது விசேஷம். எப்படி இருப்பினும் ஓய்வு கிடைக்கும் தினத்தில் வழக்கமான ஜோலியைக் கவனிக்கக் கூடாது. கிராமப் பிரதேசங்களில் பல மைல் தூரம்வரை நடக்கலாம். அங்கே உள்ள இயற்கை வனப்பைக் கண்டு மகிழலாம். ஆற்றிலோ கடலிலோ நீந்தி ஸ்நானம் செய்யலாம்; பந்தய விளையாட்டுகளில் கலந்துகொள்ளலாம். சங்கீதக் கச்சேரிகள், நாடகம் முதலியவற்றிற்குப் போகலாம். நண்பர்கள், உறவினர்கள் சகிதம் உல்லாஸ யாத்திரை செல்லலாம். இதன் நோக்கம் உடலின் உறுப்புக்களுக்கும் புத்திக்கும் ஓய்வு கொடுப்பதாகும். இதனால் அடுத்த வார வேலையைத் தென்பாகவும் ஊக்கமாகவும் செய்ய முடியும்.

ஒவ்வொரு வருஷமும் ஒவ்வொருவரும் ஒரு மாதம் விடுமுறை பெற வேண்டும் சர்க்கார் விதிகளின்படி சம்பளத்தோடு ஒவ்வொரு வருஷத்துக்கும் ஒரு மாத ரஜா உண்டு. துரதிருஷ்டவசமாக அநேகம் சர்க்கார் ஊழியர்கள் இந்த உரிமையைப் பயன்படுத்திக் கொள்வதில்லை. அந்த ஒரு மாதத்தில் தங்களுடைய வேலையை மறந்திருக்க வேண்டும். மாரிக் காலமாக இருந்தால் பீடபூமியாகவுள்ள பகுதியில் வசிக்கலாம். கோடையாக இருப்

## அருமைப் புதல்விக்கு

பின் மலைப் பிரதேசத்தில் குளிர்ச்சியாக உள்ள பகுதியில் வசிக்கலாம். இது ஆடம்பரமான தல்ல; ஆனால் இப்போது கொஞ்சம் செலவுள்ளதாகும். பிரபலமான மலைப் பிரதேசங்கள் பல உண்டு. அவை தவிர நகரி என்ற இடம் இருக்கிறது. பூண்டி ஜல சப்ளை ஆரம்பமாகும் இடம் அது. இதை மலை வாசத்துக்கு ஏற்றதாகச் செய்யலாம். சாதாரண ஸ்திதியில் இருப்பவர்கள்கூட இங்கே போகலாம். போகும்படி வசதி செய்யவும் வேண்டும்.

உண்மையாக விடுமுறை அநுபவிப்பது என்பது ஒரு தனிக் கலை. நம்பிக்கை இல்லாமல் வாடி வதங்கிப்போவது சுலபம். அதேபோல் விஷயம் அறிந்தோர் எதிர்காலத்தில் நம்பிக்கையாக இருப்பதும் சுலபந்தான் வாழ்க்கையில் கஷ்டமான கட்டங்கள் எப்போதும் இருந்துகொண்டேதான் இருக்கும். ஆயினும் அதிலும் ஓர் ஆறுதலும் நல்ல அம்சமும் உண்டு. இம்மாதிரியான மனோபாவத்துடன் நம்மைப் பழக்கிக்கொண்டால் ஒவ்வொன்றிலும் நல்ல அம்சங்களை நாம் காணலாம்; நாமும் சந்தோஷமாக இருந்து பிறரையும் சந்தோஷப்படுத்த முடியும். அசட்டுத் துணிச்சலோ அலட்சிய மனோபாவமோ இருக்க வேண்டுமென்று நான் சொல்லவில்லை. சந்தோஷமாகவும் இருந்து மற்றவர்களையும் மகிழச் செய்வது என்பதில் ஆழ்ந்த கருத்து இருக்கிறது. ஓய்வு நேரத்தைச் செவ்வையாகச் செலவிட்டால் அந்தப் பாக்கியம் நமக்கும் கிட்டும்.

'விளையாட்டேயின்றி எப்போதும் வேலையைச் செய்வதால் சிறுவன் மக்கு மாதிரி ஆகிவிடுகிறான்' என்பது ஆங்கிலத்தில் ஒரு பழமொழி. இது உனக்குத் தெரியும். நீயும் சந்தோஷமாக இருந்து, மற்றவர்களையும் சந்தோஷப்படுத்தும் தன்மை உன்னிடம் உண்டு. எப்போதும் ஓய்வு நேரத்தைச் சம்பாதித்துக் கொண்டு அதை நன்கு செலவிடு. உனக்கு அதனால் சந்தோஷம் ஏற்படும்.

2-7-'41.

# மகா யுத்தம்

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

இப்போது யுத்தம் நடந்துகொண்டிருக்கிறது; பலவிதமான யுத்தங்கள் நடந்துகொண்டிருப்பதாகக்கூடச் சொல்லலாம். செய்திகள் விஷயத்தில் கண்டிப்பான தணிக்கை முறை அநுஷ்டிக்கப்படுகிறது. அத்துடன் பலவேறு இடங்களிலிருந்தும் செய்திகள் வருகின்றன. எனவே நிகழும் சம்பவங்களைப்பற்றித் தெளிவாகவும் பூர்ணமாகவும் அபிப்பிராயம் தெரிந்துகொள்ள முடியவில்லை. ஆனால் முக்கியமான விஷயங்கள் தெளிவு. ஜர்மனி ஐரோப்பாவையும், கூடுமானால் தன்னுடைய சகபாடிகளான இத்தாலி, ஜப்பான் இவற்றுடன் சேர்ந்து ஆப்பிரிக்கா, ஆசியா இரண்டையும் தன் ஆதிக்கத்துக்கு உள்ளாக்கிக்கொள்ள விரும்புகிறது. சென்ற மகா யுத்தத்திற்குப் பிறகு ஏற்பட்ட வர்ஸேல்ஸ் உடன்படிக்கையால் தனக்கு அவமானம் ஏற்பட்டுவிட்டதாக ஜர்மனி கருதுகிறது. தான் உயர்ந்த வகுப்பென்றும் இங்கிலாந்தும் பிரான்ஸும் செய்வதுபோலவே தானும் உலகத்தைத் தன் வசப்படுத்திக்கொண்டு ஆதிக்கம் செலுத்த வேண்டுமென்றும்

இங்கிலாந்து, ஏராளமான சாதனங்களுடன் கூடிய பெரிய சாம்ராஜ்ஜியமாக இருக்கிறது. மேலும் அது பணக்கார நாடு. தன்னிடம் உள்ளவற்றைக் காப்பாற்றிப் பாதுகாத்துக்கொள்ள வேண்டும் என்பது இங்கிலாந்தின் ஆசை. ஐரோப்பாவில் வல்லரசுகளைப் பொறுத்துக் கையாளும் கொள்கையால் இதுவரை சுமார் இருநூறு வருஷங்களாக இங்கிலாந்து தன் சாம்ராஜ்ஜியத்தைப் பாதுகாத்துக்கொண்டு வந்திருக்கிறது. ஐரோப்பாவிலுள்ள சிறிய நாடுகள் எல்லாம் அநேகமாக ஜர்மனியின் வசம் ஆகிவிட்டன.

எனவே ஐரோப்பாவில் பெரிய வல்லரசுகளான ஜர்மனியும் ரஷ்யாவுந்தான் பாக்கி. அவை இரண்டுக்கும் இப்போது யுத்தம் மூண்டு நடைபெறுகிறது. இந்த மகா யுத்தம் எந்த மாதிரி உருவடையும்; எப்போது முடியும் என்பவைபற்றி யாரும் இப்போது திட்டமாகச் சொல்வதற்கில்லை.

அமெரிக்காவின் உதவியால் பிரிட்டன் தப்பிப் பிழைக்கும் என்று நான் எதிர்பார்க்கிறேன். ஆனால் பழைய ஐரோப்பிய முறை மலையேறிவிட்டது. அது மீண்டும் தலையெடுப்பதற்கு இல்லை. ஆப்பிரிக்கா, ஆசியா இவற்றின் கதி என்னவாகும் என்றும் இப்போது சொல்ல முடியாது. இத்தாலி பலவீனமான சகபாடியாகத் தோன்றுகிறது. எனவே ஆப்பிரிக்காவின் நிலைமை மாறுதல் இல்லாமலேயே நீடிக்கும். ஆசியாவிலுள்ள நிலவரங்கள் நிச்சயமற்றவையாக இருக்கின்றன சீனா விஷயமாக ஜப்பான் இன்னும் மும்முரமாக ஈடுபட்டிருக்கிறது. சீனாவில் ஜப்பானால் ஏற்படுத்தப்பட்ட ஒரு சர்க்காரை ஜர்மனியும், அதனுடைய நேச நாடுகளும் அங்கீகரிப்பதாக இன்று காலையில் தந்தி வெளியாகி இருக்கிறது. அது உண்மையானால் ஜப்பான் ரஷ்யாவைத் தாக்கக் கூடும். சீனா, ஜப்பானுடன் பல வருஷங்கள் போராட நேரும் என்று தெரிகிறது. அமெரிக்காவும் பிரிட்டனும் சீனாவுக்கு உதவி செய்ய விரும்புகின்றன. ஆனால் திறமையாக எதையும் அவை செய்ய முடியவில்லை.

அடுத்தபடியாக இந்தியா இருக்கிறது. இந்தியாவை ஜர்மனியோ ரஷ்யாவோ ஜப்பானோ அல்லது வேறு நாடோ ஜயிக்க வேண்டுமென்று எண்ணும் இந்தியர் யாரும் இல்லை. சுதந்தரம் அடைந்து, அதைப் பாதுகாத்துக்கொள்ள விரும்புகிறது இந்தியா. ஆனால் இது சுலபம் அல்ல. தனது திறமை, சாதனங்கள் இவற்றைக்கொண்டு பிரிட்டன் இந்தியாவைப் பாதுகாக்கும். ஆனால் இந்தியாவின் தற்காப்பு இந்தியாவின் சொந்த விஷயமாக இருக்க வேண்டும்.

இந்த விஷயம் ஒருபுறம் இருக்கட்டும். ஏன் இந்த யுத்தம்? இதற்குப் பதில் தெரிவிக்க முயல்வோம். சிறிய நாடுகள், அவற்

றின் சுதந்தரம், எதிர்காலம் இவைபற்றிய பேச்சுக்களெல்லாம் அந்தரங்க சுத்தியுடன் கூடியவையாக இருப்பினும் அவை முழு உண்மை ஆகிவிடாது. ஐரோப்பிய நாடுகள் உலகத்தை ஆள வேண்டும் என்ற ஆசைகொண்டிருக்கின்றன. இவற்றில் எந்த ஐரோப்பிய நாடு உலகத்தை ஆள்வது என்று நிர்ணயிப்பதற்கே இந்த யுத்தம். இந்த யுத்தத்தில் யார் ஜயித்தாலும் இவற்றால் ஏற்படக்கூடிய பலாபலன்கள் எளிதில் மறைந்துவிடா; அவை வடுப்போல் இருக்கும். பரிகாரமே காண முடியாத பிரச்னைகள் முளைத்துவிடும். தற்கால யுத்தத்தின் முறை அங்ஙனம் இருக்கிறது.

இந்த யுத்தம் கண்டிப்பாக ஏற்பட வேண்டியதுதானா? அநேகர், 'ஆமாம்' என்கின்றனர். நான் அப்படிச் சொல்லவில்லை. பிரிட்டன், ஜர்மனி, பிரான்ஸ், ரஷ்யா ஆகிய நாடுகள் ஐரோப்பா பற்றி ஓர் ஏற்பாட்டைச் செய்துகொண்டு அதன்படி ஒன்றுபட்டிருந்து, பற்றில்லாத மனோபாவத்துடன் சீன, இந்திய, ஆப்பிரிக்க வாசிகள் சுயேச்சையாகத் தாங்களே ஆட்சி புரியலாம் என்று அறிவித்து, சாத்தியப்பட்டவரையில் உலகில் அவர்கள் சுதந்தரமாக வியாபாரம் செய்துகொள்ளலாம் என்றும் கூறி, மூலப் பொருள்கள் விஷயத்திலோ அல்லது நியாயமான மார்க்கெட்டு வசதிகளிலோ எந்த நாட்டுக்கும் தீங்கு விளைவிப்பதில்லை என்று அறிவிக்கும் பட்சத்தில் இந்த யுத்தம் ஆரம்பமாகி இராது.

மனித இயற்கையை மனத்தில் நினைத்துப் பார்க்கையில் நான் எதிர்பார்ப்பது அதிகமானது என்பது உண்மைதான். ஆனால் இதற்கு மாற்று என்ன? இரண்டு கட்சிகளில் ஒன்று வெற்றி பெற்றாக வேண்டும். அமெரிக்காவின் உதவியுடன் பிரிட்டன் ஜயித்தால் உலகப் பிரச்னைகள் அப்படியேதான் இருக்கும். மீண்டும் வர்ஸேல்ஸ் ஒப்பந்தம் ஏற்படுமாயின் அது மனித வர்க்கத்துக்குக் கொடுமை ஆகும். ஹிட்லர் ஜயித்தால் அது எதிர்காலத்தில் இன்னும் பல யுத்தங்கள் முளைக்க விதை நட்டதாகும். இந்த யுத்தம் முடிவாக எந்தப் பிரச்னையையும் தீர்க்காது. மனித வர்க்கமே முன் வந்து, முயன்று, இப்பிரச்னைகளைத் தீர்க்க

வேண்டும். நான் அதற்கான வழிகளைத்தான் மேலே குறிப் பிட்டேன்.

இவை தவிர இன்னொரு விஷயம். சாமானிய ஜனங்கள், ஸ்திரீகள், குழந்தைகள் இவர்களை யெல்லாம் நாகரிகமாக நடப் பவர்கள் கொன்று குவிக்கின்றனர். கலைச் சின்னங்களாகவும் பிரம்மாண்டமானதாகவும் உள்ள கட்டிடங்களை யெல்லாம் ஹதம் செய்கிறார்கள். இவைகளை யெல்லாம் நாகரிகம், கடவுள் என்ற பெயர்களால் செய்கின்றனர். தற்கால யுத்தத்தின் கேவலமான அம்சம் இது புராதன யுத்தங்களைவிடத் தற்கால யுத்தம் மிகக் கொடுமையானது. பழைய யுத்தங்களில் க்ஷத்திரியர்களும் வீரர் களும் சண்டையிடுவர். ஒன்று ஜயிப்பர்; அல்லது மடிவர். ஆனால் இப்போதோ அப்படி அல்ல. நாட்டினர் எல்லோரும் சண்டையில் ஈடுபட்டிருக்கின்றனர். எல்லா நாடுகளிலும், நல்ல வர்கள் இருப்பர். உயிரையும் சொத்தையும் வேண்டுமென்றே மாய்க்கும் இந்த நாச காரியம் அவர்களுக்கு வெகு குரூரமாக இருக்கும். அவர்களாவது இந்த யுத்த முடிவில் முன் வந்து, மீண்டும் இதுபோன்ற யுத்தம் வேண்டாம் என்று செய்து, அதை அமுல் நடத்த முற்படுவது சாத்தியம் அல்லவா?

எதிர் காலமே இதற்குப் பதில் சொல்ல வேண்டும். இதற் கிடையே நாம் மிருக பலத்துக்கு எதிராகத் தர்மம் வெற்றிபெற வேண்டும் என்றும், மீண்டும் மிருகபலத்தின் கோர ஸ்வரூபம் தலை எடுக்காமல் இருக்க வேண்டும் என்றும் நினைந்து சேவை செய்வோமாக!

3-7-'41.

# வகுப்புக் கலவரம்

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

நாட்டில் வகுப்புக் கலவரங்கள் நடப்பதுபற்றிய செய்திகள் இப்போது பத்திரிகைகளில் வெளிவருவதை நீ படிக்கிருய். பம்பாய், அகமதாபாத், டாக்கா, அலஹாபாத், காசி முதலிய இடங்களிலும் சில சமயங்களில் நம் மாகாணத்திலும் வகுப்புக் கலவரங்கள் என்று பகிரங்கமாகச் சொல்வது மிகை என்றே நான் எண்ணுகிறேன். அங்ஙனம் குறிப்பிடுவது கலகங்களை நீடிக்கச் செய்து, அவற்றைத் தீவிரமாக்குவதாகும்; இந்து முஸ்லிம் ஆகிய வகுப்புகளிலுள்ள காலிகள் அடிக்கடி அற்பமான காரணங்களை முன்னிட்டு ஒருவரை ஒருவர் தாக்குகின்றனர்; காயப்படுத்துகின்றனர்; கொலையும் புரிகிருர்கள் என்பது புலனுகும். இக் கலவரங்களை அடுத்து, கடைகள் கொள்ளையிடப்படுகின்றன; சொத்துக்கள் தீயிடப்படுகின்றன; ஸ்திரீகளும் தாக்கப்படுகிருர்கள். மசூதிகளையும் ஆலயங்களையும் தாக்குகின்றனர். பசுக்கள் கொல்லப்படுகின்றன; மசூதிகளுக்கு முன்னுல் மேள, தாளங்களை முழக்குகின்றனர்.

இந்தச் சம்பவங்களையெல்லாம் நான் கூர்ந்து கவனித்தேன். நான் யோசனை செய்ததில் இக் கலகங்கள் எல்லாவற்றையுமே தடுக்க முடியாவிட்டாலும், அநேகமாகப் பல கலவரங்களைத் திறமையாகவும் சீக்கிரமாகவும் தடுக்கலாம் என்று அபிப்பிராயப் படுகிறேன். இவற்றில் பெரும்பகுதியில் சம்பந்தப்படுபவர்கள் அந்த அந்த ஊரில் உள்ள போக்கிரிகளே என்பது பிரசித்தம். போலீசாரிடம் அவர்களைப்பற்றிய ஜாபிதாவும் விலாசங்களும் இருக்கின்றன. ஏதாவது கலாட்டா ஆரம்பம் ஆகுமென்று

சந்தேகம் உதிக்குமானால் அப்போது மேற்படி நபர்களைப் போலீ சார் எச்சரிப்பர். நிர்ப்பந்த நிலைமை ஏற்படுமாயின் உடனே அவர் களைப் பிடித்துக் காவலில் மடக்கி வைப்பர் நெருக்கடி நிருமள வும் அவர்களைக் காவலில் வைப்பதும் உண்டு. இதனால் அநேக சந்தர்ப்பங்களில் தொந்தரவே இல்லாமல் போய்விடும். அப்படி யும் தொல்லைகள் இருக்குமானால் அதைக் கண்டிப்பான முறையில் அடக்க வேண்டும். இரண்டு வருஷத்துக்கு முன்னால் பம்பாயில் காங்கிரஸ் மந்திரி சபை இவ்விஷயத்தைத் திறம்படக் கவனித்துச் சமாளித்தது. ஸ்ரீமான் முன்ஷியும் பிரதம மந்திரி ஸ்ரீ பி. ஜி. கெர்ரும் சர்தார் வல்லபாய் படேலின் உதவியுடன் மேற்படி விஷயத்தை நன்கு நிர்வகித்தார்கள். அப்போது நான் பம்பாயில் இருந்ததால் இது எனக்குத் தெரிய வந்தது. வகுப்புக் கலகங்கள் திறமையான முறையில் கட்டுப்பாட்டுடன் அடக்கப்பட்டன.

ஏன் அப்படி இப்போது செய்யப்படவில்லை? இப்போது பம்பாய், பீஹார், ஐக்கிய மாகாணங்களிலுள்ள சர்க்கார்கள் இந்த வகுப்புக் கலவரங்களை அடக்க விரும்பவில்லை என்றும் நமது ஒற் றுமை இன்மையும், நாகரிக மற்ற நிலைமையும் வெளிப்பட வேண் டுமென்று அவர்கள் விரும்புவதாகவும் நிச்சயம் இல்லாமல் சிலர் சொல்கிறார்கள். நாம் அவ்வளவு தூரத்துக்குப் போக வேண்டிய தில்லை. ஜன ஆதரவுள்ள சர்க்காரைப்போல் அங்குள்ள சர்க்கார் இவ் விஷயத்தில் தீவிரமாக நடக்க எண்ணம் இல்லாமல் இருக்க லாம். பெரிய அரசியல் பிரச்னைகள் ஒருபுறம் இருக்கட்டும். வகுப் புக் கலவரங்கள் ஏற்படாமல் அவற்றைத் திறமையாகவும் சீக் கிரமாகவும் தீர்ப்பதற்கு மேற்படி மாகாணங்களில் ஜன ஆதர வுள்ள மந்திரி சபைகள் ஏற்பட வேண்டியது அவசியம். இவ்விஷ யத்தில் ஒரே முறையையே அடிக்கடி அநுஷ்டிக்கிறார்கள். அது அப்படி இருக்கக் கூடாது. கலவரங்கள் ஏற்பட்டதும் சில சந்தர்ப்பவாதிகள் மும்முரமாக வெளிக்கிளம்புகின்றனர். 'வகுப்புத் தலைவர்கள் மகாநாடு' கூட்டுகின்றனர். சர்க்காரும் போலீசாரும் இதில் ஒத்துழைக்கின்றனர். இதெல்லாம் தவறு. இந்த விஷயத் தைப் போலீசாரும் ராணுவத்தைச் சேர்ந்தவர்களும் கவனிக்க வேண்டியதே தவிர தலைவர்களுக்கான வேலை இது அல்ல.

## வகுப்புக் கலவரம்

இதுபோன்ற சந்தர்ப்பங்களில் நிதானம் அவசியம். தாழ்வான உணர்ச்சிகளை அடக்குவதற்கும், பொய் வதந்திகளை மறுப்பதற்கும் நிதானமாக இருக்க வேண்டும். கலகம் ஏற்பட்டாலும் அது வகுப்புக் கலவரமாக மாருமல் தடுக்க, இரு வகுப்புத் தலைவர்களும் தங்களால் ஆனதைச் செய்ய வேண்டும். ஹிந்துக்கள் எல்லோரும், 'முஸ்லிம்கள் அனைவரும் சக்திவாய்ந்த எதிரிகள்' என்று நினைக்கின்றனர். அதேமாதிரி முஸ்லிம்கள் ஹிந்துக்களைப் பற்றி எண்ணுகின்றனர். இதுதான் அபாயமானது. இந்த விஷயத்தில் தக்கவாறு சேவை செய்ய வேண்டும். கலகங்கள் ஏற்படாமல் தடுத்து, சட்டப்படி நடவடிக்கைகளைப் போலீஸாரும் மாஜிஸ்ட்ரேட்டுகளும் எடுத்துக்கொள்ள வேண்டியது தனி வேலை.

வகுப்புக் கலவரங்கள் பரவி நீடிப்பதற்குக் காரணம், இரு கட்சிகளில் ஏதாவது ஒரு கட்சியின் கோழைத்தனமே. துரதிருஷ்டவசமாக இது ஹிந்துக்களிடமே பெரும்பாலும் காணப்படுகிறது. இங்கே நான் பலாத்காரத்தைப்பற்றியோ அஹிம்சையைப்பற்றியோ பேசவில்லை. கலகம் என்ருல் ஹிந்துக்கள் முஸ்லிம்கள் எல்லோரும் ஒன்றுசேர்ந்து காலாடிகளைப் பார்த்த மாத்திரத்திலேயே ஓடாமல் நின்ருல் விஷயங்கள் வேறுவிதமாக இருக்கும். நாம் நமது சகோதர சகோதரிகளுக்கும், குழந்தைகளுக்குங் கூட, யாராவது தாக்கிஞல் தங்களைப் பாதுகாத்துக்கொள்ளும்படியும், எதிரிகளுக்குப் பணிந்துவிடாமல் இருக்கும்படியும் பயிற்சி அளிக்க வேண்டும். இதற்காக நாட்டில் சில பள்ளிக்கூடங்கள் இருக்கின்றன. அதுபோன்ற பள்ளிக்கூடங்களை இன்னும் அதிகமாக ஏற்படுத்த வேண்டும்.

இதற்கு உண்மையான பரிகாரம் நம்மவர்களுக்கு அறிவு புகட்டுவதே யாகும். முஸ்லிம்களும் ஹிந்துக்களும் இந்தியர்களென்றும், மனிதர்கள் என்றும் உணரச் செய்ய வேண்டும். ஜனுப் ஜின்னுவும் அவரது நண்பர்களும், முஸ்லிம்கள் தனி இனம் என்றும், ஹிந்துக்களோடு உறவாக வாழ முடியாதென்றும்

## 'அருமைப் புதல்விக்கு

அடிக்கடி முஸ்லிம்களுக்குச் சொல்லி வருகின்றனர். டாக்டர் மூஞ்சேயும் மற்றவர்களும் ஹிந்து ராஜ்யம் வேண்டும் என்கின்றனர். ஒருவருக்கொருவர் மண்டையை உடைத்துக்கொள்கின்றனர். சகோதரர்களை எதிர்த்துப் போராடுவது உண்மையான மதம் அல்ல. சகோதரத்வம் இஸ்லாத்தின் அடிப்படை; ஹிந்து மதத்தின் அடிப்படை தர்மம். இது அரசியல் அல்ல. குறுகிய நோக்கத்துடன் கவனித்தாலும், இந்தக் கலகங்களால் எந்த வகுப்புக்கு லாபம்? இதனால் என்ன பயன்? இது விகாரமான அம்சம். இந்தியாவிலிருந்து இது மறைய வேண்டும். சீக்கிரம் மறையும் என்றே நான் நம்புகிறேன்.

4-7-'51

# அஹிம்ஸா தர்மம்

**என் அன்புள்ள**
**லக்ஷ்மிக்கு,**

யுத்தத்தைப்பற்றியும் நமது நாட்டிலே நடக்கும் வகுப்புக் கலகங்கள் குறித்தும் சென்ற என் இரண்டு கடிதங்களில் உனக்கு எழுதியிருந்தேன். நியாய சித்தமுள்ளவர்கள் எல்லாம் இதுபோன்ற ஸம்பவங்கள் நடப்பது கண்டு வருந்துகின்றனர். இவற்றிற்கெல்லாம் உன்னதமான பரிகாரம் அஹிம்ஸா தர்மமே என்று மகாத்மா காந்தி உபதேசிக்கிறார். தம்மால் முடிந்த அளவுக்கு அவரும் அந்தக் கொள்கையைப் பின்பற்றி நடக்கிறார். சண்டையைக் கண்டு பயந்து ஓடும் பயங்காளியின் அஹிம்ஸை அல்ல அது. அந்தரங்க சுத்தி இல்லாமல் அஹிம்ஸா முறையைக் கைக்கொள்வதும் அவர் முறை ஆகாது. ஆனால் பலாத்காரத்தையும் தீமையையும் எதிர்த்துத் தியாகங்கள் செய்து, அதன் மூலம் அஹிம்ஸா தர்மத்தை உறுதியோடும் வீரத்தோடும் பின்பற்றும் முறையே மகாத்மா காந்திஜியின் முறை ஆகும். பலாத்காரச் செயலுக்கு எதிராகப் பலாத்காரத்தில் ஈடுபடாமல், தானே கஷ்டங்களுக்கு உட்படும் முறையையே மகாத்மா கைக்கொண்டிருக்கிறார்.

சமீபத்தில் சில வருஷங்களுக்கு முன்னர் நான் மகாத்மாவுடன் இருந்தபோது எல்லைப்புற மாகாணம் ஆகிய இடங்களிலிருந்து திடகாத்திரமுள்ள சிலர் அங்கே வந்திருந்தார்கள். தங்களது மாகாணங்களில் முஸ்லிம்கள் அக்கிரமம் புரிகின்றனர் என்றும், சொத்துக்களுக்குச் சேதம் விளைவித்துத் தங்கள் ஸ்திரீகளை உபத்திரவிக்கிறார்கள் என்றும் அவர்கள் மகாத்மாவிடம் புகார் கூறினார்கள். காந்திஜீ பின் வருமாறு அவர்களிடம் சொன்னார்: 'நீங்கள் ஏன் இங்கே வந்தீர்கள்! கடமையைச் செய்து தீர்க்கவேண்டிய இடத்தை விட்டு நீங்கள் ஓடி வந்திருக்கக் கூடாது. காலாடி

கள் தங்களுடைய திருவிளையாடல்களைத் துவக்கும் முன்னரே நீங்கள் உங்களைத் தியாகம் செய்துகொண்டிருக்க வேண்டும்.'

ஆனால் ஒரு விஷயம்: வகுப்புச் சண்டைகளிலும் கலவரங்களிலும் வீரத்தோடு பரிசுத்தமான அஹிம்ஸா தர்மத்தைக் கைக்கொள்வதனால் தற்போதுள்ள மனித வர்க்கத்துக்கு எவ்வளவு தூரம் பயன் ஏற்படும் என்பது கேள்வி. இதுவரை அது பயன் பட்டதாகத் தெரியவில்லை. பெருவாரியான முறையில் இக் கொள்கை அநுஷ்டிக்கப்படவில்லை என்பது உண்மையே. இம் முறைக்கு அவசியமான மனப் பக்குவம் இன்னும் ஏற்படவில்லை என்றே எனக்குத் தோன்றுகிறது. அஹிம்ஸா தர்மப்படி, தானே தன்னை வருத்திக்கொள்வதால் எதிராளிக்கு அந்தச் சமயத்தில் மனம் இளகும். உதாரணமாக மனைவி, புருஷன், தந்தை குழந்தை, சகோதரன் சகோதரி, நண்பர், கிராமவாசிகள் ஒரே நாட்டினர் முதலியவர்களிடையே, பந்துத்வம் உள்ளவர்களிடம் இருப்பின் இது சாத்தியமாக இருக்கக் கூடும். ஆனால் இப் போது இருப்பதை வைத்துக்கொண்டு பார்த்தால் அஹிம்ஸை வெற்றி பெறும் என்று எனக்குத் தோன்றவில்லை

மனிதன் நாகரிகத்தில் முதிர்ச்சி அடையும்போது இறுதியில் அஹிம்ஸா தர்மம் மெய்யாகி வெற்றி பெறும் என்பது அடிப்படையான உண்மைதான்.

இந்தக் கலகங்களெல்லாம் நடவாத வழியில் நம்மவர்களைச் சரிப்படுத்திக்கொள்ள வேண்டியது அவசியம்; அப்படியே கலகங்கள் ஏற்படுகின்றன என்றாலும் அவற்றைச் சீக்கிரத்தில் அடக்கவும் வேண்டும். இதற்கு உடனடியாகவுள்ள பரிகாரம் போன கடிதத்தில் உனக்கு நான் எழுதியிருப்பதுபோல் போலீஸ் உதவிதான். நாளாவட்டத்தில் உபயோகத்தில் வைத்துக்கொள்ளக் கூடிய பரிகாரம் அஹிம்ஸை. எப்படியும் அதைப் பரீட்சித்துப் பார்க்க வேண்டியதுதான்.

அஹிம்ஸா தர்மத்தைக்கொண்டு, சர்வ தேசச் சிக்கல்கள் காரணமாக மூளும் உலக மகாயுத்தங்களை நிறுத்தவோ தடுக்க

வோ முடியுமா? மகாத்மாஜி சிறிதும் தயங்காமல், 'முடியும்' என்கிருர். டால்ஸ்டாய்கூட அப்படியே சொல்லியிருக்கிருர். ஏசு கிறிஸ்துவும் அங்ஙனம் தெரிவித்திருக்கிருர். புத்தர் கூறியதும் அப்படியே. கலிங்கர்களை வெற்றிகொண்ட பின்னர் அசோக சக்கரவர்த்தி விடுத்த பிரகடனத்தில் அஹிம்ஸா தர்மத்தின் வெற்றி, வெளிப்படுத்தப்பட்டிருக்கிறது. நாம், 'அஹிம்ஸா பரமோதர்ம: (अहिंसा परमो धर्मः)' என்கிருேம்.

மனித வர்க்கத்தின் சரிதை முழுதிலும் அஹிம்ஸா தர்மம் ஒரு கோட்பாடாக இருந்தே வந்திருக்கிறது. ஆனால் அம் முறை பெருவாரியாகவோ போதுமான அளவிலோ அநுஷ்டிக்கப்படவில்லை. அது வெற்றி பெறவில்லை. ஆனால் அது தோற்றுவிட்டதென்று சொல்லவும் முடியாது. ஏனெனில் அம்முறையைப் பரீட்சித்துப் பார்க்கவில்லை. ஸெக்கோஸ்லேவாகியாவும் மற்ற நாடுகளும் இதற்கு உதாரணங்கள் ஆகா. அஹிம்ஸா தர்மத்துக்கு அவை உதாரணங்கள் அல்ல. சண்டை செய்ய முடியாததால் அந்நாடுகள் சரண் புகுந்துவிட்டன. முடிந்திருந்தால் அந்நாட்டினர் சண்டை போட்டிருப்பார்கள்.

தற்போது போகும் முறையில் யுத்தம் போய்க்கொண்டிருந்தால் மனித வர்க்கத்துக்கு எதிர்காலம் உண்டென்றே நிச்சயமாகச் சொல்ல முடியாது. ஒரேயடியாகப் பரஸ்பரம் அழிய வேண்டியதுதான். இக்கருத்தை நான் ஒப்புக்கொள்கிறேன். இக்கேட்டை நிறுத்த ஏதாவது செய்தாக வேண்டும். அஹிம்ஸா முறையால் யுத்தங்களையெல்லாம் நிறுத்திவிட முடியும் என்று மகாத்மா காந்திஜி கருதுகிருர். இப்போதும், எப்போதும் இந்தியா அஹிம்ஸையைப் பின்பற்றி நடக்க வேண்டுமென்று மகாத்மாஜி அந்தரங்க சுத்தியோடு ஆசைப்படுகிருர். இந்தியாமீது படையெடுப்பு நேரிடுமானல் அஹிம்ஸா முறைப்படி அதை இந்தியா எதிர்க்க வேண்டும். தான் ரத்தம் சிந்த வேண்டுமேயன்றிப் பிறர் ரத்தத்தைச் சிந்தக் கூடாது. எதிரிகளோடு இந்தியா ஒத்துழைக்காது. ஆனல் பலாத்கார 'முறையைக்

கையாண்டு எதிரியோடு இந்நாடு போராடாது. இது மகாத்மாவின் கருத்து.

இந்தியாவுக்கு இது பயன்படுமா? எல்லா இந்தியர்களும் ஒன்றுபட்டு, எந்த இந்தியனும் எதிரியோடு ஒத்துழைக்காமல் இருந்தால் இம்முறை பயன்படக் கூடும். ஆனால் இந்தியாவின் துக்ககரமான சரித்திரத்தைப் பார்த்தால் இந்நாட்டில் எதிரியுடன் பணத்துக்காகவோ பயம் காரணமாகவோ சேர்ந்து ஒத்துழைத்தவர்கள் பலர் இருந்திருக்கின்றனர். இன்றைய நிலைமையில் கூடப் பலர் அப்படி இருக்கின்றனர். அஹிம்ஸா தர்மத்துக்கு நூற்றுக்கு நூறு ஒத்துழைப்பு நம்மவரிடையே இருக்க வேண்டும் இந்த அம்சம் இப்போது இல்லை. வர வெகு நாள் ஆகும்.

எல்லா இந்தியர்களும் ஒன்றுபட்டிருப்பதாகவே வைத்துக் கொள்வோம். இந்தத் தற்கால, கொடிய யுத்த முறையில் எவ்வளவு காலத்துக்கு அஹிம்ஸா முறையை அநுஷ்டிக்க முடியும்? மிருகத்தனமான அடக்குமுறையைக் கையாண்டு ஜனங்களிடையே தோன்றும் மிக்க பலிஷ்டர்களின் எதிர்ப்பையும் எதிரிகள் ஒடுக்கி விடுவார்கள்.

இந்தியாவில் அஹிம்ஸா முறையைக் கைக்கொள்வதில் இன்னும் சில கஷ்டங்கள் இருக்கின்றன. இம் முறையில் நம்பிக்கை இல்லாமல் ஏழெட்டுக் கோடி முஸ்லிம்கள் இருக்கின்றனர். தற்காப்புக்குப் பலாத்காரத்தைப் பிரயோகிப்பது நியாயம் என்று கருதும் ஹிந்துக்களும் பெருவாரியாக இருக்கின்றனர். ஸ்ரீமான் முன்ஷி, பண்டித மதன்மோஹன் மாளவியா, ஹிந்து மகாசபையினர் ஆகியவர்கள் இருக்கின்றனர். இப்படியாயின் அஹிம்சை முன்னேற ஏதாவது மார்க்கம் உண்டா?

5-7-'41

# சர்வதேச சங்கம்

**என் அன்புள்ள**
**லக்ஷ்மிக்கு,**

அஹிம்ஸா தர்மத்தை லட்சியம் ஆக்கிக்கொள்ள முயல வேண்டியதுதான். ஆனால் இன்றுள்ள நிலைமையில் அதை அநுபவ சாத்தியம் ஆக்கிக்கொள்ள வேண்டுமென்றால் அது பயன் பெறும் என்று தோன்றவில்லை. என்னுடைய சென்ற இரண்டு கடிதங்களில் இருந்தும் இதை நீ உணர்ந்துகொண்டிருப்பாய். இது ஏமாற்றத்தைத் தரக்கூடிய முடிவுதான். ஆனால் உண்மையை நிதானித்துத்தானே பார்க்கவேண்டியிருக்கிறது? இந்த லட்சியம் சித்தி பெறுவதற்கு ஓரளவேனும் ஏதாவது செய்ய முடியுமா? செய்ய முடியும்; செய்ய வேண்டும்.

வகுப்புக் கலகங்கள் சம்பந்தப்பட்ட வரையில் நாம் விவேகத்தை உபயோகித்து நடக்க வேண்டும். எல்லா வகுப்புகளிலும் நல்லவர்கள், கெட்டவர்கள் இருக்கின்றனர். அடியோடு கெட்டதாகவோ, முற்றும் நல்லதாகவோ எந்த வகுப்பும் இல்லை. ஆத்திர முற்ற சமயத்தில் முஸ்லிம்களும் தங்களை மறந்து செயல் புரிகின்றனர். அமைதியாக இருக்கையில் கலவரங்களின்போது தாங்கள் செய்த காரியங்களை நினைந்து, வருந்தி அவர்கள் வெட்கப்படுவர். இதை நாம் உணர வேண்டும். எல்லோருமே அப்படி இல்லாவிட்டாலும் சிலரேனும் மேற்சொன்ன மாதிரி நினைப்பார்கள். அவர்கள் யார் என்பதை அறிந்துகொள்ள வேண்டும். கலவரங்கள் நடக்கும்பொழுது மூர்க்கமான ஹிந்துக்களிடமிருந்து நிரபராதிகளான முஸ்லிம்களைப் பாதுகாப்பதற்கு ஹிந்துக்கள் அஹிம்ஸா தர்மத்தைக் கைக்கொள்ளலாம். வகுப்புகளிடையே அமைதியும் நல்லுறவும் நிலவச் செய்வதற்கு இதைவிடச் சிறந்த மார்க்கம் வேறு இல்லை.

இவற்றை யெல்லாம்விட, சாதாரண காலங்களில் நம் நாட்டின் அன்றாட வாழ்வில் அஹிம்ஸா தர்மத்தை எல்லா வகுப்பினரும் கடைப்பிடிக்க வேண்டும். 'ஹிந்து பாணி', 'முஸ்லிம் பாணி', 'ஹிந்து சா', 'முஸ்லிம் சா', 'ஹிந்து காஹ', 'முஸ்லிம் காஹ' இப்படியெல்லாம் இந்தியாவிலுள்ள ரயில்வே பிளாட்பாரங்களில் வெகு சாதாரணமாகக் கூவுகின்றனர். ஹிந்துக்கள், முஸ்லிம்களின் கடைகளிலும் முஸ்லிம்கள், ஹிந்துக்களின் கடைகளிலும் யாதொன்றும் வாங்க மாட்டார்கள். இவையெல்லாம் ஒழிய வேண்டும். எப்போதாவது தகராறு இருந்தபோதிலும் நாம் எல்லோரும் ஒன்றுபட்டுச் சேவை செய்து சகோதரர்கள்போல் இருக்கக் கற்றுக்கொள்ள வேண்டும்.

சர்வதேச விவகாரங்களில் ஏதாவது கொஞ்சமாவது அஹிம்ஸா தர்ம அநுஷ்டானத்துக்கு இடம் உண்டா? இடம் உண்டு. ஆனால் ஒன்று; பெரிய நாடுகள் நாட்டு ஆசையை விட்டு அந்தரங்க சுத்தியோடு அமைதியாக மற்றைய நாடுகளுடன் வாழ முற்பட்டால் அது சாத்தியமே. அகால மரணம் அடைந்த சர்வதேச சங்கம் இத் துறையில் உருவான முயற்சி செய்தது. ஆனால் அது மிகக் கேவலமாக முறிந்து போயிற்று. ஆரம்பமே சரியாக இல்லை. இது உருவடைவதற்குப் பொறுப்பாளியாக இருந்தவர் ஓர் அமெரிக்க ஜனாதிபதி. ஆனால் அமெரிக்கா அதில் சேரவில்லை! பின்னர் இத்தாலி, ருஷ்யா, ஜர்மனி, ஜப்பான் ஆகிய நாடுகளும் விலகிக்கொண்டு விட்டன. எஞ்சி அங்கம் வகித்த நாடுகளும் இதர நாடுகளைப்பற்றியோ உலக சமாதானத்தைப்பற்றியோ எண்ணாமல் தங்கள் விஷயத்தையே கவனித்துக்கொண் டிருந்தன.

பொருளாதாரத் துறையிலேனும்—அதாவது நாட்டாசை கொண்ட நாடுகளுக்கு எண்ணெயையோ, யுத்த தளவாடங்களையோ விற்பனை செய்யாமல் - ஏற்பாடுகள் செய்திருந்தால் சர்வ தேச சங்கம் ஏதோ ஒன்றைச் செய்ததாக இருக்கும். ஆனால் அது அங்ஙனம் செய்யவே இல்லை. ஜப்பான் சீனாவிடமிருந்து மஞ்சூரியாவைப் பிடித்துக்கொண்டு அதற்கு, 'மஞ்சுகோ' என்ற பெயரிட்டபோது சீனாவுக்குச் சர்வதேச சங்கம் உதவவில்லை. அபி

ஸீனியாவிலும் அப்படியே. இத்தாலிக்கு அப்போது எண்ணெய் விற்பனை செய்யப்பட்டது. தொடர்ச்சியாக அநேகம் விஷயங்களில் சர்வதேச சங்கம் வழிகாட்டத் தவறிவிட்டது.

சர்வதேச சங்கம் தோல்வியுற்றதற்குக் காரணம் என்ன? அது உண்மையான சர்வதேச சங்கமாக அமையவில்லை என்பதுதான். இதில் சீனு ஒரு மெம்பர். ஆனால் அதற்கு உண்மையான செல்வாக்கு அதில் இல்லை. இந்தியாவும் அதில் ஒரு மெம்பர்தான். அநுஷ்டானத்தில் இது பிரிட்டனுக்கு அதிகப்படியாக ஓர் ஓட்டு என்பதைத் தவிர வேறு ஒன்றும் இல்லை. உலக ஜனத்தொகையில் பாதிப் பங்குள்ள ஒரு சமாஜத்துக்கு உண்மையான செல்வாக்கு இல்லையானல் எப்படிச் சர்வதேச சங்கம் வெற்றி பெறும்?

இதனுல் அஹிம்ஸா முறைக்குச் சர்வதேசத்தில் கொஞ்சமும் இடம் இல்லையென்று அர்த்தமா? இல்லையென்று சொல்ல நான் தயங்குகிறேன். திட்டமாக இடம் உண்டு என்று இப்போதும் சொல்ல முடியாது. சக்திக்குப் பதிலாக விவாதம், மத்தியஸ்தம் முதலியவற்றைக் கூடுமானவரையில் கையாண்டு பார்க்க வேண்டும். ஆனல் இதுவரை இது வெற்றி பெறவில்லை. சர்வதேசச் சச்சரவுகள் பலவற்றை நீதிபதிகள் உள்ள விசாரணை சபையைக் கொண்டு ஏன் தீர்க்கலாகாது? இந்த யுத்தத்திற்குப் பிறகாவது விவேகமுள்ள உலக நிலை உதயமாகும் என்று நான் நம்புகிறேன். சீனுவும் இந்தியாவும் சுயமான அந்தஸ்தை அடைந்தால் மத்தியஸ்தத்தின் மூலம் உலக சமாதானத்தைப் பராமரிக்கும் விஷயத்தில் அவை பெரிதும் உதவக்கூடும். யுத்தங்களால் சச்சரவுகள் தீரா. ஆனுல் அவற்றுல் மேலும் யுத்தங்களே தலையெடுக்கும் என்பதை ஐரோப்பிய நாடுகள் உணர நேரும். இப் படிப்பினையை உணரும் பக்ஷத்தில் புதிய, பரிசுத்தமான சர்வதேச சங்கம் உதிக்கும். இதற்கிடையே யுத்தக் கொடுமையைத் தணித்து, அமைதியை நிலைநாட்ட சமாதானவாதிகள் விரும்பும் சில வழிகள் உண்டு. அவற்றை அடுத்த கடிதத்தில் தெரிவிக்கிறேன்.

6-7-'41.

# யுத்தக் கொடுமைகள்

**என் அன்புள்ள**
**லக்ஷ்மிக்கு,**

யுத்தங்கள் நடக்கத்தான் வேண்டுமென்றால் அதன் கொடுமைகளைக் குறைப்பதற்காகவாவது பல்வேறு நாட்டினரும் முயலலாம். தேசங்கள் போரில் ஈடுபட வேண்டும் என்றால் சர்வதேச சட்டப்படியோ அல்லது கட்டுப்பாட்டின்படியோ, பழக்கப் பட்டு, அதற்காக ஈடு செலுத்தப்பட்ட ஸோல்ஜர்கள், மாலுமிகள், விமானிகள் இவர்களுடன் மாத்திரம் ஏன் யுத்தத்தை நிறுத்திவிடக்கூடாது? அவர்கள் சண்டை இடட்டும். தேசங்களின் கதியை நிர்ணயிப்பதற்குப் பலாத்காரமே ஒரு நீதிபதியாயின் தேக வலுவுள்ளவர்களின் கோஷ்டி வெற்றி பெறட்டும்.

ஒரு நாட்டை முற்றுகையிட்டு, அங்கே உள்ளவர்களை எல்லாம் பட்டினி போட்டு, அதன்மூலம் அவர்களைப் பணிய வைப்பது என்பது மனித வர்க்கத்திடம் அநுதாபம் இல்லாமல் நடந்துகொள்வதாகும். இந்த ஆசைக்கு எந்த நாடும் விலக்கில்லை.

முதலடியாக யுத்த காலங்களில்கூட உணவுப் பொருள்கள், உடைகள் இவை விஷயத்தில் போக்கு வரத்துக்களைப் பாதுகாக்க வேண்டும். அடுத்தபடியாக ஸ்திரீகள், குழந்தைகள், புருஷர்கள் முதலியவர் உள்ள கப்பல்களைச் சப்மரீன்களைக் கொண்டு மூழ்கடிக்கும் முறையைச் சர்வதேசக் கட்டுப்பாடுகளால் தடைசெய்ய வேண்டும். மேற்சொன்ன மாதிரி சப்மரீன்களைக்கொண்டு புரியும் கொடுஞ் செயல் யுத்த வீரம் அல்ல. இது பயங்காளித்தனம் ஆகும். யுத்தக் கப்பல்கள் சண்டை போடட்

டும்; வலுவுள்ளவை ஜயிக்கட்டும். ஏன் ஒவ்வொரு நாடும் மறை முகமாகத் தாக்கிக்கொள்ள வேண்டும்?

சாமானிய மக்களையும் அவர்கள் வசிக்கும் இடங்களையும் சரித்திர பூர்வமான அபூர்வ கட்டிடங்களையும் குண்டு வீசிக் கொன்று, நாசஞ் செய்து, குவிப்பது அநாகரிகச் செயல். விமானத்திலிருந்து குண்டு எறிவதை அடியோடு நிறுத்த வேண் டும் என்று நான் அபிப்பிராயப்படுகிறேன். சம்பந்தப்பட்ட நாடுகள் இதற்குத் தயாராக இல்லாவிட்டால் ராணுவ நிலையங்க ளோடு மட்டும் குண்டு வீசுவதை வைத்துக்கொள்ளட்டும்; விவே கம் இல்லாமல் குண்டுகள் வீசுவதை நிறுத்தட்டும். விமானத்தி லிருந்து குண்டுகளை வீசுவதால் கண்டபடியெல்லாம் அவற்றைப் போடும்படி நேரும். ஆனால் ஒருவிதமான கட்டுப்பாடும் இல் லாமல் இருப்பதற்குப் பதிலாக ஏதாவது ஒரு வரையறை செய்து கொள்வது மேல். சில வருஷங்களுக்கு முன்னர் சர்வதேச சங் கத்தின் கூட்டத்தில், எல்லா நாடுகளும் சாமானிய ஜனங்களின் மீது குண்டுகள் போடக்கூடாது என்று உத்தேசித்தார்கள். ஆனால் துன்பம் தரக்கூடிய செய்தி என்னவெனில், இதைப் பிரிட் டன் ஆக்ஷேபித்தது. இந்தியாவில் வடமேற்கு எல்லைப்புறத்தில் குண்டுகளை வீசும் அதிகாரம் தனக்கு இருக்க வேண்டும் என்ற ஒரு காரணத்தைத்தான் அது தெரிவித்தது?

பிறகு, யுத்தத் தளவாடங்களைச் சொந்த ஹோதாவில் உற் பத்தி செய்வதையும், எண்ணெய் பெட்ரோல் இவற்றைச் சொந்த மாகப் பாவித்துத் தனி உரிமை கொண்டாடும் வழக்கத்தையும் எல்லாத் தேசங்களும தடை செய்ய வேண்டும். யுத்தத்தில் ஈடு படும் நாட்டின் இளைஞர்கள் பலியாகின்றனர். மற்ற நாடுகள் ஆயுதங்களையும் தளவாடங்களையும் யுத்தத்தில் ஈடுபட்ட நாட்டி னருக்கு வித்தியாசமின்றி விற்பனை செய்து, லாபம் சம்பாதிக்கின் றனர். இது மனிதருக்கும் கடவுளுக்கும் எதிராக இழைக்கும் குற்ற மல்லவா? யுத்த தளவாட உற்பத்தியைச் செய்வதற்குச் சர்க்கா ருக்கே உரிமை இருக்க வேண்டும்; படையெடுப்புக்கு ஆளான நாடுகளுக்கன்றி படையெடுக்கும் நாடுகளுக்கெல்லாம் யுத்தத் தள

வாடங்களை விற்பனை செய்யக் கூடாது அப்படிச் செய்தால்தான் மேற் சொன்ன விபரீதத்தைத் தடுக்க இயலும்.

இதேபோல் எண்ணெய், பெட்ரோல் இவற்றின் விஷயத்திலும் ஏற்பாடு செய்ய வேண்டும். தற்கால யுத்தங்கள் இவையின்றி நடக்க முடியாது. எண்ணெய்க் கிணறுகளைக் கைப்பற்றுவதற்காகவே இந்த யுத்தம் உள்பட அநேகம் யுத்தங்கள் நடக்கின்றன. ஆங்கிலோ-பர்ஷியன் எண்ணெய்க் கம்பெனி, பர்மா ஷெல் முதலியவைகள் சொந்த மேற்பார்வையில் நடக்கின்றன. இவற்றையெல்லாம் சர்க்கார்கள் தங்கள் வசம் ஆக்கிக்கொள்ள வேண்டும். நாட்டாசை பிடித்த நாடுகளுக்கு அவற்றை விற்பனை செய்யக் கூடாது.

இவை அனைத்தும் வெறும் கருவிகள். இதில் முக்கியமானவன் மனிதன்தான். சாமானிய மனிதன் யுத்தத்தை விரும்புகிறானா? தற்கால யுத்தத்தை யாரும் விரும்பவில்லை என்றே நான் நம்புகிறேன். சாதாரணமான ஆங்கிலேயனோ, பிரஞ்சு, ரஷ்ய நாட்டவரோ ஜர்மனியனோ இந்தப் பெருவாரியான நாசத்தைக் காண விரும்புகிறானா? இருக்காது. மற்றொருவன் அழிந்தாலன்றி, தான் வாழவோ உயிரோடு இருக்கவோ முடியாது என்று அவன் கருதுகிறான். இந்த மனோபாவத்தை மாற்ற ஏதாவது வகை செய்ய முடியாதா? முடியும். ஜனநாயக நாடுகளேனும் ஒரு விஷயத்தைச் செய்ய வேண்டும். அதைச் செய்யவும் முடியும். ஜனநாயகம் என்றால் முக்கியமான விஷயங்களில் பகிரங்க விவாதத்தைக்கொண்டு நடத்தப்படும் சர்க்கார். இதில் மிக முக்கியமானது ஒரு நாட்டின் அயல்நாட்டுக் கொள்கை. யுத்தமா—சமாதானமா என்ற விஷயம் அயல்நாட்டுக் கொள்கையைப் பொறுத்திருக்கிறது. ஆனால் அதுதான் பரம ரகசியமாகக் கருதப்படுகிறது. யுத்தம் துவங்கும் வரையில் சாதாரணப் பேர்வழிகளுக்கு எவ்விதத் தகவலும் தெரிவதில்லை. அவன் அதற்காகக் கவலைப்படுவதும் இல்லை. எனவே யுத்தம் ஏற்பட்ட பின் அவன் எதையும் செய்ய முடியாத நிலைமை ஏற்பட்டுப் போகிறது. எனவே கூடுமான வரையில் அந்நிய நாட்டு விவகாரங்களைப் பகிரங்கமாக

நடத்த வேண்டும்; எவ்விதமான ரகசிய உடன்படிக்கைகளும் கூடாது. இது என்னுடைய யோசனை. சென்ற யுத்தத்தின் சரித்திரமும் தற்போது நடக்கும் யுத்தத்தின் சரித்திரமும் ரகசிய ராஜ தந்திரத்தில் ஏற்படக்கூடிய விபரீதத்தை நன்கு விளக்கு பவை ஆகும். பிரான்ஸ் ஏன் திடீரென்று வீழ்ச்சி அடைய வேண் டும்? ரஷ்யாவும் ஜர்மனியும் பரஸ்பரம் ஏன் நேச ஒப்பந்தம் செய்துகொள்ள வேண்டும்? இப்போது அவ்விரு நாடுகளுக் கிடையே யுத்தம் ஏன்? இதுவரையில் அமெரிக்கா யுத்த விஷயத் தில் வாளா இருப்பானேன்? துருக்கியும் எகிப்தும் இதுவரை ஏன் நடு நிலைமை வகிக்க வேண்டும்? அயர்லாந்து ஏன் இன்னும் நடுநிலைமை, வகித்து வருகிறது? இக் கேள்விகள் எல்லாம், 'ஏன்?' என்றே தன் எதிரொலிக்கின்றன.

பொதுவான ராஜ தந்திர முறையை அநுஷ்டித்திருந்தால் தரமாக இருந்திருக்கும்.

7-7-'41.

## 2

யுத்தக் கொடுமைகளைப்பற்றியோ அவற்றைத் தடுப்பது பற்றியோ வேகத்தைக் குறைப்பதுபற்றியோ எழுதும்போது ஓர் எண்ணம் மனத்தில் உதிக்கிறது. விஞ்ஞானத்தைத் தற்கால யுத்தத்தில் துஷ்ப்பிரயோகம் செய்யவில்லையா? மனித வர்க்கத்தின் ஆரம்பத்தில் மனிதன் மனிதனோடு சண்டையிட்டான். அதாவது வில்லுகள், அம்புகள் முதலிய பழைய கருவிகளை வைத்துக் கொண்டே அவர்கள் சண்டையிட்டார்கள். ராமாயணம், மகா பாரதம் இவற்றில் அஸ்திரங்கள், சஸ்திரங்கள் இவற்றைப்பற்றி யெல்லாம் பிரஸ்தாபித்திருப்பதைக் கவனித்தால் தற்கால யுத்தத் தில் உபயோகிக்கப்படும் சில ஆயுதங்களைப்பற்றிய நினைவு ஏற் படுகிறது. ஆனால் தற்காலத்தில் பிரயோகிக்கப்படும் நாசகர மான ஆயுதங்களுக்கு அவை ஈடானவை அல்ல.

உதாரணமாக விமானத்தை எடுத்துக்கொள்ளலாம். இது மிக்க விசேஷமான ஆராய்ச்சி. மனிதன் இயற்கையை வெற்றி

கொண்டு அதைப் பயன்படுத்திக்கொண்டதற்கு இது ஒரு ருசு. பறவைகள்போல் பறந்து திரிந்து, பல இடங்களுக்கும் சென்று இடம், பொழுது இவற்றை அடியோடு லட்சியம் செய்யாமல் இருப்பது என்பது நூதன அநுபவம்; ஆச்சரியகரமான உணர்ச்சி. விமானங்களைப் பிரயாணத்துக்கும் வியாபாரத்துக்கும் உபயோகித்து, மக்களின் வாழ்வைச் சந்தோஷமாக்கும்படி செய்யும் பக்ஷத்தில் அது மிகவும் விசேஷந்தான். ராமாயணத்தில், 'புஷ்பக விமானம்' என்பதைப்பற்றி நீ படித்திருக்கிருய். ஆனல் அது ஜனங்களை ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்துக்குக் கொண்டு சேர்ப்பதற்காகத்தான் உபயோகப்படுத்தப்பட்டது. ஜனங்கள்மீது குண்டு எறியும் நோக்கத்தோடு ராவணன்கூட அதை உபயோகிக்கவில்லை. ஏற்கனவே நான் உனக்கு எழுதியதைப் போல் ஜனங்கள்மீதும் கட்டிடங்கள்மீதும், விமானங்களிலிருந்து குண்டுகள் வீசுவதை அடியோடு நிறுத்த வேண்டும்.

அடுத்தபடியாகச் சப்மரீன். இது நாசவேலையைச் செய்யும் கொடிய ஆயுதம். கப்பல்படை ஆராய்ச்சியின் மூலம் கிடைத்த அதிசயமான கருவி இது. வெகு நேரம்வரையில் ஜலமட்டத்துக்கு அடியில் இருந்து அங்கேயே சஞ்சாரம் செய்து, ஜல மட்டத்துக்கு மேலே கப்பல்கள் செல்வதை எல்லாம் கவனிப்பதென்றல் அது ஆச்சரியமான விஷயமே ஆகும். ஆனல் இதன் நோக்கம் என்ன? ஜனங்களைக் கொன்று சொத்துக்களை நாசமாக்குவதுதான். இது விஷசக்கரம் போன்றதாகும். டார்பிடோப் படகுகள், சுரங்க வெடிகள், மின்சாரச் சுரங்க வெடிகள் முதலியன இந்த வகையைச் சேர்ந்தவை.

விஷவாயுவின் நிலைமை ஒரு புறம். இது பெரிய அசுரன்! வெடிகுண்டுகளைக் கொண்டு வான முழுதும் வாயுமயம் ஆக்குவது, அல்லது பூமியிலிருந்து பீரங்கிகளின்று விஷவாயுவைப் பிரயோகிப்பது. எதுவாயினும் இதில் வேற்றுமை கிடையாது. உயிருள்ள எதுவும் இதனல் கொல்லப்பட்டுவிடுகிறது. விஞ்ஞானிகள் விஷ வாயுக்களை மேன்மேலும் அபிவிருத்தி செய்து அதன் வேகத்தை அதிகமாக்குகின்றனர். தற்கால யுத்தத்தின் வேகம் அபார

மாக இருக்கிறது என்பதற்கான காரணங்களை நான் மேலும் மேலும் அடுக்கிக்கொண்டே போகலாம். விஞ்ஞான ஆராய்ச்சியின் விபரீதங்கள் இவை. எனவே இந்த நாசகரமான காரியங்களுக்கெல்லாம் விஞ்ஞானம் ஓரளவு காரணமில்லையா என்று நினைக்க இடம் உண்டல்லவா?

இரண்டு வருஷங்களுக்கு முன்னுல் பங்களூர் விஞ்ஞானக் கழகத்தில் பேசும்போது நான் அங்ஙனம் சொன்னேன். ஸர் ஸி. வி. ராமன், லேடி ராமன் இவர்களுடைய விருந்தாளியாகப் போயிருந்தபோது ஸர்.ஸி.வி. ராமன் அக்கிராசனத்திலேயே நான் அப்போது பேசினேன். இதற்கு விஞ்ஞானத்தைக் குறைகூறிப் பயனில்லை என்றும், அது துஷ்ப்பிரயோகம் செய்யப்படுகிறதென்றும் ஸர். ராமன் பலமாக எதிர்வாதம் செய்தார். அவர் சொன்னது உண்மைதான். ஆனுல் இந்தத் துஷ்ப்பிரயோகத்தை எப்படித் தடுப்பது?

அறிவு நிரம்பிய விஷயங்களைப்பற்றி நமது முன்னேர்கள் ஒரு விதியை அநுஷ்டித்து வந்தார்கள். அதாவது அந்த விஷயங்களைத் தகுதியாகவுள்ள சிஷ்யர்களுக்கு மட்டுமே—அதுவும் ரகசியமாக இருக்க வேண்டுமென்ற பிரமாணத்தின்பேரில்—உபதேசிப்பார்கள். அவர்கள் செய்தது தவரு?

துரிதமாக அறிவு வளர்ச்சி ஏற்படுவதற்கு, சில இனங்களில் இது தடையாகும் என்றுலும் இந்த நாச வேலையுடன் ஒப்பிட்டுப் பார்க்கையில் இது ஒரு நஷ்டமா? இதற்கு ஒரு யோசனை நான் சொல்லுவேன். உலகத்திலுள்ள விஞ்ஞானிகள் எல்லோருமாக ஒன்று சேர்ந்து உபயோகமற்ற நபர்களிடம் விஞ்ஞானத்தின் மூலம் கிடைத்த அறிவு பரவி, அது நாச வேலைகளுக்கு உபயோகமாகாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். இது சுலபமானதல்ல. இப்படி ஆனுல் அறிவு, விஞ்ஞானிகளுடனேயே நின்றுவிடும்படி இருக்கும்.

பறக்கும் விதத்தையும் ஜனங்களின்மீது குண்டு வீசும் முறையையும் கற்றுக்கொள்ளாமல் போயிருந்தால் இன்று இருப்பதை விட மனித வர்க்கத்துக்குச் சந்தோஷம் குன்றிப் போயிருக்குமா?

எனவே விபரீத ஞானத்துக்கும் அறியாமைக்கும் வித்தியாசம் உண்டு. நாசத்தை உண்டுபண்ணக் கூடிய இதர என்ஜின்கள் விஷயமும் இப்படியேதான். மனிதர்களிடையே விஞ்ஞான வளர்ச்சி வேண்டும் என்ற உணர்ச்சி நியாயமே. ஆனால் அதற்கு நம்மைத் தகுதி உள்ளவர்களாகச் செய்துகொள்ள வேண்டும். ஆனால் விஞ்ஞானம் மனித வர்க்கத்துக்கு க்ஷேமமில்லாமல் செய்துவிட்டது என்னவோ உண்மைதான். இதை நிறுத்துவதற்கான காலம் வந்துவிட்டது. மனிதன்தானே இவ்விஷயத்தில் ஒரு கட்டுப்பாட்டை அநுஷ்டிக்க வேண்டும். அறிவு வளர்ச்சியை அழிவுக்கன்றி மனித வர்க்கத்துக்கு ஆறுதல் தரும் இனங்களின் பிரயோகிக்க வேண்டும் என்ற உணர்ச்சி பெற்ற பிறகே மேற்கொண்டு புதிய விஷயங்களைப்பற்றிய ஆராய்ச்சியில் புக வேண்டும். இம்மாதிரியான தியாகத்தைச் செய்ய முடியுமா என்பது சந்தேகமாக இருக்கிறது. ஆனால் விஞ்ஞானிகள் மனித வர்க்கத்துக்குச் செய்ய வேண்டிய கடமை ஒன்று உண்டு. பிராங்கின்ஸ்டீன் அசுரன் கதையை அவர்கள் மறந்துவிடக் கூடாது.

மேல் நாட்டு விஞ்ஞானிகளைப்பற்றி எனக்கு விரிவாகத் தெரியாது. ஆனால் இந்திய விஞ்ஞானிகள் இத்துறையில் வழி காட்டிகளாக இருந்து, ஓர் உதாரணமாக விளங்க வேண்டும்

8-7-'41.

# யந்திர சாதனம்

**என் அன்புள்ள**

**லக்ஷ்மிக்கு,**

இன்று நீ உன்னுடைய பள்ளிக்கூடத்தில், 'மனிதனும் யந்திரங்களும்' என்ற விஷயமாக நடக்கும் விவாதத்தில் கலந்துகொள்ளப் போவதாக என்னிடம் தெரிவித்தாய். இதுபற்றி உனக்கு நான் சில யோசனைகள் சொன்னேன். அவற்றை இங்கே எழுத்தில் குறிப்பிடுகிறேன்.

மனிதனுக்கும் யந்திரத்துக்கும் அவசியமான முரண்பாடு எதுவும் இல்லை. பார்க்கப் போனால் யந்திரம் மனிதனுடைய சிருஷ்டி. அது அவனுக்கு உடன்பட்டு நடக்க வேண்டிய தாகும். ஆனால் மனிதனுக்கும் யந்திரத்துக்கும் அளிக்க வேண்டிய ஸ்தானத்தைப்பற்றியே முரண்பாடுகளெல்லாம்.

ஒரு விஷயத்தை உடனே ஒப்புக்கொண்டுவிடலாம். உலக ஆரம்பத்தில் மனிதன் தன்னுடைய கை கால்களாலேயே எல்லாவற்றையும் செய்துகொள்ளும்படி இருந்தது. எனவே அதிகமாக எதையும் மனிதன் செய்ய முடியவில்லை. பெரிய வேலைகளைச் சாதிக்கவும் முடியவில்லை. உழைப்போ வெகு அதிகம். முதலில் போக்குவரத்தை எடுத்துக்கொள்ளலாம். முன் காலத்தில் எல்லா இடங்களுக்கும் நடந்தேதான் செல்ல வேண்டும். பிறகு மனிதர்கள் தூக்கிச் செல்லக் கூடிய பல்லக்குகள் ஏற்பட்டன.

பின்பு குதிரை வண்டிகள், காளைகள், கோவேறு கழுதைகள், கழுதைகள், ஒட்டகங்கள், யானைகள் முதலியவற்றைப் போக்குவரத்துக்காக உபயோகப்படுத்திக்கொண்டார்கள். இதற்குப் பிறகுதான் ரயில்வே என்ஜின்களும் ரயில் வண்டிகளும் ஏற்பட்

டன. இதே மாதிரி கப்பல், ஸ்டீமர், விமானம் முதலியன உப யோகத்துக்கு வந்தன. இவை யெல்லாம் நல்லதுதான். இதில் இன்னொரு விஷயம் இருக்கிறது. என்னுடைய பாலியப் பருவத் தில் கட்டை வண்டியில் ஊருக்குப் போன நாட்களும், வழி நெடுக இயற்கைக் காட்சிகளைக் கண்டு ஆனந்தித்துக்கொண்டே, கட்டுச் சாதம் சாப்பிட்ட தினங்களும் எனக்கு ஞாபகம் இருக் கிறது. இது சௌக்கியம் இல்லாமல்தான் இருந்தது. ஆயினும் இதில் சில அழகான அம்சங்கள் இருக்கத்தான் இருந்தன.

அடுத்தபடியாக முன்னேறியவை விளக்கும் நெருப்பும் மனிதன் ஆரம்ப காலத்தில் வெளிச்சம், நெருப்பு இவற்றுக்கு என்னவோ செய்துகொண்டு காலத்தைத் தள்ளும்படி இருந்தது. நம் அக்காலத்தாரைப்போல் இருக்க முடியாது.

மண்எண்ணெய், பெட்ரோல், காஸ், மின்சார விசை இவற் றின் காரணமாக இந்தப் பிரச்னைகள் தீர்ந்துவிட்டன. பெட்ரோல், மின்சாரம் இவை இரண்டைமட்டும் சர்க்கார் ஏகபோக உரிமை யாகக் கொண்டு எல்லா ஜனங்களுக்கும் மலிவாகக் கிடைக்கும் படி செய்ய வேண்டும். லாபம் முழுதும் சர்க்காருக்குப்—அதா வது ஜனங்களுக்கு - போய்ச் சேர வேண்டும். ஆகவே அவசிய மான யந்திர சாதனத்தை உபயோகித்துக்கொள்வதற்கு ஆட்சே பம் இல்லை.

மனிதனுக்கு உணவும் உடையும் அத்தியாவசியமான தேவைகள். உணவு சம்பந்தப்பட்ட வரையில், யந்திர உதவி இருப்பினும் அதை மனிதர்களே பெருவாரியாக உற்பத்தி செய்ய வேண்டும். நமது நாட்டில், மக்களுக்கு விவசாயமே முக் கியமான தொழில். யந்திர சாதனத்தைப் பயன்படுத்திக்கொள் வதன்மூலம் இன்னும் இதை அபிவிருத்தி செய்துகொள்ளலாம். ஆனால் யந்திர உபயோகத்தை ஒரு கட்டுப்பாட்டுக்குள் அடக்கி வைத்துக்கொள்ள வேண்டும். உணவு உற்பத்தி விஷயத்தில் மனிதனே முக்கியமான பாகத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும்.

உணவு உற்பத்தியில் யந்திரங்கள் எவ்வளவு தீங்கை விளை விக்க முடியும் என்பதற்கு நான் ஓர் உதாரணம் சொல்லுகி

றேன். அரிசியில் இரண்டு வகை: மில்லில் குத்திய அரிசி, கைக் குத்தல் அரிசி.

மகாத்மாஜியின் முயற்சியாலும் அகில இந்தியக் கிராமத் தொழிற் சங்கத்தின் முயற்சியாலும் கைக்குத்தல் அரிசியின் அநுகூலங்களை நாம் இப்போது உணர்ந்திருக்கிறோம்.

இதைப்பற்றிப் பிரஸ்தாபிக்கையில் ஒரு முக்கியமான விஷயம் எனக்குத் தோன்றுகிறது. தேக உழைப்பைக்கொண்டு செய்யும் தொந்தரவிலிருந்து மனிதன் விடுபட்டு, அவனுக்கு ஓய்வும், புத்தி வளர்ச்சிக்கான சந்தர்ப்பமும் கிடைக்குமானால் அது விசேஷந்தான். மனிதனுக்கு எல்லையில்லாமல் சந்தர்ப்பங்கள் இருக்கின்றன. இன்னும் மனிதனுடைய சக்தி உச்சத்தை அடையவில்லை. ஒரு காலத்தில் அந்நிலையை அவன் அடையக் கூடும். இதற்கு அவனுக்கு ஓய்வு வேண்டும்.

ஆனால் இதிலும் இன்னொரு விஷயம் இருக்கிறது. நமது நாட்டில் பெருவாரியாக யந்திரங்களை உபயோகிப்பது விரும்பத் தக்கதா? மேலே நான் சொன்னபடி, உடை மனிதனுக்கு முக்கிய மான தேவை. நெசவாலைகளும் நூல் நூற்றல் முதலியனவும் நம் நாட்டில் இருக்கின்றன. கைத்தறி நெசவாளர்களும் இருக்கின்றனர். கதர்வேறு இருக்கிறது. மில்கள் மேன்மேலும் வியாபக மடைந்தால் நமது நாட்டின் தேவை அனைத்தையுமே அவற்றால் பூர்த்திசெய்ய முடியலாம். ஆனால் லட்சக்கணக்கான கைத்தறி நெசவாளர்கள் வேலையற்றுப் போவார்கள். ஏற்கனவே இம் மாதிரி ஏற்பட்டுப் போயிருக்கிறது. இதனால் கதருக்கு எதிர்காலம் இல்லாமல் போய்விடும் ஆகையினால் இம்மூன்று உற்பத்திகளுக்கும் இடையே ஓர் ஒருமைப்பாடு இருக்க வேண்டியது அவசியம். யந்திரங்கள் மனிதர்களை அடியோடு ஒதுக்கிவிடக் கூடாது.

நமது நாட்டில் நமது கிராமவாசிகளுக்கும் விவசாயிகளுக்கும் உபதொழில் தேடிக்கொடுப்பது என்ற மகத்தான பிரச்னை ஒன்று இருக்கிறது. மேற்படி இரண்டு சாராரும் வருஷத்தில் பாதிக் காலம் வேலையில்லாமல் இருக்கவேண்டி யிருக்கிறது. பறவை

வளர்த்தல், பண்ணை நடத்துதல், தேனீ வளர்த்தல் இவற்றை யெல்லாம் யந்திரங்களைக்கொண்டு செய்துவிட முடியாது. தொழில் துறையில் மிகவும் முற்போக் கடைந்திருக்கும் ஜப்பான், ஸ்விட்ஜர்லாந்துபோன்ற நாடுகளில்கூட சிறு தொழில்கள் இருந்தே வருகின்றன. கையால் தயாரித்த பொருள்களுக்கு யந்திரத்தால் செய்யப்பட்ட சாமான்களைவிடத் தனியாக ஓர் அழகு இருக்கத்தான் இருக்கிறது. மலிவான மின்சார விசையும் கிராமப் போக்குவரத்துக்கு நல்ல வசதியும் இருக்குமாயின் நம் நாட்டில் நல்ல குடிசைத் தொழில்கள் ஏற்படக்கூடும்.

ஏழைமை, வேலையில்லாத் திண்டாட்டம் ஆகிய சிக்கல் மிகுந்த பிரச்னைகளை யந்திரங்கள் நீர்த்துவிட வில்லை. இந்த விஷயத்தில் அமெரிக்காவும் ஐரோப்பாவிலுள்ள இன்னும் அநேகம் நாடுகளும் விலக்கில்லை. உண்மையில் இவ்வளவு பிரும் மாண்டமான தொழிற்சாலைகளில் பெரிய பெரிய யந்திரங்கள் இயங்குகின்றன. இவற்றால் சேரிகளில் கூட்டம் அதிகரிக்கின்றது. அதிகக் கூட்டத்தால் வியாதி பரவுகிறது. இப்பிரச்னையைச் சமாளிக்க வேண்டிய நிலைமையும் ஏற்படுகிறது.

மனிதனுடைய சோர்வைப் போக்கி, சுகத்தைக் கொடுக்க, யந்திர சாதனங்கள் ஏற்படுவதை நாம் வரவேற்க வேண்டியது தான். அத்தோடு மனிதரைப்பற்றிய நினைவையும் நாம் மறந்து விடாமல் யந்திரத்துக்கும் மனிதனுக்கும் ஓர் ஒருமைப்பாடு இருக்கும்படி பார்த்துக்கொள்ள வேண்டும்.

9-7-'41

# திருமண நிகழ்ச்சிகள்

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

கண்ணியமான விருந்தாளி என்ற முறையில் நேற்று ஒரு நண்பருடைய கல்யாணத்துக்கு நீ போயிருந்தாய். என்னுடனே அல்லது உன்னுடைய அம்மாவுடனே நீ அநேகம் கல்யாணங் களுக்குப் போயிருக்கிறாய். ஆனால் தனியாக ஒரு கல்யாணத் துக்குப் போவது என்பது இதுவே உனக்கு முதல் தடவை என்று நான் எண்ணுகிறேன். நீ அந்தக் கல்யாணத்தில் பரிபூர்ண மான சந்தோஷத்துடன் கலந்துகொண்டு தம்பதிகளை ஆசீர்வாதம் செய்திருப்பாய். கல்யாணங்களைத் தடபுடலாக நடத்த வேண்டும் என்பது மிக்க நியாயம்; அதற்கு எவ்வளவு நண்பர்களும் உறவினர்களும் வர வேண்டுமோ அவ்வளவு பேரும் போகவே வேண்டும்.

உறவினர்களும் நண்பர்களும் ஏன் போக வேண்டும் என்று சிலர் கேட்கிறார்கள். எளிய முறை என்றும், சிக்கன வாழ்வு என்றும் சொல்லிக்கொண்டு சிலர் சந்தோஷகரமான அம்சத்தை நசுக்கிவிடுகின்றனர். இவர்களைக் கண்டால் எனக்குப் பிடிப்ப தில்லை. ஆடம்பரமான, விகாரமான முறையில் செலவுகள் செய்ய வேண்டும் என்று நான் சொல்லவில்லை. இளமையுள்ள இரண்டு பேர்கள் இடையே, நெடு நாள் வாழ்வுக்கு உறவு உண்டுபண்ணி வைக்கும் சந்தர்ப்பம் கல்யாணம். அதுவரையில் அவ்விருவரும் அந்நியர்கள்.

தந்தை, தாய், குழந்தைகள், சகோதர சகோதரிகள் இவர்கள் கடவுளால் உறவினர்களாகச் செய்யப்பட் டிருக்கின்றனர். கல்யாணம் புது உறவு. எனவே கல்யாணத்தைக் கூடுமான

வரையில் உன்னதமாகச் செய்து, வெகு சந்தோஷமான காட்சி களை நிலவும்படி செய்வது அவசியம் அல்லவா?

நம்மவர்கள் கொள்கைப்படி, கல்யாணம் என்பது ஓர் ஒப்பந்தம் அல்ல. அது ஒரு புனிதமான சடங்கு. சில சீர்திருத்த வாதிகள் சொல்வதைப்போல் ஒரு புருஷனும் ஒரு ஸ்திரீயும் விவாக ரிஜிஸ்திராரிடம் சென்று ஓர் ஒப்பந்தம் செய்துகொள்வதில் பிரயோசனம் இல்லை. கிறிஸ்துவ மதத்திலும் சடங்குகளுக்கு ஆதரவு இருக்கிறது. இஸ்லாத்தில் இது அநுஷ்டானத்திலும் இருந்துவருகிறது. இப்போது நிலைமை கொஞ்சம் கொஞ்சமாக மாறி வருகிறது. சாதாரணமாகப் பெண்ணும் மாப்பிள்ளையும் குழந்தைகள் அல்ல.

நம்முடைய கல்யாணங்களைப்பற்றிய சில சம்பிரதாயங்களை வெகுவாக மாற்றிக்கொள்ள வேண்டும் அல்லது கைவிட்டு விடவாவது வேண்டும். மாலை மாற்றுவதற்காக மாமன்மார்கள் முன்வர மாட்டார்கள். அப்படியே அவர்கள் வருவதாகவே வைத்துக்கொண்டாலும் பெண்ணையோ மாப்பிள்ளையோ மரியாதை யாகத் தோள் தூக்குவதை வேண்டாமென்று தடுத்துவிடுவார்கள். ஆயினும் மாலை மாற்றிக்கொள்வது என்பது மட்டும் தொடர்ந்து நடக்கும் என்று நம்புகிறேன். இது நல்ல சம்பிரதாயம். எதிர் காலத்தில் புருஷன் மனைவியாக வாழ்க்கை நடத்தப்போகிறவர் களுக்குச் சங்கோசம் நீங்கிப் பரஸ்பரம் பழக்கம் ஏற்பட மாலை மாற்றிக்கொள்ளும் முறை ஒரு சந்தர்ப்பத்தை அளிக்கிறது.

அடுத்தபடியாக ஊர்வலம்; முதலில் மாப்பிள்ளை அழைத்தல்; பிறகு பெண்ணையும் மாப்பிள்ளையையும் சேர்த்து உட்காரவைத்து நடத்தும் ஊர்வலம். பெரிய நகரங்களில் உள்ளவர்களின் நடத்தை காரணமாக ஊர்வலத்தின் மதிப்புக் குறைந்துவிட்டது. கிராமங்களில் இந்தச் சம்பிரதாயம் இருந்துவருகிறது. பக்கத்தில் இருப்பவர்களுடைய நல்லுணர்ச்சியை அறிந்துகொள்ளுவதற்கும் ஆரத்தி எடுத்துத் தம்பதிகளை ஆசீர்வதிப்பதற்கும் ஊர்வலங்கள் சந்தர்ப்பத்தை அளிக்கின்றன. நல்ல நாகஸ்வரக் கச்சேரி

வைக்கும் பக்ஷத்தில் ஊர்வலங்கள் காரணமாகச் சங்கீத விருந்தையும் ஊரார் அநுபவிக்க முடிகிறது.

பல்வேறு ஜாதியாரும் மதத்தாரும் வெவ்வேறு விதமான முறையைக் கல்யாணங்களில் அநுஷ்டிக்கிறார்கள். காரணங்கள் எதுவாக இருந்தபோதிலும் பிராம்மணர்களிடையே ஒருவிதமான அநுஷ்டானம் உண்டு. அதாவது விவாகத்தில் இஷ்டம் இல்லாத ஒரு பிரம்மச்சாரியைப் பெண்ணின் பெற்றோர்கள் போய்ப் பிரார்த்தித்து, தங்களுடைய கன்னியைத் தானமாக ஏற்றுக் கொள்ளும்படி கேட்பர்.

பாணிக்கிரஹணம் அக்னிஹோத்ரம் முதலியவைகள் முக்கியமான வைதிகக் காரியங்களாகும். இவைகளெல்லாம் புரோகிதர்கள் உதவியோடு, விவாகத்துக்காக அழைக்கப்பட்ட விருந்தினர் முன்பாக நடைபெறும்.

மந்திரங்களெல்லாம் வெகு முக்கியமானவை. கிருஹஸ்தன் என்ற முறையில், தம்பதிகள் பரஸ்பரம் உன்னதமான காரியங்களைச் செய்ய வேண்டி இருக்கிறது என்பதை அறிவுறுத்துவன மந்திரங்கள். மந்திரங்களின் அர்த்தத்தைத் தெரிந்துகொண்டு உரிய காலத்தில் உனக்குப் போதிக்கலாமென்று நம்பி யிருக்கிறேன்.

கல்யாணத்துக்கு அடுத்த நான்கு நாட்களிலும் தம்பதிகள் அக்கினி பூசை செய்கிறார்கள். இது வேத கால சம்பிரதாயம். இதைப் பெண் வீட்டிலேயே செய்கிறார்களாயினும் மாப்பிள்ளை வீட்டிலேயேதான் செய்ய வேண்டும்.

நான்கு நாட்களும், ஏன் ஐந்தாவது நாள்கூட நலங்கு, ஊஞ்சல் இவை இரண்டும் நடக்கும். இவற்றைப் பார்ப்பதில் எனக்கு வெகு இஷ்டம். உனக்கும் இது பிடித்திருக்கும் என்று நம்புகிறேன். இவை மிகவும் சந்தோஷகரமான வைபவங்கள். இதன் முக்கிய நோக்கம் என்ன தெரியுமா? மணமகனும் மணமகளும் பரஸ்பரம் ஒருவரை யொருவர் நன்கு தெரிந்துகொண்டு, விளையாடவும், சங்கோஜத்தை விடவும் இவ்வைபவங்கள் உதவு

கின்றன. இந்தச் சமயங்களில் வீட்டில் நன்றாகப் பாடும் ஸ்திரீகள் பாடினால் சந்தோஷத்துக்கு அளவே கிடையாது. சமீப வருஷங்களில் நான் சில கல்யாணங்களில் ஒரு விஷயத்தைக் கவனித்திருக்கிறேன். கிட்டிய பந்துக்கள் உள்பட விருந்தாளிகளெல்லாம் சாப்பாடு, காபி முதலியவற்றிலேயே அதிகக் கவனம் செலுத்துகின்றனர். அவர்களுக்கு நலங்கு, ஊஞ்சல்போன்ற சந்தோஷமான வைபவங்களில் கவனம் இருப்பதில்லை. சில சமயங்களில் அவர்கள் இந்த வைபவங்களைத் துரிதப்படுத்திச் சீக்கிரம் சாப்பிடலாமென்றும் சொல்லுவர். இவர்களெல்லாம் சொல்வது அடியோடு தவறு. ஒரு யுவனும் ஒரு யுவதியும் ஒரு முறைதான் கல்யாணம் செய்துகொள்கின்றனர். அவர்கள் நிறையச் சந்தோஷப்பட அநுமதிக்க வேண்டும். நாமும் அவர்களுடன் சந்தோஷமாக இருப்பதன் மூலம் அவர்களது சந்தோஷத்தைப் பெருக்க வேண்டும்.

நான்கு நாள் கல்யாணம் கஷ்டமான காரியம். ஆனால் அது விசேஷமானதுதான். சந்தோஷமான திருமணம் மனித வர்க்கத்துக்கு உகந்த ஓர் அம்சம்.

10-7-'41.

# பெண்களும் உயர்தரக் கல்வியும்

**என் அன்புள்ள**
**லக்ஷ்மிக்கு,**

நேற்று நீ என்னிடம் தெரிவித்தபடி பெண்களும் உயர்தரக் கல்வியும் என்பதுபற்றி இங்கே எழுதுகிறேன். இவ்விஷயத்தில் உனக்குத் திட்டமான அபிப்பிராயங்கள் உண்டு என்பதை நான் அறிவேன். கொள்கைகள் சம்பந்தப்பட்டமட்டில் நீ சொல்வது உண்மையே. புத்தி, வளர்ச்சி பெற்று ஞானத்தைச் சம்பாதித்துக் கொள்ளும் விஷயத்தில் ஆண்களாயினும் சரி, பெண்களானாலும் சரி அதில் வேற்றுமை இல்லை. சாதாரணமான பெண்ணுக்கோ ஆடவர்களைப்போல் அன்றி வேறு விதமான கடமை இருக்கிறது. பெண் தாயாவாள். வீட்டுக்கு அவள் லட்சுமிபோல. இந்த ஸ்தானத்தை ஆடவர் வகிக்க முடியாது. நமது நாட்டில் பெண் களுக்குள்ள தாய்மை அந்தஸ்தை மேல்நோக்காகப் பார்க்கும் போது குறைவாகக் காணப்படினும் அது அங்ஙனம் இருக்க வேண்டியதே இல்லை. இத் தவற்றுக்கு ஆடவர் விடை தந்தாக வேண்டும். பெண்களுக்குச் சம அந்தஸ்துக் கொடுத்து நடத்தி, ஸ்திரீகள் தங்கள் ஸ்தானத்தைக் கண்டு பெருமைப்பட்டுச் சுய மரியாதையுடன் இருக்கும்படி செய்யவேண்டிய வேலை ஆடவ ருடையது.

எனவே, 'பெண்களின் உயர்தரக் கல்வி' என்னும்போது மேலே சொன்ன விஷயங்களை மனத்தில் கொண்டு கவனிக்க வேண்டும். நமது பெண்கள் எவ்வளவு மேல் படிப்பு வேண்டு மாயினும் படிக்கட்டும். நான் வேண்டாம் என்று சொல்லவில்லை. ஆனால் ஒன்று: பெண்களும் அவர்கள் விஷயத்தில் பொறுப்பு ஏற்றுக்கொண் டிருப்பவர்களும், பெண்களெல்லோரும் சம்பா

திக்க வேண்டியவர்கள் அல்ல என்பதையும், குழந்தைகளை நன்கு வளர்க்கவேண்டிய பொறுப்பு அவர்களுக்கு இருக்கிறது என்பதையும் உணர வேண்டும். ஸ்திரீ தன் கணவனுக்குக் குடும்பத்தில் உதவியாக இருக்க வேண்டுமேயன்றி அவனது சிரமத்தை அதிகப்படுத்தக் கூடாது. இதையும் அறிவது அவசியம்.

பெண்களுக்கு உயர்தரக் கல்வி வேண்டுமென்றால் காலேஜ் படிப்பு வேண்டும் என்பது அவசியமா? கல்வி என்பது ஆயுள் முழுவதும் தேட வேண்டிய ஒன்று. கல்விக்குப் புத்தகங்கள் மட்டுமே மார்க்கம் என்பது இல்லை. தொழில் துறையில் உபாத்தியாயராக இருப்பவர்கள்தாம் உபாத்தியாயர் என்பதும் இல்லை. பரீட்சைகளும் பட்டங்களும் மட்டும் கல்வியின் சின்னங்கள் அல்ல. பிரபஞ்சம், இயற்கை, வாழ்க்கை இவைகள் எல்லாம் பெரிய ஆசிரியர்கள். நாம் வாழ்கிறோம்; வாழ்வின் மூலம் கற்கிறோம். 'இதையே ஆடவர்கள் விஷயத்திலும் ஏன் அநுஷ்டிக்கக் கூடாது' என்று நீ கேட்கலாம். அவர்கள் சம்பாதிக்க வேண்டியிருக்கிறது. தொழிற் பயிற்சியை அவர்கள் அடைய வேண்டும்.

கல்வி இல்லாமலேயே இரண்டு பெரிய ஸ்திரீகள் என் வாழ்க்கையை எப்படி உருவாக்கினார்கள் என்பதைச் சொல்கிறேன்; கேள். இரண்டு உதாரணங்கள்: என் அம்மாவும், பாட்டியும். இருவருக்கும் எழுதவோ படிக்கவோ கணக்குப் போடவோ தெரியாது. ஆனால், உன் பாட்டி இதிஹாசம், புராணம், இவற்றிலிருந்து ஒப்பற்ற கதைகளை வெகு சாதுரியமாக எனக்குச் சொல்லுவாள். அவளுக்கு வைத்தியம் வெகு நன்றாகத் தெரியும். குழந்தை வியாதிகள் எல்லாவற்றிற்கும் அவளே பரிகாரம் செய்துகொடுத்துக் குணமாக்கிவிடுவாள். அவள் ஒரு பெரிய குடும்பத்துக்குத் தாயாக இருந்து, எங்களையெல்லாம் பக்ஷமாகவும் புத்திசாலித்தனமாகவும் கவனித்துவந்தாள். நாங்கள் அவளையே, 'அம்மா' என்று அழைப்போம்.

அடுத்தபடியாக என் அம்மா; அதாவது உன் பாட்டி. அவளுக்கு நான் என்ன செய்யக்கூடாது? 32-வது வயதில் அப்பா

தவறிப்போய்விட்டார். பெரிய குடும்பம்; ஜீவேஜு சொற்பம்; உதவிக்கு யாரும் இல்லை. கிட்டிய பந்துக்கள் விரோதம். இந்த நிலையில் அவள் எங்களையெல்லாம் முன்னுக்குக் கொண்டுவந்தாள்; இதற்காகத் தன்னையே அர்ப்பணம் செய்துகொண்டாள். குடும்ப விவகாரங்களைத் திறமையாகவும் தைரியமாகவும் கவனித்து நடத்தினாள்.

படிப்பில்லாத ஆடவர்களிடையேகூட இதுபோன்ற உதாரணங்களைச் சொல்லலாம். ஆனால் உயர்தரப் படிப்புப் படிக்கும் சிறுவர்களுக்கு எதிராக இந்த வாதத்தை உபயோகிக்கக் கூடாது; இதைப் பெண்கள் விஷயத்திலும் சொல்லக்கூடாது என்று நீ சொல்வாய்; ஒப்புக்கொள்கிறேன். காலேஜ் படிப்பு இல்லை என்பதனால் பெரிய சந்தர்ப்பங்கள் தவறிப் போய்விடாது என்று மட்டும் தெரிவித்துக்கொள்கிறேன்.

ஹிந்தி, தமிழ், ஸம்ஸ்கிருதம், ஆங்கிலம் ஆகிய பல பாஷை இலக்கியங்களிலே நமது பெண்கள் எவ்வளவு மேலான படிப்பைப் பெறலாமோ அவ்வளவையும் பெற வேண்டும் என்பது என் விருப்பம். இவைகளில் எல்லாம் அல்லது ஒரு சிலவற்றிலாவது நீ திறமை அடைய வேண்டும் என்பது என் ஆசை. உலக விவகாரங்களை அறிய உலக சரித்திரம், பூகோளம் இவற்றை நீ தெரிந்துகொள்ள வேண்டும். விஞ்ஞான விஷயத்தையும் அறிய வேண்டும். குடும்ப சுகாதாரம், பொது சுகாதாரம் இவற்றைத் தெரிந்துகொள்ள வேண்டும். நமது தேச சரித்திரம், பூகோளம், அரசியல் முதலியவற்றை நன்கு தெரிந்துகொள்வது அவசியம். சங்கீதம், சித்திரம் இவற்றில் ஏதாவது ஒன்றையேனும் தெரிந்துகொண்டிருக்க வேண்டும். புத்தகத்தின்மூலம் மேற்கொண்டு விஷயங்களைக் கிரகித்துக்கொள்ளும் வகையில் நீ கல்வி அறிவைப் பெற வேண்டும். தற்காலப் பிரச்னைகளை நெருங்கியவர்களுடன் விவாதிக்கும் சக்தி வேண்டும்.

இவையும் வேண்டும். இன்னும் அதிகமாகவும் வேண்டும். இருப்பினும், பொதுவாகக் காலேஜ்களில் ஸ்திரீகள் சேர்

வதை நான் ஆதரிக்கவில்லை. ஒரு காலத்தில் அவர்கள் மெட்ரிகுலேஷன் வகுப்புவரையில் படிக்க வேண்டுமென்று நினைத்தேன். அந்த அபிப்பிராயத்தை மாற்றிக்கொண்டு, பெண்கள் இன்டர்மீடியேட் வரையில் படிக்கலாம் என்று எண்ணுகிறேன். அந்த மனமாற்றத்துக்கு நீயேதான் காரணம். கணவன் சம்மதப்பட்டால் பி. ஏ., பி. ஏ. ஆனர்ஸ் வரையில்கூடப் படிக்கலாம். இது என் அபிப்பிராயம்; நீ ஒப்புக்கொள்கிருயா?

பிறகு விவாதிப்போம்.

11-7-'41.

# குடும்பமும் ஹாஸ்டலும்

**என் அன்புள்ள**
**லக்ஷ்மிக்கு,**

பதினெட்டாந் தேதியன்று சென்னை அகில இந்திய ரேடியோ நிலையத்தில், 'மாணவர்கள் ஹாஸ்டல் வாழ்க்கையும் வீட்டு வாழ்க்கையும்' என்ற விஷயமாக நடக்கப்போகும் விவாதத்தில் நீ கலந்துகொள்ளப்போவதாக அறிகிறேன். நான் அதைக் கேட்க விரும்புகிறேன். நீ இவ் விஷயமாக எழுதியிருந்த கையெழுத்துப் பிரதியை என்னிடம் காட்டினாய். அதற்காக நான் உன்னைப் பாராட்டுகிறேன்.

இதர விவாதங்களில் உள்ளதைப்போலவே எந்த விஷயத்திலும் உண்மை என்பது ஒரே பக்கத்தில்தான் இருக்கும் என்பதில்லை. விவாதம் என்று வந்துவிட்டால் நீ ஏதாவது ஒரு பக்கத்தில்தான் இருக்க முடியும். ஆனால் நாம் நமது நிலைமையை உணர்ந்துகொண்டு எதிர்த் தரப்பிலும் ஏதாவது விஷயங்கள் இருக்கக் கூடும் என்பதை உணர வேண்டும்.

இந்த விவாதம் சம்பந்தப்பட்ட வரையில் முக்கியமான அம்சம் இதுதான். நல்ல எதிர்கால முன்னேற்றம் வேண்டுமென்ற நோக்கத்துடன் கவனித்தால், சிறுவருக்கோ பெண்ணுக்கோ எது சிறந்தது? என்பதுதான் அந்த முக்கியமான அம்சம்.

நமது பையன்களும் பெண்களும் நல்ல பிரஜைகளாக வேண்டும் என்பதுதான் நமது விருப்பம். இந்த விஷயத்தில் குடும்பமும் பள்ளிக்கூடமும் செய்யவேண்டிய கடமை மகத்தானது. வெகு தொலைவுக்கு அப்பால் உள்ள பெற்றோர்களின் குழந்தைகளைப் போர்டிங் பாடசாலைகளில் சேர்ப்பது நல்லது.

# அருமைப் புதல்விக்கு

குடும்பத்தில் நெருங்காமல் வெளி அலுவல்களையுடைய பெற்றோர்களைப்பற்றியும், குழந்தைகள் விஷயத்தில் போதியபடி கவனம் செலுத்த அவகாசம் இல்லாத பெற்றோர்களைப்பற்றியுமே நான் இங்கே நினைத்து எழுதுகிறேன்.

இதுபோன்ற சந்தர்ப்பங்களில் குழந்தைகள் தங்கி வசிக்கும் படியான போர்டிங் பாடசாலைகள் இருப்பது சிறந்த மாற்று. நீ உன்னுடைய கையெழுத்துப் பிரதியில் குறிப்பிட்டிருப்பதைப் போலவே தனிப்பட்ட முறையில் கவனம் செலுத்த முடியாதபடி போர்டிங் பாடசாலை மிக்க விரிவாக இருக்கக் கூடாது. மேலும், இங்குள்ள குழந்தைகளுக்குக் குறைந்தது இரண்டு மாதமாவது விடுமுறை இருக்க வேண்டும். அவர்கள் அதைத் தங்கள் பெற்றோர்களுடனோ நெருங்கிய பந்துக்களுடனோ செலவிடும்படி இருக்க வேண்டும் இதைத்தவிர இப் பாடசாலையிலுள்ள குழந்தைகள் பரஸ்பரம் பெற்றோர்களுடன் கடிதப் போக்குவரத்து வைத்துக்கொள்ளும்படி பயிற்சி பெற வேண்டும்.

பள்ளிக்கூட வாழ்க்கைக்கு அநுகூலமாகக் குடும்ப வாழ்க்கையும் அமைவது அவசியம். சாதாரணமாகப் பெற்றோர்கள் -முக்கியமாகத் தந்தையாக இருப்பவர்கள்- தங்கள் குழந்தைகள் விஷயத்தில், செலுத்த வேண்டிய அளவுக்குக் கவனம் செலுத்துவதில்லை. தாய்மார்களும் அவர்களுடைய முன்னேற்ற விஷயத்தைக் கவனிப்பதில்லை. பல குழந்தைகளையுடைய தகப்பனார்கள் அவர்களைப்பற்றி வேண்டிய அளவு தகவலைத் தெரிந்துகொள்வது இல்லை. இவை அனைத்தும் தவறு. குழந்தைகள் குடும்பத்தில் முக்கியமானவர்கள். அவர்களைச் சரியாக உத்ஸாகப்படுத்தி வளர்த்தால், குடும்ப வாழ்வு அவர்களுக்குச் செவ்வையாக உருவடையும்.

குழந்தைகளும் குடும்பத்தைப்பற்றிச் சீரான அபிப்பிராயம் கொள்ள வேண்டும். அதாவது தங்களுடைய கல்வி பூரண பக்குவம் அடைந்து, செம்மை அடைவதற்கு வீடுகள் சிறந்த இடம் என்பதை உணர வேண்டும். பள்ளிக்கூடத்தில் மட்டுந்தான் ஒழுங்காகவும் சீலத்தோடும் நடக்க வேண்டும் என்றும், வீட்டில்

அப்படியிருக்கத் தேவையில்லை என்றும் எண்ணக்கூடாது. பெற்றோர்களுக்குத் தாங்கள் செய்ய வேண்டிய கடமை என்ன என்பதை அவர்கள் உணர்ந்து, பள்ளிக்கூடத்தில் தங்களுடைய அநுபவங்கள் என்ன என்ன உண்டோ அவற்றைத் தாய் தந்தையார்களிடம் தெரிவிக்க வேண்டும்.

சிறு குழந்தைகளுக்கு, 'போர்டிங் பாடசாலை'யால் தெளிவான ஓர் அநுகூலம் உண்டு. அதை ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். நமது குழந்தைகள் சீக்கிரமாகவும் போதியபடியும் கற்றுக்கொண்டு தாங்களாகவே தங்கள் காரியங்களைக் கவனித்துக்கொள்வதில்லை. அவர்களது உடைகளை யாராவது துவைத்துத் தர வேண்டியிருக்கிறது; குளிப்பாட்டிவிட வேண்டியிருக்கிறது; சில சமயங்களில் உணவு ஊட்டும்படியும் ஆகிறது. போர்டிங் பாடசாலையில் அப்படி இல்லை. தானாகவே தன் காரியங்களைக் கவனித்துக்கொள்ள அவர்கள் கற்க முடியும். இதனால் தன்னம்பிக்கை ஏற்படுகிறது.

ஆனால் அளவுக்கு மிஞ்சினால் அமுதமும் விஷம். சிறு குழந்தைகளை வீட்டு வாசனையின்றிப் பள்ளிக்கூடங்களிலேயே விட்டுவைப்பதும் கெடுதல்தான். வீட்டு வாழ்க்கையும் நல்ல பள்ளிக்கூட வாழ்க்கையும் கலந்திருத்தல்தான் நல்லது.

சரி சமதையானவர்களுடனும் பெரியவர்களுடனும் பழக நேருவதால், சிறுவர் சிறுமியரிடையே காணப்படும் துர்க்குணங்கள் மறைந்து, நல்ல அறிவு ஏற்படுகிறது. நற்குணங்கள் படிவதற்கும் இடம் உண்டாகிறது. இதெல்லாம் நல்ல விஷயங்கள்.

வயது வந்த மாணவ மாணவிகள் சம்பந்தப்பட்ட வரையில் சில வருஷங்கள், 'ஹாஸ்டல்' வாழ்க்கையில் இருப்பது சிறந்தது. இதை அநுபவத்தைக்கொண்டு சொல்லுகிறேன். பதினாறு அல்லது பதினேழு வயதுள்ள மாணவ மாணவிகள் ஹாஸ்டல் வாழ்க்கையில் இருக்கலாம். இதற்கிடையே குடும்பத்தின் மூலம் போதிய பயிற்சி கிட்டியிருக்கும். காலேஜ்களில் நீண்ட விடுமுறைகள் உண்டு. அப்போதெல்லாம் மாணவர்கள் தங்கள் ஊர்

போய்ச் சேரலாம். ஹாஸ்டல் வாழ்க்கையில் நல்ல குணங்களைப் பெருக்கிக்கொள்ளலாம். நட்பு, தன்னம்பிக்கை, தன் விஷயத்தைத் தானே நிர்வகிப்பது ஆகியவற்றை அபிவிருத்தி செய்து கொள்ளவும் கூடும்.

விவாதத்திற்கான இவ்விஷயம்பற்றித் திட்டமாக எந்தப் பதிலையும் சொல்ல முடியாது. ஆனால், உன்போன்ற வயதுள்ளவர்களுக்கு நல்ல குடும்ப வாழ்க்கைக்கும் பள்ளிக்கூட வாழ்க்கைக்கும் ஓர் ஒருமைப்பாடு இருக்கும்படி செய்வது விசேஷம்.

கடவுள் உன்னைக் காப்பாராக!

12-7-'41.

# மூட நம்பிக்கை

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

பழக்கம் காரணமாகச் சில வார்த்தைகள் திட்டுவதைப் போன்ற அர்த்தத்தைக் கொடுக்கின்றன. 'மூட நம்பிக்கை' என்பதும் அவற்றில் ஒன்றாகும். 'மூடநம்பிக்கை உள்ளவர்கள்' என்று நம்மை யாரேனும் சொன்னால் வெட்கமாக இருக்கிறது.

சில விஷயங்களில் காரணம் இல்லாமல் நம்பிக்கை வைப்பதை மூட நம்பிக்கை எனலாம். இதற்குக் காரணம் என்ன என்று கேட்டால் நமக்குத் தெரியவில்லை. சிலரைப்பற்றியோ அல்லது சில விஷயங்களைப்பற்றியோ நமக்குத் திட்டமான உணர்ச்சி ஏற்படுகிறது. சில சம்பவங்களைப்பற்றியும் சில பிராணிகள் குறித்தும் அதேபோன்ற அபிப்பிராயம் கொள்கிறோம். ஒரு வாரத்தில் சில தினங்கள்பற்றியோ நேரம்பற்றியோ ஒருவிதமாக அபிப்பிராயப்படுகிறோம். இவற்றில் சிலவற்றை நாம் ஏற்றுக் கொள்கிறோம். மற்றவற்றை விரும்புவதில்லை.

காரண ரீதியாகப் பார்க்கையில் இவையெல்லாம் தவறென்றும் முட்டாள்தனமானதென்றும் நாம் சொல்லலாம். ஆனால் இதனால் எதுவும் விளங்குவதில்லை. ஏனெனில் ஜனங்கள் அம்மாதிரியான நம்பிக்கை உடையவர்களாக இருக்கின்றனர். அப்படி இல்லாமல் இருப்பவர்கள் குறைவு. ஹிந்துக்களாகிய நாம் சிலவற்றில் நம்பிக்கை அதிகம் கொண்டிருக்கிறோம். முஸ்லிம்களும் கிறிஸ்துவர்களுங்கூட இப்படித்தான் நடக்கின்றனர் என்று நான் நம்புகிறேன். பார்க்கப்போனால் எல்லாரும் இதேபோல நம்பிக்கைகள் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். '13-வது நம்பர் என்றால் ஐரோப்பியருக்குத் திகில், ஏணிக்குக்

## அருமைப் புதல்விக்கு

கிழக்குப்பக்கமாக ஐரோப்பியர் நடந்து செல்வதில்லை. வெள்ளிக் கிழமைகளைக் கண்டால் அவர்களுக்குப் பிடிப்பதில்லை. இன்னும் எவ்வளவோ உதாரணங்களைச் சொல்லிக்கொண்டே போகலாம்.

மற்றவர்களுக்குக் கொடுமை இழைக்கும்படியாகவுள்ள பழக்கங்களையும் நம்பிக்கைகளையும் நாம் விட்டுவிடுவது நலம் அதாவது மிருக பலி, சித்திரவதை, தானுகவே அலகு குத்திக் கொள்வது போன்ற காரியங்கள் இவற்றையெல்லாம் விட்டு விடுவது விவேகம் நம்பிக்கை என்ற காரணத்துக்காகப் பிறருக்கோ அல்லது நமக்கோ கஷ்டம் விளைவிப்பது சரியல்ல. மிகவும் நல்ல காரியத்துக்காகத் தவிர்க்க முடியாது போனலன்றி ஹிம்ஸை செய்துகொள்வது கடவுளுக்குப் பிரீதியல்ல. இதை நான் ஏற்கனவே உனக்கு எழுதி யிருக்கிறேன்.

மூட நம்பிக்கை, மனிதனுக்குப் பிறவிக்குணமாக அமைந் திருக்கிறது. நமக்குத் தெரிந்த விஷயங்கள் குறைவு; தெரியாத விஷயங்களோ பல. நிரூபிக்க முடியாத சந்தர்ப்பங்களில் நாம் நம்பிக்கைதான் கொள்ளவேண்டியிருக்கிறது. ஆகவே மனிதர் கள், தங்கள் பிள்ளைப் பிராயத்திலிருந்து சொல்லப்பட்டுவந்த விஷயங்களை நம்பிக்கொண்டே வந்திருக்கின்றனர்.

விக்கிரக ஆராதனை என்பது ஒரு நம்பிக்கை ஹிந்துக்களாகிய நாமெல்லோரும் கோயில்களிலும் ஸ்வாமி தரிசனத்திலும் நம் பிக்கை கொண்டிருக்கிறோம். வீட்டில்கூட நாம் படங்கள், ஸாளிக்கிராமங்கள் இவற்றை வைத்துப் பூசிக்கிறோம். கடவுள் இருப்பதாக வைத்துக்கொண்டாலும் உயிரற்ற உருக்களில் அவர் வசிக்கமாட்டார் என்று காரணவாதி வாதிக்கலாம். இதில் அவருக்குத்தான் திருப்தி. எனவே நாம் மூட நம்பிக்கை உள்ள வர்கள் என்று அவர் கருதுகிறார்.

நாம் இதை ஒப்புக்கொள்ளவில்லை; நாம் நமது வழக்கப்படி பூசை செய்கிறோம். இது மூட நம்பிக்கையா?

'இல்லை' என்பதே என் பதில்.

## மூட நம்பிக்கை

கடவுள் யார்? எப்படி இருப்பார்? எங்கே இருப்பார்? என்ற விவரங்களை யாரும் திட்டமாக விளிக்கவில்லை. அவர் எங்கும் நிறைந்தவர் என்று சர்வ மதங்களும் கூறுகின்றன. ஆகவே இந்த உருவங்களிலும் அவர் இருக்கத்தான் இருக்கிறார். இந்த விக்கிரகங்கள்தான் கடவுள் என்றால் யார் இல்லையென்று சொல்ல முடியும்?

• சிதம்பரத்தில் நடந்த ஒரு சம்பவம் எனக்கு மிக நன்றாக நினைவிருக்கிறது. அங்கு ஸ்ரீ நடராஜா கோயிலில் ஆயிரக்கால் மண்டபத்திலிருந்து ஸ்ரீ நடராஜ மூர்த்தியைத் தீட்சிதர்கள் எழுந்தருளச் செய்கின்றனர். இந்தத் தரிசனம் வெகு விசேஷமானது. நான் ஸ்வாமியைத் தரிசித்தேன். ஆயிரக்கணக்கான பக்தர்கள் ஏக காலத்தில் கை தூக்கித் தொழுது, 'ஹர ஹர மகா தேவா!' என்று கோஷித்தனர். அந்தச் சம்பவம் இன்றுகூட என்னை மெய்க் குருகச் செய்கிறது. அங்கே கடவுள் இல்லை என்று யார் சொல்ல முடியும்? நான் அப்படிச் சொல்லவே மாட்டேன்.

கல்மஷம் இல்லாத சில நம்பிக்கைகள் உண்டு. அவை யாருக்கும் கெடுதியல்ல ஆனால் நன்மை பயக்கக் கூடியவை தான். தினசரி ராகு காலத்தில் எந்த நல்ல காரியத்தையும் ஆரம்பிக்கக் கூடாது. இது எவ்வளவு உண்மையானது என்பதை என் சொந்த அநுபவத்தைக் கொண்டு சொல்ல முடியும். இந்தக் காலத்தை விட்டால் வேறு கிடையாது என்னும்படி நமக்கு அவ்வளவு அவசர காரியம் எதுவும் இல்லை.

சில தினங்களில் நாம் சில திசைகளை நோக்கிப் பிரயாணம் செய்யக் கூடாது. எந்த விஷயமாக இருந்தாலும் மூன்று பிராம் மணர்கள் சேர்ந்தாற்போல் போகக்கூடாது. சில வருஷங்களுக்கு முன் நான் உள்பட மொத்தம் மூன்று பிராம்மணர்கள் ஓர் ஏலத்துக்குப் போனோம். என்ன நடந்துவிடும் என்று நினைத்தேன். ஆனால் ஏலம் ஒத்திப் போடப்பட்டு விட்டது! ஏதாவது ஒரு காரியத்தை ஆரம்பிக்கும்போது யாரேனும் தும்மினால் அக் காரியத்தை நிறுத்திவிட்டுப் பிறகே ஆரம்பிக்க வேண்டும். வடக்குத் திக்கில் தலையை வைத்துப் படுத்துக்கொள்ளக் கூடாது.

# அருமைப் புதல்விக்கு

காலை வெயிலில் திரியக் கூடாது. காலையில் கருட தரிசனம் செய்வது நல்லது. இந்த நம்பிக்கைகளெல்லாம் யாருக்கும் கெடுதி தரத் தக்கவை அல்ல. இவற்றில் சில சாஸ்திரீய முறையில் அவசியமானவையும் ஆகும்.

இதற்கு அடுத்தபடியாகச் சகுனங்கள். இவற்றை அநுஷ்டிக்கலாம். இது சிலருக்கு ஆட்சேபகரமாகவும் பொருமையாகவும் இருக்கலாம். இருப்பினும் இதைச் சரிப்படுத்திக்கொள்ள வேண்டும்.

மொத்தத்தில் பல்லாண்டுகளாக மனிதர்கள் உலகமெங்கும் ஏதோ சில நம்பிக்கைகளைக் கடைப்பிடித்தே நடந்திருக்கின்றனர். இதை அவர்கள் தொடர்ந்து பின்பற்றுவார்களென்றே தோன்றுகிறது. ஆகவே நாம் இதற்காக ஆத்திரமடையாமல் அவற்றின் மூலமும் அநுகூலம் அடைவோமாக!

13-7-'41.

# சமூகச் சீர்திருத்தம்

**என் அன்புள்ள**
**லக்ஷ்மிக்கு,**

'சமூகச் சீர்திருத்தம்' என்று சொல்லுவது குறித்து நீ அடிக்கடி கேள்விப்பட்டிருப்பாய். இவ் விஷயமாக நான் உனக்கு இரண்டு, மூன்று கடிதங்கள் எழுத விரும்புகிறேன். இது முதல் கடிதம்.

ஜனங்களின் பொருளாதார நிலைமையை உயர்த்த வேண்டும் என்ற பிரச்னை சம்பந்தமாக இங்கே எழுதப் போகிறேன்.

இன்று அல்லது யுத்தத்துக்கு முன்னர், மேல் நாடுகளில் சமூகச் சீர்திருத்தம் என்று சொன்னால் பொருளாதார நிலைமையை அபிவிருத்தி செய்வது என்பதுதான் அதன் கருத்து.

சமூகம் சீர்ப்பட வேண்டுமானால் ஏழைமை, பட்டினி, அறியாமை, தீராத நோய்கள், அதிக ஜனத்தொகை இவையெல்லாம் இருக்கக் கூடாது என்பதை அனைவரும் ஒப்புக்கொள்வார்கள். பணத்தை இன்னதுதான் செய்வது என்று வகை தெரியாமல் விழிப்பவர்கள்மட்டுமே பணத்தில் மூழ்கியிருக்க வேண்டும் என்பதும் மற்றவர்களெல்லாம் சகிக்க முடியாத கஷ்டங்களில் உழன்று வாட வேண்டும் என்பதும் கடவுளின் நியதியல்ல. இந்தியா, சீனாபோன்ற அபிவிருத்தி இல்லாத இடங்களில் மட்டுமே இந்த மாதிரியான நிலை என்பது இல்லை. அமெரிக்கா, பிரிட்டன் போன்ற, தொழில் வளத்தில் சிறந்த நாடுகளில்கூட இம்மாதிரியான நிலை இருக்கத்தான் இருக்கிறது.

பகவான் இந்தப் பூமியில் அநேக விஷயங்களைச் சிருஷ்டித்திருக்கிறார். இயற்கையே செழித்திருக்கிறது. மனிதர்கள்

தன்னலமின்றியும் கொடுமையாக இல்லாமலும் இருக்கும் பட்சத்தில் உலகத்தில் எல்லோருக்கும் உணவு உண்டு; உடையும் உண்டு. இவை அளவுக்கு அதிகமாகக்கூடக் கிடைக்கும்.

ஏழைமையையும், அதனால் ஏற்படக்கூடிய கேடுகளையும் நிவர்த்திக்க வேண்டும் என்ற லட்சிய சித்திக்குக் குறுகிய மார்க்கம் எதுவும் இல்லை. இந்தத் துன்பங்களுக்கெல்லாம் சோஷலிஸமே சிறந்த பரிகாரம் என்று நம் நாட்டில் சில நண்பர்கள் கூறுகிறார்கள். சமீப காலமாகப் பொதுவுடைமையைப்பற்றிப் பேசுவது சம்பிரதாயம் ஆகிவிட்டது. யுத்தம் ஏற்பட்ட பின்னரும், ரஷ்யா இதில் ஏற்றுக்கொண்டுள்ள பாகத்தை முன்னிட்டும் பொதுவுடைமைப் பேச்சு, சற்று மட்டுப்பட்டிருக்கிறது.

இந்திய நிலைமைகளை உணர்ந்த இந்தியன் என்ற முறையில் நான் சொல்லுகிறேன். சோஷலிஸமோ, அதைவிடத் தீவிரமாகவுள்ள கம்யூனிஸமோ நமக்குப் பயன்படாது. தனிப்பட்டவர் என்பதை அடியோடு குலைத்து எல்லோருக்கும் ஜீவனத்துக்கு வகை காண்பதாக உத்தரவாதம் அளிக்கும் சர்க்காரை உன்னதமாக்கி வைத்து, தனிப்பட்டவரை ஓர் அணுவாகச் செய்வதே மேற்படி இரண்டு முறைகளின் அடிப்படைச் சித்தாந்தமும். எந்த இடத்தில் இக் கொள்கைகள் உருவாகி அமுல் நடக்கிறதோ அங்கேயே அவை பரிபூர்ணமாக வெற்றி பெறவில்லை. அப்படியே அவை வெற்றி பெற்றிருக்கின்றன என்றாலும் நமக்கு அவை உபயோகமில்லை. நல்ல உணவும் உடையும் இருக்க வீடும் கொடுத்துத் தேசத்தாரைக் காப்பாற்ற வேண்டும் என்பதுமட்டும் நமது லட்சியம் அல்ல. தனிப்பட்டவரும் முக்கியமானவர் என்பதை அறிந்து நடக்க நாம் விரும்புகிறோம். இதற்கு மாறாகவுள்ள தீவிர முறை எதுவும் நமக்குப் பொருத்தமாகப் படவில்லை.

சோஷலிஸத்தின் மூன்று முக்கிய அம்சங்கள் வருமாறு: பொதுஜனங்களுக்கு முக்கியமான பொருள்கள், தனிப்பட்டவர் சொத்தாக இருப்பதை ஒழித்தல்; தொழிலாளர் சமாஜத்தினரே

## சமூகச் சீர்திருத்தம்

அரசுரிமை வகித்தல்: நமது சமூகத்தில் சதா இருந்துவருவதாக மார்க்ஸைப் பின்பற்றுவோர் கூறும் வகுப்பு யுத்தம்.

தனிப்பட்டவருக்குச் சொத்து உரிமை இருக்க வேண்டும் என்பது இந்தியர்களாகிய நமக்கு விருப்பம். நம்மில் மிக ஏழை யாக இருப்பவர்கள்கூடச் சிறிய வீடுகளும் சொற்ப நிலமும் வேண்டுமென்று எண்ணுகின்றனர். நமது குழந்தைகள் அம் மாதிரி இடங்களிலே பிறந்து வளர வேண்டுமென்று ஆசைப்படு கிறோம். இது இயற்கை. ஆகவே தனிப்பட்டவருக்குச் சொத்து இருக்கக் கூடாது என்ற சித்தாந்தத்தை இந்தியா ஒப்புக்கொள் ளாது. பணக்காரர் மற்றவர்களைச் சுறண்டாமல் தடுத்து, அவர் கள் லாபம் அடைவதைக் கட்டுப்படுத்தவே இம்முயற்சி என்னும் பட்சத்தில் எல்லோரும் அதை ஒப்புக்கொள்ளுவார்கள்.

ஐரோப்பாவில் அநேகம் நாடுகள் தொழில் மயம் ஆகிவிட் டன. அங்கெல்லாம் பூசல். இது இந்தியாவுக்குப் பொருந்திய தல்ல. நமது தொழிலாளர்களின் சத விகிதம் நூற்றுக்கு ஒன்று கூட இல்லை. நூற்றுக்கு எண்பது பேர் இங்கே விவசாயிகள். நமது நாட்டில் எந்தவிதமான சர்வாதிகார முறையும் பயன் படாது. இவற்றையெல்லாம் நாம் பார்த்தாகிவிட்டது. அவை வேண்டாம்.

சோஷலிஸ்டுகளும் கம்யூனிஸ்டுகளும், 'பணக்காரர்களுக்கும் பணம் இல்லாதவர்களுக்கும் போராட்டம் ஏற்படுவது நிச்சயம்' என்று சொல்கிறார்கள். நாம் அப்படி எண்ணவில்லை. ஏழைமை யும் அதனால் விளையக்கூடிய கொடுமைகளும் தீரும் முறையில் இந்தியாவிலுள்ள சமூகப் பொருளாதார நிலைமைகளைச் சரிப்படுத்த வேண்டும் என்று நாம் கருதுகிறோம். நாம் மேலே சொன்ன சச்சரவுகளை விரும்பவில்லை.

அஹிம்ஸா தர்மத்தை நாட்டின் அபிவிருத்தி விஷயத்தில் கைக்கொண்டிருப்பது மாத்திரம் இதற்குக் காரணம் அன்று. பார்க்கப் போனால் இந்த விஷயம் ஒரு சிறிய விவகாரமே. நமது நாட்டில் பொருளாதாரத் துறையில் ஏற்படும் சச்சரவானது

வகுப்புக் கலவரமாக மாறி நாட்டின் முன்னேற்றமே சாத்தியமில்லாமல் தடைப்பட்டுப் போனாலும் போகும். அநேகம் மாகாணங்களில் நிலைமை அப்படி இருக்கிறது.

ஆகவே நமது நாட்டில் உடனே பொருளாதாரச் சீர்திருத்தம் வேண்டும்; ஆனால் அது சோஷலிஸத்தின் மூலமோ கம்யூனிஸத்தின் மூலமோ வேண்டாம்; இதைப் பெறுவது எப்படி? எந்த லட்சியங்களை நாம் அடைய வேண்டும்? சச்சரவில்லாது அவற்றை அடையலாமா? இவற்றையெல்லாம் அடுத்த கடிதத்தில் உனக்கு எழுதுகிறேன்.

14-7-'41.

ஒருவரிடம் ஏராளமான ஆஸ்தி இருந்தால் எஞ்சியுள்ளதை மற்றவர்களுடன் பகிர்ந்துகொள்ள வேண்டும் என்பதை நம்மவர்கள் மத பூர்வமாகக் கடமையென்று நினைக்கிறார்கள். ஆகவே பணக்காரர்களுக்கும் பணம் இல்லாதவர்களுக்கும் சச்சரவுகளே இல்லாமல் பொருளாதாரத் துறையில் புது அமைப்பைச் செய்யலாம் என்பது என் நம்பிக்கை. நமக்குள் தற்கால மேல்நாட்டு நாகரிகம் புகுந்ததால், சமீப காலமாக மேலே சொன்ன அபிப்பிராயத்துக்கு உள்ள மதிப்பு வெகுவாகக் குறைந்துவிட்டது என்பதை நான் ஏற்றுக்கொள்கிறேன். ஆனால் இதன் அடிப்படைக் கருத்து இன்றும் நிலையாக இருக்கிறது. நல்ல சுமுகமான சந்தர்ப்பங்களில் அக்கருத்து உருவகம் அடையும். மகாத்மா காந்தி இந்த அம்சத்தில் விசேஷ கவனம் செலுத்துகிறார்.

ஏற்கனவே நான் உனக்கு எழுதியதுபோலவே நமது பிரச்னை, விவசாயத்தைப் பொறுத்ததாகும். தொழில் நிலையங்களில் உள்ளதைவிட மனித உழைப்பில் உள்ள அம்சம் முக்கியமானதாக இருக்கிறது. நிலம் இல்லாத தொழிலாளரின் பிரச்னை வெகு கஷ்டமானது உத்தியோகத்தில் பாதுகாப்போ, குறைந்தபட்ச சம்பளமோ அல்லது இருக்க வீடோ அவர்களுக்கு இல்லை.

அவசியமானால் சட்டபூர்வமாகவாவது தீவிரமான ஒரு சீர்திருத்தத்தைச் செய்ய வேண்டும் என்று நான் கருதுகிறேன். அதாவது விவசாயத்தில் ஈடுபடும் எல்லாத் தொழிலாளர்களுக்கும் நிலத்தில் அநுபோக பாத்தியதை இருக்க வேண்டும். பணமாக இல்லாமல் பண்டமாக அவர்களுக்கும் அவர்களது குடும்பத்தாருக்கும் ஊதியம் அளிக்க வேண்டும். சௌகரியமான வீட்டு வசதியும் தர வேண்டும். இதுபோன்ற முறை சில கிராமங்களில் அநுஷ்டானத்தில் இருந்துவருகிறது. இதை எங்கும் பொருந்தும்படி செய்ய வேண்டும்.

நிலத்துக்குச் சொந்தக்காரராக இருக்கும் மிராசுதார் அவ்விடத்தில் இல்லாமல் போனால் அவருக்குச் சர்க்கார் கடுமையான தீர்வை விதிக்க வேண்டும். பண்ணை வைத்துக்கொண்டு நிலத்தைச் சாகுபடி செய்யும் நடுத்தர நிலையிலுள்ள குடியானவனுக்கு நாம் ஆக்கம் அளிக்க வேண்டும். விவசாயத் தொழிலில் நடுவிலுள்ள வியாபாரிகள்—தரகர்கள்—அநேகர் இருக்கின்றனர். அவர்களுக்குத் தேவை எதுவும் இல்லை. அவர்களையெல்லாம் விலக்க வேண்டும். நிலங்களுக்கெல்லாம் சர்க்கார் தர வாரியாகத் தீர்வை முறையை வைத்துக்கொள்ள வேண்டும். பெரிய மிராசுதாருக்கு விதிப்பதுபோல் சிறிய நிலச்சுவான்தாருக்கும் தீர்வை விதிக்கக் கூடாது. விவசாயத்தின்மூலம் கிடைக்கும் வருமானத்துக்கும் வருமான வரி விதிக்க வேண்டும்.

இச் சீர்திருத்தங்கள் ஒருபுறம் இருப்பினும் பெருவாரியாக நிலமில்லாத தொழிலாளர்கள் எஞ்சி நிற்பர். இவர்களுக்கும் ஏதாவது செய்தாக வேண்டும். தரிசாகக் கிடக்கும் நிலங்களைச் சாகுபடிக்குக் கொண்டுவர வேண்டும். இது சுலபமில்லைதான். இருப்பினும் தீவிரமாகச் சாகுபடி செய்து, பலவிதமான பயிர்களையும் வியாபாரத்துக்கான வேறு வகைப் பயிர்களையும் சாகுபடி செய்ய வேண்டும். இவ் வேலைகளில் எல்லாம் நடுவில் உள்ளவர்களும் முதலாளிகளும் மற்றவர்களைச் சுரண்டாமல் பார்த்துக் கொண்டு, உண்மையான விவசாயத் தொழிலாளர்களுக்கு ஆதரவு

அளிக்க வேண்டும். இதற்கு அடுத்தபடியாக, ஏற்கனவே என்னுடைய முந்திய கடிதங்களில் உனக்குக் குறிப்பிட்டு எழுதியது போல் நமது விவசாயிகளுக்கு நாம் குடிசைத் தொழில்களை ஏற்படுத்தித் தர வேண்டும். அதிருஷ்டவசமாக இந்தத் தொழில்கள் சம்பந்தப்பட்ட வரையில் முதலாளிகள் சுரண்டுவது என்ற நிலை இல்லை. இந்த அபிவிருத்தி வேலைக்காக மூன்று விஷயங்களைச் செய்ய வேண்டும்.

1. கிராமங்களுக்கு மலிவான விகிதத்தில் மின்சார விசை கிடைக்கும்படி செய்வது, 2. கிராமங்களுக்கு நல்ல போக்குவரத்துகளை ஏற்படுத்துவது, 3. இடையே ஊடாடும் ஆசாமிகளை விலக்கிச் சாமான்களைக் கொள்ளவோ கொடுக்கவோ கூட்டுறவுச் சங்கங்களை ஸ்தாபித்தல்.

பெரிய தொழில்கள் சம்பந்தப்பட்டவரையில் அவற்றிற்கான பாதுகாப்புகள் இருக்கின்றன. அதாவது பண்டம் உபயோகிப்பவரின் தேவைக்கு அதிகமாக உற்பத்தி செய்யும் தொழில்கள் அவை. ஆகவே தொழிலாளர்களைச் செவ்வையாக நடத்திக் குறைந்த பட்ச சம்பளத்தை நிர்ணயம் செய்து, வேலை நேரம், சௌகரியமான இருப்பிட வசதி முதலியவற்றைச் செய்து தர வேண்டுமென்று வற்புறுத்தச் சர்க்காருக்கு உரிமை உண்டு. முதலாளிகளை விலக்கித் தொழில்களையெல்லாம் தேசியம் ஆக்க வேண்டுமென்று சொல்லப்படுமானால் இப்போது அதை நான் ஒப்புக்கொள்ள மாட்டேன். முன்பு நான் வேறு விதமாக எண்ணினேன். ஆனால் நான் நெருங்கிக் கூர்ந்து கவனித்தபோது, அதாவது ரயில்வேக்களைச் சர்க்கார் நிர்வகிப்பதைப் பார்த்ததிலிருந்து தொழில் நிர்வாகங்களைச் சர்க்கார் மட்டுமே தனியாக நடத்த முடியாது என்றுதான் எனக்குத் தோன்றுகிறது. நிலைமை அப்படி இருப்பதே இக்கருத்துக்குக் காரணம். சம்பளம் அல்லது லாபத்தில் ஒரு பகுதி பெறும் மானேஜர்கள், ஸ்தாபனத்தின் வெற்றியைப்பற்றிக் கவலைப்படுவதில்லை. ஆகவே அவர்கள் அலட்சியமாக இருக்கின்றனர். கொள்ளை லாபம் அடிப்பதைத் தடுத்து உத்தமமான நிலைமையில் தொழில் நடப்பதற்குக் கூட்டுப்

பங்கு ஸ்தாபன முறையே பொதுவாகச் சிறந்ததென்று நான் எண்ணுகிறேன். இதில் ஐம்பத்தொரு பங்கு சர்க்காருக்கும் நாற்பத்தொன்பது பங்கு தனிப்பட்ட பங்குதாரர்களுக்குமாக இருக்கலாம். இதனால் அநுகூலம் உண்டு.

இதுபோன்ற நிலைமையில் பணக்காரர், ஏழை என்ற சச்சரவுக்கு அவசியமே இல்லை. இவற்றையெல்லாம்விட இந்தியாவிலே நாம் ஜனநாயகம் வேண்டுமென்ற கொள்கை உடையவர்களாக இருக்கிறோம். இம்முறை சரிவர வேலைசெய்யுமானால் –செய்ய வேண்டும்–குறுக்கு வழிகளுக்கு இடம் இல்லை. சட்ட சபைகள் சாதாரணமாக நடந்து, பொறுப்பு வாய்ந்த சபைகள் இருக்குமானால் தொழிலாளர்களின் நியாயமான காரியங்களுக்கு உத்தரவாதம் அளிக்கப்படும். அம் மந்திரி சபைகள் அவற்றைக் கவனிக்க வேண்டும்.

தொழில் மயமான நாடுகளிலுள்ள போராட்டங்களை இந்தியா ஏன் அநுபவிக்க வேண்டும்? அந்நாடுகளின் உதாரணத்தைக் கண்டு நாம் பயன் பெற வேண்டும். ஆகவே சச்சரவு ஏதுமின்றி நாம் இந்தியாவில் சமூகப் பொருளாதாரச் சீர்திருத்தத்தைப் பெறலாம்; பெற வேண்டும்.

15-7-'41

சென்ற இரண்டு கடிதங்களிலும் பொருளாதாரத் துறையில் செய்ய வேண்டிய சீர்திருத்தங்கள்பற்றி எழுதினேன். நமது நாட்டில் பொதுப்படையாகக் கருதப்படும், 'சமூகச் சீர்திருத்தம்' எது என்பதுபற்றி இக்கடிதத்தில் எழுதுகிறேன்.

சமுதாயம் முழுவதும் அபிவிருத்தி அடையும் வகையில் நமது ஜனங்களின் பழக்க வழக்கங்களைச் சீர்திருத்தம் செய்ய வேண்டுமென்று நாம் நினைக்கிறோம். இந்தியாவில் இருப்பவர்கள் எல்லாரும் ஹிந்துக்கள், முஸ்லிம்கள், அல்லது கிறிஸ்துவர்கள்.

கிறிஸ்துவர்கள் சம்பந்தப்பட்ட மட்டில் சமூகச் சீர்திருத்த இயக்கங்கள் இருப்பதாக நம் காதில் அதிகமாகப் படவில்லை. அவர்களெல்லாம் தற்கால முறைப்படி முன்னேற்றமடைந்தே இருக்கின்றனர். ஆண், பெண், இரு பாலாரும் நன்கு படித்திருக்கின்றனர். விவாக ரத்து அவர்களிடையே அநுஷ்டானத்தில் இருக்கிறது. சொத்துரிமை, வாரிசு உரிமை முதலியவற்றில் அவர்கள் கொண்டுள்ள சட்டம் தற்கால ரீதிக்கு அநுசரணையாக இருக்கிறது.

முஸ்லிம்களிடையேயும் சமூகச் சீர்திருத்தம்பற்றிய பேச்சு வார்த்தைகளைக் காணோம். அம்மாதிரி சீர்திருத்தம் அவர்களுக்குத் தேவையில்லை என்பதால் அல்ல. அவர்கள் பல தாரங்களை மணம் புரியலாம். ஒருவர் நான்கு ஸ்திரீகளை மணந்துகொள்ளலாம். ஆனால் அப்படிச் செய்துகொள்பவர்கள் குறைவு. விவாகம், விவாக ரத்து, சொத்துரிமை, வாரிசு உரிமை முதலியவை பற்றிய சட்ட திட்டங்களெல்லாம் அவர்களிடையேயும் திருப்திகரமாக இருக்கின்றன.

ஆனால் அவர்களிடம் பர்தா முறை இருக்கிறது. இதை முஸ்லிம்கள் மட்டுந்தான் அநுஷ்டிக்கின்றனர் என்பதில்லை. வட இந்தியாவில் அநேகம் ஹிந்துக்கள்கூட இம்முறையைப் பின் பற்றுகின்றனர்.

முகத்தை மட்டும் மறைத்துக்கொள்வதோடு நிற்காமல் அநேகம் லக்ஷக்கணக்கான ஸ்திரீகள் காற்றோ வெளிச்சமோ இல்லாமல்வேறு அடைபட்டுக் கிடக்கின்றனர். இதுபற்றி எழுதுவதற்குத் தயங்கவேண்டி யிருக்கிறது. இதுபோன்ற பெருவாரியான கட்டுப்பாட்டுக்குக் குர்ரானில் ஆதாரம் இல்லையென்றே தெரிகிறது. பெண்கள் அடக்கமாக இருக்க வேண்டும் என்பதை அனைவரும் ஒப்புக்கொள்ளுவார்கள். தற்கால முஸ்லிம் நாடுகளிலும் முக்கியமாகத் துருக்கியில் இந்தப் 'பர்தா' முறை கைவிடப்பட்டு விட்டது.

இந்தியாவிலும் இதற்கு ஏதாவது செய்தாக வேண்டும். சட்டம் செய்வது சுலபமான பரிகாரம் அல்ல. ஹிந்துக்கள்

## சமூகச் சீர்திருத்தம்

சாரதா சட்டம், ஆலயப் பிரவேசச் சட்டம் முதலியவற்றிற்கு ஆளாக வேண்டியிருப்பினும் முஸ்லிம்கள், 'பர்தா' முறைபற்றிய மட்டில் கடுமையாக ஆட்சேபிக்கின்றனர். 'பர்தா' முறைக் கட்டுப்பாட்டை அடியோடு ஒழிக்காவிட்டாலும் அம்முறையின் வேகத்தைத் தளர்த்தவாவது ஏன் சட்டம் செய்யக் கூடாது? இதற்காக முஸ்லிம்களேதான் முன்வந்து முயல வேண்டும். முஸ்லிம் ஸ்திரீகள் பலரைக்கொண்ட அ. இ. ஸ்திரீகள் மகாநாடு இவ்விஷயமாகத் தீவிர நடவடிக்கை எடுத்துக்கொள்ள வேண்டும். ஹிந்துக்கள், 'பர்தா' முறையை அநுஷ்டிப்பதைச் சட்ட பூர்வமாகத் தடுக்கலாம்.

ஹிந்துக்களைப் பொறுத்தவரையில் சமூகச் சீர்திருத்தப் பேச்சு அநேக வருஷங்களாக இருந்து வருகிறது. இப்போது இது முக்கியப் பிரச்னை ஆகிவிட்டது. ஹிந்துக்கள் விவாகச் சட்டம், சொத்து, வாரிஸ் உரிமைகள், தீண்டாமை முதலிய பிரச்னைகள் பொதுஜனங்களின் மனத்தைக் கவர்ந்திருக்கின்றன. இவற்றையெல்லாம் சீர்திருத்தச் சட்ட பூர்வமாகவோ வேறு வழியிலோ முயற்சிகள் செய்யப்பட்டிருக்கின்றன.

ஸ்திரீகளுக்கும்—முக்கியமாகப் பெண்கள், மனைவிகள் இவர்களுக்குச்—சொத்துரிமை சம்பந்தமாக அளிக்க வேண்டிய ஸ்தானத்தைப்பற்றிய ஹிந்து சட்டத்தைச் சீர்திருத்தம் செய்வது அவசரம். சில்லறையாகப் பல சட்டங்கள் செய்யப்பட்டிருக்கின்றன. பலன் என்னவோ மகிழ்ச்சி தரத்தக்கதாக இல்லை. ஸர். பி. என். ராவ் தலைமையில் இப்பிரச்னை முழுவதையும் கவனித்து, ஆராய்ச்சி செய்ய ஒரு கமிட்டியை நியமித்தது நல்ல காரியம்.

தற்கால அபிப்பிராயங்களுக்கு ஏற்ற முறையில் கூடிய விரைவில் இது சம்பந்தமான சட்டம் ஒன்று கொண்டுவரப்படும் என்று நம்பலாம். அவசியமான சீர்திருத்தம், ஹிந்து சமூகத்தில் முக்கியமாகப் பெண்ணுக்கும் மனைவிக்கும் சொத்துரிமை இருக்கும்படி செய்வதே ஆகும்.

## அருமைப் புதல்விக்கு

இந்தப் பிரச்னைபற்றிக் குறிப்பிடுகையில் ஹிந்துக்கள் விவாகம் சம்பந்தமாகச் சீர்திருத்தம் செய்ய வேண்டிய பிரச்னைபற்றி எனக்கு நினைவு வருகிறது. நம் சமூகத்தைத் தலைகீழாக்கிப் புதிதாக அமைக்க வேண்டும் என்ற கூற்றுக்குச் செவிசாய்க்க எனக்குப் பொறுமை இல்லை. சீரான வகையில் பழைய கால சம்பிரதாயத்தை அநுஷ்டிப்பது நல்ல பலன் உள்ளதாகும். பழத்தின் ருசியிலிருந்தே மரத்தின் தன்மையை நிதானிக்க வேண்டும் ஹிந்துக்களின் விவாகங்கள் பயனற்றது என்பதற்கில்லை,

சிலரைத் தவிரப் பால்ய விவாகம் என்பதெல்லாம் பழங் கால விவகாரம் ஆகிவிட்டது. வெகு நாள் கழித்தே கல்யாணம் நடக்கிறது. ஆனால் நான், வெகுகாலம் கழித்துக் கல்யாணம் செய்வதை விரும்பவில்லை. இது சுமுகமாக இல்லை. அநேகம் கஷ்டங்கள் வந்து சேருகின்றன. நமது இளம் குழந்தைகள் தாங்களே மனைவி, புருஷர்களைத் தெரிந்தெடுத்துக்கொள்ள லாயக் குள்ளவர்களா என்பது காலப்போக்கில்தான் தெரிய வேண்டும். ஆனால் தற்காலம் இருந்துவரும் முறைதான் எனக்குப் பிடிக்கிறது. அதாவது பெற்றோர்களே வரன் தேடுவது என்னும் முறை. ஆனால் இதில்கூட நாளாவட்டத்தில் மாறுதல் ஏற்படலாம்.

முன்னேற்ற நோக்கமுள்ள ஹிந்து ஸ்திரீகள்கூட விவாகரத்தை விரும்பவில்லை என்றுதான் நான் நினைக்கிறேன். நல்ல நாகரிகப் பண்புள்ள குடும்பங்களில்கூடக் கல்யாணங்கள்பற்றி அநேக விதமான பண விவகாரங்கள் ஏற்பட்டுப் போகின்றன. ஸ்திரீகளுக்குப் பொருளாதாரத் துறையில் ஒரு ஸ்தானம் ஏற்பட்டுப் போனால் இவைபோன்ற விவகாரங்கள் ஏற்படா.

ஹிந்துக்கள் விவாகம் சம்பந்தப்பட்ட மட்டில் (பாதிவ்ருத்தியம்) கற்புநிலை முக்கியமானது. அருந்ததி, சாவித்திரி, சீதை இவர்களைப் பின்பற்றிய தர்மம் அது. அதை நாம் காப்பாற்ற வேண்டும்.

16-7-'41.

# தீண்டாமை விலக்கு

**என் அன்புள்ள**
**லக்ஷ்மிக்கு,**

**தீ**ண்டாமையை விலக்க வேண்டும் என்பது குறித்து இந்தக் கடிதத்தில் எழுதப்போகிறேன். அநேகம் விஷயங்களில் நான் பழைய காலக் கொள்கைகளிலும் நம்பிக்கைகளிலும் பற்றுள்ளவன் என்பது உனக்குத் தெரியும். இருந்துங்கூடப் பிறப்பிலேயே தீண்டத் தகாதவர் என்று கருதி ஒரு சாராரை ஒதுக்குவதற்கு நியாயம் இருப்பதாகவோ அல்லது காரணம் இருப்பதாகவோ நான் எண்ணவில்லை. நாம் ஒவ்வொருவரையும் தொடவேண்டும் என்றோ தொடக்கூடும் என்றோ சொல்லவில்லை. சிலர் வெகு அசுத்தமாக இருக்கிறார்கள். நாம் வெகு சங்கோசப்படுகிறோம்; அல்லது ஒதுங்கி இருந்துவிடுகிறோம். ஆனால் பிறப்பிலேயே ஒரு சாராரைத் தீண்டத் தகாதவர்கள் என்று பெயரிட்டு ஒதுக்கிவைப்பது என்பதற்கு எவ்வித நியாயமும் இல்லை.

சரித்திர பூர்வமாக நிறம், ஜாதி இவற்றால் உதித்த பூசல்கள் இதற்குக் காரணமாக இருக்கலாம். பூர்வ காரணம் எதுவாக இருப்பினும் இப்போது இதற்கு நியாயம் இல்லை. 'சண்டாளர்கள்' என்று சொல்லி அவர்களைத் தீண்டத் தகாதவர்கள் என்று விலக்குவது கொடுமை! அவர்கள் சண்டாளர்கள் அல்ல.

இந்தியாவில் தற்கால சட்டதிட்டங்கள் காரணமாக ரயில், டிராம், முதலிய பொது வாகனங்களிலும், பொதுக் காரியாலயங்களிலும், தீண்டாமை என்பது இல்லாமல் இருக்கிறது. சமீப காலம் வரையில் ஹரிஜனச் சிறுவர்களைப் பொதுப் பள்ளிக்கூடங்களில் சேர்ப்பது கஷ்டமாக இருந்தது. ஆனால் ஹரிஜனச் சிறுவர்களை வகுப்பில் சேர்த்துக்கொள்ள மறுக்கும் பாடசாலைகளுக்குக்

# அருமைப் புதல்விக்கு

கிரானடு கொடுக்க முடியாது என்று சர்க்கார் சொல்லவே மேலே சொன்ன விஷயம் சரிப்பட்டுவிட்டது. இன்றும் சில இடங்களில் பொதுஜன அபிப்பிராயம் முன்னணிக்கு வரவில்லை. அவ்விடங்களில் பொதுஜன அபிப்பிராயத்தைச் சாதகமான தோரணையில் வளர்த்து உருப்படுத்த வேண்டும்.

சட்டம் தெளிவாகவும், சந்தேகத்துக்கு இடமில்லாத வகையிலும் இருப்பினும் சில இடங்களில் ரஸ்தா, குளம், கிணறு இவற்றைப் பொறுத்துச் சற்றுக் கஷ்டங்கள் இருக்கத்தான் இருக்கின்றன. பொது ஜனங்கள் பணத்திலிருந்து பராமரிக்கப்படும் ரஸ்தா, ஜலம் முதலியவற்றை அநுபவிக்க முடியாமல் எந்தப் பிரஜைக்கும் உரிமை மறுக்கக்கூடாது. சட்டம் செவ்வையாகச் செய்யப்பட்டுளது. இருப்பினும் அந்த அந்த ஸ்தலங்களில் எதிர்ப்பு இருந்துவருகிறது. பணக்காரர்களாக இருப்போரும் செல்வாக்குள்ளவர்களும் சகிப்புத் தன்மையுடன் இல்லை. ஹரிஜனங்கள் பலவீனர்ந்து போகின்றனர். ஜாதி ஹிந்துக்களும் ஹரிஜனங்களும் ஒன்றுபட்டு ஹரிஜன சேவா சங்கத்தின் உதவியைப் பெறும் பக்ஷத்தில் இந்தப் பிரச்னை துரிதமாகவும் திருப்திகரமாகவும் தீர்க்கப்பட்டுவிடும்.

ஹரிஜனங்களின் தற்கால நிலைக்கு அவர்களேதான் பொறுப்பாளிகள் என்பது ஓரளவு உண்மைதான். அவர்கள் சுகாதார முறையைப் பின்பற்றி நடப்பதுடன் குடியை விட்டு ஒழிக்க வேண்டும். தாங்களாக அவர்கள் குடியை விடாவிட்டால் கட்டாயத்தின் மூலம் அப்பழக்கத்தை அவர்களிடமிருந்து ஒழிக்க வேண்டும். மதுவிலக்கால் மற்ற சமூகத்தைவிட ஹரிஜனங்களுக்குத்தான் அதிக அநுகூலம் கிடைத்திருக்கிறது. அதை அநுசரணையாகக் கொண்டு வாழ்க்கை நிலையை அபிவிருத்தி செய்துகொள்ள வேண்டும்.

ஹரிஜனங்கள் ஏழைகள். அதேபோல ஜாதி ஹிந்துக்களும் இருக்கின்றனர். இந்த நிலை நாட்டின் ஏழைமை நிலையில் ஓர் அங்கம். இது தனியாகக் கவனிக்க வேண்டிய விஷயம். ஹரி-

ஜனங்களின் செல்வ நிலைமையை உயர்த்த விசேஷமாக ஏதாவது செய்ய வேண்டும். ஹரிஜனங்கள் அனைவரும் நல்ல விவசாயிகள். தங்களுக்குத் தேவையான உணவுப் பொருள்களை உற்பத்தி செய்துகொள்ளவும், நூல் நூற்று, நெய்து, ஆடைகளைத் தயாரித்துக்கொள்ளவும் அவர்களுக்குச் சகல வழியிலும் ஆதரவு அளிப்பதுடன், இரண்டொரு குடிசைத் தொழிலையும் அபிவிருத்தி செய்து கொள்ளச் செய்ய வேண்டும். இவற்றையெல்லாம்விட ஹரிஜனங்களுக்குக் கல்வி போதிக்க வேண்டும். பொதுவாகவுள்ள பாடசாலைகளில் சேர்ந்து அவர்கள் படிக்க வேண்டும்.

சட்டசபைத் தேர்தலில் ஹரிஜனங்களுக்குத் தனித் தொகுதி கூடாது. பொதுத் தொகுதியில் அவர்கள் ஓட்டுக் கொடுக்க வேண்டும். சில வருஷங்கள் வரையில் சட்டசபைகளிலும் ஸ்தல ஸ்தாபனங்களிலும் அவர்களுக்குத் தனியாக இடம் இருக்கும்படி செய்யலாம். சென்னை நகரைத் தவிர, சென்னை மாகாண ஸ்தல ஸ்தாபனங்களில் ஹரிஜனங்களுக்கு விசேஷமாகத் தனித் தொகுதி ஒழிய வேண்டும்.

அடுத்தபடியாகக் கவனிக்க வேண்டிய பிரச்னை ஆலயப் பிரவேசம். ஆலயங்களிலும் தரிசனத்திலும் எனக்கு நம்பிக்கை அதிகம். ஆனால் ஹரிஜனங்கள்—ஒரு வகுப்பாக—கோயிலுக்குள் போகக்கூடாது என்பதற்கு நியாயம் எதுவும் இல்லை. தேக சுத்தத்தோடும் மனச் சுத்தத்தோடும் ஆலயங்களுக்குப் போக வேண்டும் என்பதை ஒப்புக்கொள்கிறேன். மலையாளத்தில் ஸ்நானம் செய்யாமல் யாரும் கோயிலுக்குள் போகக்கூடாது. இங்கும் அதேபோல் ஒரு கட்டுப்பாட்டைச் செய்யலாம். ஆனால் கோயிலுக்குப் போய் ஸ்வாமி தரிசனம் செய்யக்கூடாது என்று யாரையும் தடை செய்யக் கூடாது. கடவுள் கருணை நிறைந்தவர். எங்கும் நிறைந்தவர். பின்னர் ஏன் இந்த வழக்கம் வந்தது? இதைப்பற்றி விசாரணை செய்வதில் லாபமில்லை. இம்முறை தென்னிந்தியாவில் இருப்பதுபோல் வட இந்தியாவில் கடுமையாக

# அருமைப் புதல்விக்கு

சில ஹரிஜனத் தலைவர்கள் ஆலயப் பிரவேசத்தை வெறுக்கின்றனர். அவர்கள் ஹரிஜனங்களின் பிரதிநிதிகள் அல்ல. சாதாரணமாக உள்ள ஹரிஜன், இந்த உரிமை தனக்கு இருக்கவே விரும்புகிறன். இதனால் ஹிந்து மதத்திலுள்ள களங்கம் நீங்கும். ஹிந்து மதம் பலமும் அடையும். இது கடவுளுக்குத் திருப்தியான சீர்திருத்தமும் ஆகும். ஆகவேதான் மகாத்மாஜி தீவிரமாக இத்துறையில் சேவை செய்கிறார். திருவாங்கூர் மகாராஜாவும், ஸர் ஸி. பி. ராமஸ்வாமி ஐயரும் தைரியமாக ஆலயப் பிரவேசப் பிரகடனம் செய்ததற்காக அவர்களைப் பாராட்ட வேண்டும்.

இதன் முக்கியாம்சத்தை நான் உணர்கிறேன். நீ பிறப்பதற்குப் பல வருஷங்களுக்கு முன்பு, நான் திருவனந்தபுரம் போயிருக்கிறேன். ஸ்ரீ கன்யாகுமரி ஆலய தரிசனத்துக்காக நான் போயிருந்தேன். இலங்கைக்கும் போயிருந்தேன். நான் ஆலயத்துக்குள் போகக் கூடாது என்று மரியாதையாகச் சொன்னார்கள். உண்மைப் பக்தருக்கு ஆலயப் பிரவேசம் மறுக்கப்பட்டால் எப்படி இருக்கும் என்பதை அப்போது நான் அறிந்தேன். நீ பிறந்த பிறகு அங்கே போனபோதும் அப்படியே நேரிட்டது. கூடிய சீக்கிரம் நாம் எல்லோரும் அங்கே போய்த் தரிசனம் செய்யும் சந்தர்ப்பத்தை எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறேன்.

சமூகச் சீர்திருத்தச் சட்டம் செய்வது பொதுஜன அபிப்பிராயத்தை வளர்க்க, எவ்வளவு தூரம் உதவும் என்பது ஒரு பிரச்னை. அதைப்பற்றி எழுத ஆரம்பித்தால் கடிதம் நீண்டுவிடும். கூடிய வரையில் சட்டம் பொதுஜன அபிப்பிராயத்துக்கு உகந்ததாக இருக்க வேண்டும். சென்னை ஆலயப் பிரவேசச் சட்டம் சம்பந்தப்பட்ட வரையில் அபிப்பிராய பேதம் இருக்கிறது. ஹரிஜனங்களுக்கு ஆலயப் பிரவேச உரிமை இருக்க வேண்டும் என்பது என் அபிப்பிராயம். எப்படியும் ஆலயப் பிரவேச உரிமை வந்துவிட்டது. மதுரையில் ஸ்ரீ மீனாக்ஷியும் பழனியில் ஸ்ரீ ஆண்டவனும் ஹரிஜனங்களுக்குத் தரிசனம் கொடுத்துக் கருணை காட்டு

17-7-'41.

# பெண்களுக்கு ஓட்டுரிமை

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

நான் உனக்கு எழுதி வரும் கடிதங்களிலெல்லாம் அரசியலைப் பற்றி அதிகமாக எதையும் பிரஸ்தாபிப்பதில்லை. ஆனால் பெண்களுக்கு ஓட்டுரிமை இருப்பது குறித்து எழுதும்படி நீ கேட்டிருப்பதால் அது சம்பந்தமாக உத்ஸாகத்துடன் எழுதுகிறேன்

முற்போக்கடைந்த இங்கிலாந்து முதலிய நாடுகளில் வெகு நாள் வரையில் தீவிரமாகப் போராடிய பிறகுதான் பெண்களுக்கு ஓட்டுரிமை கிடைத்தது. ஆனால் இந்தியாவில் ஓட்டுரிமை பெண்களைத் தேடி வந்து அடைந்திருக்கிறது என்றுதான் சொல்ல வேண்டும்.

இந்தியாவுக்கு அரசியலைத் தயாரித்த பிரிட்டிஷ் சர்க்கார், தங்களுடைய நாட்டில் நடந்ததை அநுசரித்துச் செய்ததன் காரணமாக இந்தியாவிலும் பெண்களுக்கு ஓட்டுரிமை கிடைத்தது. இந்தியப் பெண்கள் வாக்குரிமை வேண்டுமென்று விரும்பியதும் அதை இந்தியர்களெல்லாம் ஆட்சேபிக்காமல் உத்ஸாகமாக ஆதரிக்கவும் ஆதரித்தார்கள்.

ஓட்டு என்றால் என்ன ?

ஜனநாயக சர்க்காரில் சாதாரணமான பிரஜையின் அபிப்பிராயத்தைத் தெரிவிப்பதற்கு ஓட்டு ஓர் சாதனம்.

ஜர்மனி அல்லது ரஷ்யாபோன்ற சர்வாதிகாரிகளின் ஆதிக்கத்துக்கு உட்பட்ட நாடுகளில்கூட ஜனங்கள் ஏதாவது ஒரு விசேஷ சந்தர்ப்பத்தில் ஓட்டுக் கொடுக்கிறார்கள். ஆனால் ஒரு தனி மனிதனுடைய கொடிய ஆட்சிக்கோ அல்லது கட்சிப் பிணக்கை

ஓட்டியோ அவர்கள் அங்கெல்லாம் ஓட்டுக் கொடுக்கும்படி இருக்கும். ஜனநாயக நாடுகளில்தான் ஓட்டுரிமை இருக்க முடியும்.

ஜனநாயகம் பல உருக்களில் இயங்கலாம் என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். பொறுப்புள்ள மந்திரி சபைகளை ஏற்படுத்துவதோ விலக்குவதோபோன்ற ஒரு வழி மட்டும் ஜனநாயகம் அல்ல. அமெரிக்காபோல் சாஸ்வதமான ஆட்சியுள்ள நிர்வாகத்தையும் நாம் பெறலாம். ஆனால் மூன்று அல்லது ஐந்து வருஷங்களுக்கு ஒரு முறை ஜனநாயக சர்க்காரின் வாக்காளர்கள் முன் வந்து அவர்களுடைய அபிப்பிராயத்தை ஓட்டுக்கள் மூலம் தெரிவிப்பார்கள். ஓட்டர்கள் தங்களுக்கு எது உசிதமாகப் படுகிறதோ அதன்படி ஓட்டுக்கொடுக்கலாம். ஆகவே ஜனநாயக நாடுகளில் எல்லாம் வாக்காளர்கள்தான் உண்மையில் எஜமானர்கள்.

பெண்கள் பெரும்பாலும் ஆண்களுக்கு உட்பட்டவர்கள் என்றும் ஆகவே அநுஷ்டானத்தில் ஆண்களுக்கு ஓர் ஓட்டுக்குப் பதிலாக இரண்டு கொடுப்பதாக இருக்குமென்றும் இந்தியாவில் ஓர் ஆட்சேபம் தெரிவிக்கப்பட்டது. இது நமது பெண்களுக்கு நியாயம் வழங்கியதாகாது. படிக்கத் தெரியாத ஆண் ஓட்டர்களும் பெண் ஓட்டர்களும் இருக்கின்றனர். ஆயினும் அவர்கள் யதேச்சையாக ஓட்டுப் போடலாம் போடவும் போடுகிறார்கள்; ஆண்களைப்போல் மற்றவர்களை நம்பியிருக்க வேண்டும் என்ற அவசியம் பெண்களுக்கு இல்லை.

இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்னால் காஞ்சீபுரத்தில் நடைபெற்ற மாகாண மகாநாட்டில் எனக்கு ஓர் உன்னதமான அநுபவம் ஏற்பட்டது. அப்போது டாக்டர் பெஸன்டின் பிரேரணைக்கு நான் ஒரு திருத்தம் கொண்டுவந்தேன். டாக்டர் பெஸன்டு செல்வாக்குடன் இருந்த காலம் அது. ஒரு புருஷனும் மனைவியும் அம் மகாநாட்டுக்குப் பிரதிநிதிகள். புருஷன் பிரும்ம ஞானி என்று நினைக்கிறேன். அவர் டாக்டர் பெஸன்டுக்குச் சாதகமாகவே ஓட்டுக்கொடுத்தார். புருஷன் எவ்வளவோ

தடுத்தும் அவரது மனைவி எனக்குச் சாதகமாகவே ஓட்டுக் கொடுத்தார். இது ஓர் உதாரணம். ஆனால் இது நடந்து இருபத்தைந்து ஆண்டுகளுக்குமேல் ஆகிவிட்டது. இப்போது விஷயங்கள் நிரம்ப அபிவிருத்தி அடைந்திருக்க வேண்டும்.

சட்டசபைத் தேர்தல்களில் பெண்களுக்கு ஓட்டு உண்டு. அதுமட்டும் அல்ல; அவர்களுக்கும் பொதுத் தொகுதியிலிருந்து சட்டசபைகளில் விசேஷ ஸ்தானங்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. நல்ல காலம்; பெண்களுக்குத் தனித் தொகுதி இல்லை. அவர்களும் தனித்தொகுதி வேண்டும் என்று கோரவில்லை. சென்னை ஜனப் பிரதிநிதி சபையில் தனியாக ஒதுக்கப்படாத ஒரு ஸ்தானத்துக்கு ஸ்ரீமதி லக்ஷ்மி சங்கரையர் தேர்ந்தெடுக்கப்பட்டார். நான் திடநம்பிக்கையுடன் அவரை மேற்படி ஸ்தானத்துக்கு நிறுத்தினேன். அவர் ஜயிக்கவும் ஜயித்தார். ஸ்தல ஸ்தாபனங்களில்கூடப் பெண்களுக்குத் தனியாக ஸ்தானங்கள் ஒதுக்கப்பட்டிருக்கின்றன. மொத்தத்தில் ஸ்தல ஸ்தாபனங்கள், சட்ட சபைகள் இவற்றிலுள்ள பெண் அங்கத்தினர்கள் தங்களுடைய கடமைகளைத் தீவிரமாக உணர்ந்து கஷ்டப்பட்டு உழைக்கிறார்கள். அவர்கள் அங்கே எல்லாம் உபயோகமான அங்கத்தினர்களாகவும் இருக்கின்றனர். ஆனால் ஆடவர்களைப் போல் பெண்கள் சேவை செய்வார்களா என்பதுபற்றி எனக்குச் சந்தேகம். இதை மிகுந்த மரியாதையுடனேயே தெரிவித்துக் கொள்கிறேன். மேல் நாடுகளில்கூட, இரண்டொரு இனங்களில் தவிர, பெண்களெல்லாம் பொதுவாழ்வில் வெளிப்படையாக வெற்றி பெறவில்லை. இந்தியாவில்கூட இதே நிலைதான் இதற்குப் பெண்களைக் குற்றம் சொல்லிப் பயனில்லை.

பொது வாழ்வில் கடினமாக ஈடுபட்டுச் சேவை செய்வதற்கும் பெண்களின் தன்மைக்கும் உகந்தபடி நிலைமை இல்லை. பொதுவாழ்வில் இருப்பினும், தாங்கள் பெண்கள் என்பதை அவர்கள் மறக்கக்கூடாது. புருஷர்களுடன் சம அந்தஸ்து வகிக்க வேண்டுமென்று உரிமை கொண்டாடும் அவர்கள், தங்

களுக்குத் தனியாக உரிமை கொடுக்க வேண்டும் என்கிறார்கள். அதற்காகவும் அவர்களிடம் நான் குறைப்பட்டுக்கொள்ள முடியாது. அது அவர்கள் சுபாவம்.

முன்னேற்ற மடைந்த ஜனநாயக நாடுகளில் எந்த விதமாக உபயோகிக்கப்பட வேண்டுமோ அம்முறையில் ஓட்டுகள் உபயோகிக்கப்படுகின்றனவா? விவேகத்துடன் வெறுப்பு விருப்பின்றி ஆண்களோ பெண்களோ ஓட்டுப்போடத் தகுதி உண்டா? தேர்தலில் அடங்கியுள்ள பிரச்னையை அறிந்து, சரியானபடி முடிவு செய்யக்கூடிய முறையில் அவர்களுக்குக் கல்வி அறிவு உண்டா? நபர்கள், கட்சி பந்தங்கள் இவற்றால் தேர்தல் பிரச்னை பாதிக்கப்படுகிறதா? இவையெல்லாம் அடுத்து எழுதும் கடிதங்களில் நன்கு பரிசீலிக்க வேண்டிய விஷயங்கள்.

போராட்டம் ஏதும் இன்றி இந்தியப் பெண்களுக்கு ஓட்டு உரிமை கிடைத்திருப்பதற்காக அவர்களைப் பாராட்ட வேண்டும். இந்த உரிமையை ஆண்களைப்போலவே அவர்கள் உபயோகிக்கிறார்கள் என்றே நான் நம்புகிறேன். நான் கலந்துகொண்ட தேர்தல்களில் எல்லாம், நீயும் உன் அம்மாவும் செய்த முயற்சி காரணமாகப் பெண்களெல்லாம் வெகு உத்ஸாகமாக என்னை ஆதரித்தார்கள். அவர்களுக்கு நான் கடமைப்பட்டிருக்கிறேன். உங்கள் இருவருக்கும் நான் வந்தனம் செலுத்தவேண்டும்.

18-7-'41.

என்னுடைய சென்ற கடிதத்தின் முடிவிலே ஓட்டுக்கள் பற்றியும், அவற்றை உபயோகிக்கும் முறை குறித்தும் சில முக்கியமான விஷயங்களைத் தெரிவித்திருந்தேன். வாக்காளர் எழுதப் படிக்கத் தெரிந்தவர்களாக இருந்துவிட்டால் இந்த விஷயம் அநுஷ்டானத்தில் வெகு எளிதாக இருக்கும். ஆணோ பெண்ணோ ஓட்டுப்போடும் இடத்துக்குப் போக வேண்டியது. தங்கள் இஷ்டப்படி x போட்டுவிட வேண்டும்; அவ்வளவே, ஆனால்

# பெண்களுக்கு ஓட்டுரிமை

வாக்காளர்கள் இந்தியாவில் உள்ளதைப்போல்—ஆயிரக்கணக்காகப் படிக்கத் தெரியாதவர்களாக இருந்துவிட்டால் – விஷயம் வெகு சிக்கல் ஆகிவிடும்.

சென்ற பொதுத் தேர்தல்கள் நடந்தபோது சென்னையில் வர்ண ஓட்டுப் பெட்டிகளை வைக்கும் வழக்கம் ஆரம்பமாயிற்று. காங்கிரஸ் அபேட்சகர்களுக்கு மஞ்சள் பெட்டி. அவர்கள் தேர்தலில் ஜயித்தார்கள். மற்றக் கட்சிகளுக்கெல்லாம் மஞ்சள் வர்ணத்தைக் கண்டு பொறாமை. இதர மாகாணங்களில் அபேட்சகர்களுக்கு மிருகங்கள், புஷ்பங்கள், மரங்கள் இவற்றின் அடையாளங்கள் அச்சிட்ட ஓட்டுக் காகிதங்கள் கொடுக்கப்படும். எழுதப் படிக்கத் தெரியாத வாக்காளர்கள் தங்கள் இஷ்டப்படி ஓட்டுப் போடலாம். இக்குறைபாடு சீக்கிரம் நிவர்த்தியாகி மேற்கொண்டு ஜனங்களுக்கு எழுத்தறிவு ஏற்படுமென்று நம்புவோம்.

முன்னேற்றமடைந்த நாடுகளில்கூடச் சாதாரணமாக ஓர் ஓட்டர் எந்த விதமாக ஓட்டுக் கொடுக்க வேண்டுமோ அந்த மாதிரி கொடுக்கிறாரா என்பது பற்றித் திருப்திகரமாக என்னால் பதில் சொல்ல முடியவில்லை. காங்கிரஸ், தேர்தல்களில் ஈடுபடும் வரையில் தேர்தல்களிலெல்லாம் லஞ்சப் பழக்கம் இருந்து வந்தது. பகிரங்கமாகத் தேர்தல்களில் பணம் கொடுக்கப்பட்டது. ஏதாவது குறைபாட்டைச் சொல்லிக்கொண்டு படிக்கத் தெரிந்த வாக்காளர்கூட, வாய் மூலமாகவே ஓட்டுக் கொடுத்துப் பணம் கொடுத்த அபேட்சகர்களைத் திருப்தி செய்தார்கள். இவையெல்லாம் இப்போது வெகுவாகக் குறைந்துவிட்டது. இது போன்று பணம் கொடுப்பது என்ற பழக்கம் இதர நாடுகளில்

பணம் கொடுப்பது மட்டுந்தான் லஞ்சமா? நம் நாடு உள்பட இதர நாடுகளிலெல்லாம் வண்டி, மோட்டார் இவைகளைக் கொண்டு வாக்காளர்களை அழைத்துச் செல்வது, ஓட்டர்களுக்குச் சிற்றுண்டி வழங்குதல் முதலியன சட்ட ரீதியாகத் தடுக்கப்பட்டிருக்கின்றன. இருந்தும் பணக்காரர்கள் ஏழைகளிடம் தங்க

னுடைய செல்வாக்கைப் பிரயோகிக்கிறார்கள். சாதாரணமாக உள்ள ஓட்டர், ஓட்டுக்கொடுக்க விரும்புவதில்லை. அவரைத் தூண்டி ஓட்டுப் போடச் செய்யவேண்டியிருக்கிறது. ஆகவே, வண்டிகள், மோட்டார்கள் ஆகிய சாதனங்கள் அதிகமாகவுள்ள அபேட்சகருக்கு அநுகூலமாக இருக்கிறது நிலைமை. பணக்காரர்கள் வாக்காளர்களுக்கு உபசாரங்களை நடத்துகின்றனர்.

இவையெல்லாம் இல்லாமலேயே தீவிரமான போட்டியுள்ள தேர்தலில் பிரசாரச் செலவே அதிகம் ஆகிவிடும். பொதுக்கூட்டங்கள், ஊர்வலங்கள், ஸினிமாக் காட்சி விளம்பரங்கள் இவற்றிற்கெல்லாம் பணச்செலவு அதிகம். சென்னை நகரில், இந்திய சட்டசபைக்காக நடந்த என்னுடைய தேர்தலில் பெருந்தொகை செலவாயிற்று. வாக்காளர்கள் என் விஷயத்தில் உத்ஸாகமாக இருந்தனர். தாங்களாகவே வலுவில் சேவை செய்ய வந்தார்கள் பலர். இருந்தும் மேற்சொன்னதுபோல் செலவு.

ஏழை அபேட்சகர்களுக்கு இந்தக் கஷ்டத்தை விலக்கி வைக்க ஏதாவது செய்ய வேண்டும். ஒவ்வொரு ஓட்டரும், தேகத்தில் குறைபாடு இருந்தாலன்றி ஓட்டுப்போட்டே தீரவேண்டும் என்று சட்டம் செய்வது ஒரு பரிகாரமாகத் தோன்றுகிறது. ஆஸ்திரேலியாவில் இதுபோன்ற சட்டம் உண்டு. இரண்டாவதாக வாக்காளர்கள் தாங்களாகவே சென்று ஓட்டுப் போட வேண்டும். இதனால் செலவு மிகுதியாகும். நல்ல அபேட்சகர் பணக்காரராயினும் ஏழையாயினும் தேர்தலில் ஜயிப்பார்.

இன்னொரு பரிகாரத்தைப்பற்றியும் சிந்தித்துக்கொண்டிருக்கிறேன். தேர்தல்களை ஏன் ஒரு நாளில் முடிக்க வேண்டும்? ஒரு நாளுக்கு அதிகமாகவே நடத்தலாம். அவசியமான போலிங் ஆபிஸர்களை நியமித்து, வாக்காளர்களின் வீடு சென்று அபேட்சகர்களின் ஏஜண்டுகளின் முன்பாக ஓட்டுப் பதிவு செய்யலாம். இது புரட்சிகரமான மாறுதலாகப் படலாம்; இதனால் அதிகப்படியான ஓட்டுகள் கிடைக்கும். ஓட்டுப் போடும் இடத்திலுள்ள கூச்சல், சந்தடி இவைகளும் இரா.

## பெண்களுக்கு ஓட்டுரிமை

இவை எல்லாம் இருந்தாலும் சாதாரண ஓட்டர், சீராகப் பிரச்னையை நிதானிக்க இடம் இருக்கிறதா என்பது கேள்வி. இதில் நாட்டு வேற்றுமைகள் உண்டு. தேர்தல் பிரச்னைகள் சிக்கல் மிகுந்தவை; எனவே ஓட்டர் சரியாக நிதானிப்பது கடினம். பத்திரிகைகளும் தலைவர்களும் வாக்காளர்களிடையே அபிப்பிராயத்தை வளர்க்க வேண்டும் சாதாரண காலங்களில் பத்திரிகைகளும் பிரசங்கிகளும் ஜனங்களுக்கு அபிப்பிராயம் வளர்ச்சிபெறத் தங்களாலான சேவை செய்கின்றனர். தேர்தல் போட்டியின் போது பிறக்கும் உணர்ச்சிப் பெருக்குக் காரணமாக வாக்காளர்களுக்குக் குழப்பம் மிகுதியாகும். இருப்பினும் அவர்கள் தங்களால் ஆனதைச் செய்கின்றனர்.

அநேகம் நாடுகளில் அபேட்சகர்கள், 'சுயேச்சை' யாக நிற்பதில்லை. நல்ல கட்டுப்பாடான அரசியல் கட்சிகளின் சார்பாக அவர்கள் நிற்பார்கள். வாக்காளர்கள் ஏதாவது ஒரு கட்சியைச் சேர்ந்தவர்களாகவேதான் இருப்பார்கள். ஆகவே தங்கள் கட்சியைச் சேர்ந்தவர்களுக்கே ஓட்டுப் போடுவார்கள். இந்தச் சந்தர்ப்பங்களிலே கிடைக்கும் ஓட்டுக்களின் மதிப்பு, அதைப் பெறும் கட்சியின் நாணயம், தன்னலமற்ற தன்மை, திறமை இவற்றின் போக்கைப் பொறுத்த தாகிவிடும். அநேகமாகப் பணம் படைத்தவருக்கே நிலைமை சாதகமாக இருக்கும். இருப்பினும் தேர்தலில் கலந்துகொள்ளும் கட்சிகள் சரியாக நடந்து, அபேட்சகர்களைத் தேர்ந்தெடுக்கும் பட்சத்தில் வாக்காளர்கள் சரியாக நிதானிக்கச் சௌகரியமாக இருக்கும். எதுவாயினும், சாதாரணமாக ஓர் ஓட்டர் தன்னுடைய நிலைமையை உணர்ந்து இஷ்டப்படி ஓட்டுப் போடும் காலம் வந்துவிட்டது.

9-7-'41.

# புகழுரை

**என் அன்புள்ள**
**லக்ஷ்மிக்கு,**

'முகஸ்துதி' யாருக்கும் பிடிக்குமென்று தோன்றவில்லை. இது பெரிய குறைபாடாகக் கருதப்படுகிறது.

புகழ்ச்சி, பாராட்டு இவற்றிற்கும் முகஸ்துதிக்கும் வித்தியாசம் உண்டு. ஒருவரது வாழ்க்கையின் சிறந்த அம்சங்கள் முழுவதையும் பயன்படுத்திக்கொள்ள விரும்பினால் சற்றுப் புகழ்ச்சியாக ஒருவரைப்பற்றிப் பேசித்தான் ஆக வேண்டும் என்பது என் எண்ணம். இதனால் தனி நபருக்கு உத்ஸாகம் உண்டா

சொந்த லாபத்தை உத்தேசித்து, அளவுக்கு அதிகமாக, யாராவது ஸ்தோத்திரம் செய்ய ஆரம்பித்தால் அதுதான் கெடுதியை விளைவிக்கும் முகஸ்துதி. இதனால் புகழுவோருக்கும் புகழப்படுவோருக்கும் கெடுதல்.

யாராவது ஒருவருடைய நல்ல குண விசேஷங்களைப்பற்றியோ சேவையைப்பற்றியோ புகழ்ந்து, கொண்டாடினால் அது மனித வர்க்கத்துக்கே நன்மை பயக்கக்கூடிய காரியமாகிவிடும். இது நியாயமானது.

பகவான்கூட ஸ்தோத்திரத்தை வெறுக்கவில்லை. சர்வ மதங்களும் கடவுளை ஸ்தோத்திரிக்கின்றன. ஸ்தோத்திரங்கள், மந்திரங்கள், தேவாரம், திருவாசகம், திருவாய்மொழி, அருட்பா, தியாகராஜ ஸ்வாமி கிருதிகள் இவை அனைத்தும் ஸ்தோத்திரங்கள் தாம். இவை எல்லாம் கடவுளைப்பற்றிப் புகழ்ந்து பாடப்பட்டவை.

இவற்றைப் பாடியவர்கள் பொருள் விரும்பி, லாபம் அடையப் பாடவில்லை. கடவுள் இந்த ஸ்தோத்திரங்களைப்பற்றி என்ன

கிக்கிறார் என்று சாமானியப்பட்டவர்களால் சொல்ல முடியாது. இந்தப் பக்தர்கள் எழுத்துக்களிலிருந்தும் பக்தி பரவசமாகப் பாடிய பாட்டுக்களிலிருந்தும் பகவானுக்குப் பக்தர்களின் ஸ்தோத்திரத்தில் பரமப் பிரீதியென்றே தெரிகிறது.

மனிதர்கள் சம்பந்தப்பட்டவரையில் நான் திட்டமாகச் சொல்ல முடியும். 'முகஸ்துதி' தங்களுக்குப் பிடிப்பதில்லை என்று ஜனங்கள் ஏன் சொல்லுகின்றனரோ தெரியவில்லை. தங்களைப் பற்றிப் பொய்யும் புளுகுமாகச் சிலர் புகழுரை கூறுகிறார்கள் என்று அவர்கள் சொல்லும் பட்சத்தில் நான் இதை ஒப்புக் கொள்ளுவேன். ஆனால் உண்மை நிலையை உணர்ந்து, அவர்களது சேவையைப் புகழும் தோரணையில் சற்று ஸ்தோத்திரமாகச் சொல்வதைக்கூட ஒப்பவில்லை என்று யாராவது சொன்னால், ஒன்று அவர்கள் மகா புருஷர்களாக இருக்க வேண்டும்; அல்லது வஞ்சகர்களாக இருக்க வேண்டும்; புகழ்ச்சியை விரும்புவதாக வெளியே காட்டிக்கொள்வது சரியில்லை என்றாலும் அதை விரும்பாதவர்கள் யாரும் இருப்பதாகத் தெரியவில்லை.

புகழ்மாலை எவ்வளவு தூரம் ஔஷதம்போல் வேலைசெய்கிறது என்பதற்கு ராமாயணத்திலிருந்து ஓர் உயர்தர உதாரணத்தை உனக்குச் சொல்கிறேன்.

ஹநுமானுக்கு ஒரு சாபம். அவர் தம்முடைய சக்தியை மறந்துவிட்டார். அவரைப்பற்றிப் புகழ்ந்தபோதுதான் அவருடைய பராக்கிரமங்கள் தெரியவந்தன. வானரசேனைகள் கடற்கரை ஓரத்தில் கடலைத் தாண்டக் காத்து நிற்கின்றன. மற்ற வானரங்கள் கடலைத் தாண்டித் திரும்ப முடியாது என்று சொல்கின்றன. ஹநுமான் தனியாக ஓரிடத்தில் மௌனமாக வீற்றிருக்கிறார். அப்போது ஜாம்பவான் ஹநுமானுடைய மகத்தான சக்தியைப்பற்றிப் புகழ்கிறான். உடனே ஹநுமானுக்குத் தன்னுடைய சக்தியை உணரும் நிலைமை ஏற்படுகிறது. கடலைத் தாண்டித் திரும்பிவிட்டார்! அவர் செய்த சேவையை வேறு யாரும் செய்திருக்க முடியாது. இதில் ஓர் கருத்து அடங்கி இருக்கிறது. மனிதரின் மனத்தத்துவ சாஸ்திரத்தை அடிப்படையாகக் கொண்ட கருத்து அது. ஒரு காரியத்தில் தீவிர

சிரத்தை காரணமாக ஒருவர் அதில் ஈடுபடுவதில்லை. அதைச் செய்வதைப் பார்த்து மற்றவர்கள் புகழ்கிறார்கள் என்ற உணர்ச்சியே அக்காரியத்தைச் செய்யத் தூண்டுகோலாக அமைகிறது. இது மிகச் சரியானது.

என்னைப்பற்றிப் பட்டவர்த்தனமாக உனக்கு எழுதலாம். என்னைப் புகழுவதால் பிரதிப்பிரயோசனம் எதையும் நாடாமல் உண்மையான நண்பர்களாக இருப்பவர்கள் என்னைப்பற்றி என்ன நினைக்கிறார்கள் என்பதை அறிய நான் விரும்புகிறேன். அது புகழுரையாக இருந்தால் எனக்குச் சந்தோஷமே. இது அநேகமாக மிகைப்படுத்தப்படுகிறது என்பதை நான் ஒப்புக்கொள்கிறேன். ஆனால் இதில் நல்ல எண்ணம் இருப்பதாகவே எனக்குத் தோன்றுகிறது. என்னைப் புகழ்ந்து பேசிப் பத்திரங்கள் அளித்த சந்தர்ப்பங்களில் நான் அதைப் பாராட்டாக மதிக்கிறேன் என்பதையும் பகிரங்கமாக நான் சொல்லியிருக்கிறேன்.

ஸ்ரீ ஆச்சார்யா உனக்கு எழுதிய கடிதத்தை நான் பார்த்தது காரணமாக இக் கடிதத்தை உனக்கு எழுதுகிறேன். அகில இந்திய ரேடியோவில் உன்னுடைய நிகழ்ச்சியைப் புகழ்ந்து அவர் எழுதியுள்ளார். இது முகஸ்துதிபோலத் தோன்றும். ஆனால் அவர் நல்ல நண்பர். உன்னைப் புகழ்வதால் அவருக்கு லாபம் எதுவும் இல்லை; இதுபோன்ற புகழுரைகள் உன்னுடைய சேவை, குணாதிசயங்கள் இவற்றை உத்தேசித்து உனக்கு அடிக்கடி வந்துகொண்டிருக்குமென நான் நம்புகிறேன். அவை வரும்போது ஏற்றுக்கொள். அவற்றை வெறுக்காதே. ஆனால் இவற்றைக்கண்டு கர்வம் கொள்ளக்கூடாது.

இதேபோல் பிறர் விஷயத்திலும் நமக்குக் கடமை உண்டு. மற்றவர்கள் நல்ல சேவை செய்ததாகத் தோன்றினால் நாம் அவர்களைப் பொதுவாகவும் தனியாகவும் பாராட்டிப் புகழ வேண்டும். இதுதான் அவர்கள் மூலம் சிறந்த பலன்களை எதிர்பார்க்கும் வழி. குறை சொல்லும்படி நேர்ந்தால் சற்றுக் குறைவாகவே சொல்ல வேண்டும். அதுவே தர்மம்.

20-7-'41

# மிருக வேட்டை

**என் அன்புள்ள**

**லக்ஷ்மிக்கு,**

மிருகங்களிடம் மனிதர்கள் கொண்டுள்ள மனோபாவம் மிகவும் நூதனமானது. மிருகங்களில் எவ்வளவோ வகை. சில மிருகங்களைப் பார்த்தாலே நமக்குப் பயமாக இருக்கிறது. அம் மிருகங்கள் பயிர்களை அழிக்கின்றன. யானைகள், கரடி முதலிய வற்றால் நாசம் விளைகிறது. அவை மனிதர்களையும் கொன்றுவிடு கின்றன. ஆனால், எந்த மிருகமும் தனக்கு ஆபத்து வந்தாலன்றி மனிதரைக் கொல்லாது என்று பொதுவாக எல்லோரும் அபிப் பிராயப்படுகிறார்கள். இதைப்பற்றித் திட்டமாக ஒன்றும் சொல்ல முடியாது. ஆனால் சில மிருகங்களால் பயிர்கள், கால்நடைகள், பறவைகள் இவற்றிற்கு நாசம் ஏற்படுகிறது. ஆதலால்தான் கிராமவாசிகளில் அநேகர் ஆயுதங்களை வைத்துக்கொள்ள வேண்டும் என்கிறார்கள்.

காட்டு மிருகங்களை வேட்டையாடுவது என்பது ராஜாக் களுக்கெல்லாம் ஒரு விளையாட்டு. உலகத்திலுள்ள பிரபலப் பணக் காரர்களும் இதில் ஈடுபடுகிறார்கள். தொன்றுதொட்டு நடந்து வரும் பழக்கம் இது. காட்டு மிருகங்கள் மிகவும் பொல்லாதவை யாதலின், அவற்றை ஒழித்துவிட வேண்டும் என்பதே வேட்டை யின் நோக்கம். ஆனால் அவை காட்டில் இருந்துகொண்டு மனிதருக்கு ஹிம்சை விளைவிக்காதிருக்கையில் வேட்டை அவ சியமா? அது அவசியமாக எனக்குப் படவில்லை. முன்பின் பாராமல் இம்மாதிரியான வேட்டைகளில் ஈடுபடுவதால் காட்டு மிருகங்களில் பல அழிந்துபோகின்றன. திருவாங்கூர் சர்க்கார், காட்டு மிருகங்களுக்காகப் பெரியாறு ஏரிக்குப் பக்கத்தில் ஒரு

தனியிடம் அமைத்து, அங்கே அவற்றைப் பாதுகாத்து வருகிறார்கள். இது நல்ல காரியம். அங்கே நாம் போய் ஒரு முறை பார்க்க வேண்டும்.

காட்டு மிருகங்களுக்கும் வேடர்களுக்கும் சரிசமானமாக வேட்டை நடப்பின், அதில் பந்தய விளையாட்டின் நோக்கம் உள்ளடங்கி இருக்கும். ஆனால் தன்னை நன்கு பத்திரப்படுத்திக் கொண்டு மிருகங்களை மனிதர்கள் கொல்லுகின்றனர். மனிதனுக்குத் தொந்தரவு விளைவிக்காத பட்சத்தில் அம் மிருகங்களைக் கொல்லக்கூடாது என்பது என் அபிப்பிராயம்.

காட்டில் வளரும் அழகான சில பறவைகளையும் சாது மிருகங்களையும் வேட்டையாடிக் கொல்லும் இன்னொரு கொடுமை உண்டு. பெண்கள் தங்களுடைய தலைத் தொப்பிக்காக சில அழகிய பறவைகளின் இறகுகளைத் தேடுகின்றனர். அல்லது உடுப்புக்கு உபயோகமாக அவை தேவையாக இருக்கின்றன. எனவே அவற்றைக் கொல்லுகிறார்கள். இந்தப் பறவைகளும் மிருகங்களும் யாதொரு ஹிம்ஸையும் செய்யாதவை. அவற்றைக் கொல்வதற்கு எவ்வித நியாயமும் இல்லை.

இவையெல்லாம் ஒருபுறம் இருக்க, மனிதர்கள் சில மிருகங்களிடம் பட்சமாக இருக்கிறார்கள். அராபியருக்குக் குதிரை; நியூபவுண்ட்லாந்தினருக்கு நாய்; ஆஸ்திரேலியருக்கு ஆடுகள்; ஆப்பிரிக்கருக்கு ஒட்டகம்; ஹிந்துக்களுக்குப் பசு என்று ஒவ்வொருவரும் ஒரு பிராணியிடம் அன்புகொண்டிருக்கின்றனர். இம் மிருகங்களெல்லாம் மனிதர்களுக்கு மிகவும் உபயோகமாக இருக்கின்றன. இதனால் மனிதருக்கும் மேற்படி மிருகங்களுக்கும் இடையே பரஸ்பரம் அன்பு பரிமளிக்கிறது.

மேலே சொன்ன மிருகங்களுக்கெல்லாம் அபாரமான புத்தி சாலித்தனம் உண்டு. பட்சமாக நடத்தினால், அதற்கு அநுசரணையாக அவை நடக்கின்றன. ஆனால் ஒரு குறை; அவற்றிற்குப் பேசத் தெரியவில்லை. ஆகவே தங்களுடைய தேவையை அவை

வெளியிட முடிவதில்லை. நாம் அவற்றை நன்கு பராமரித்தால், அவைகள் நமக்கு எவ்வளவோ அநுகூலமாக இருக்கின்றன.

எல்லாம் இருந்தும் நம் நாட்டில் மிருகங்களுக்குப் பெருவாரியாகத் துன்பம் விளைவிக்கப்படுகிறது. இதற்காகத்தான் ஜீவ ரட்சக சங்கம் தோன்றியது. காளை மாடுகளைத் தார் போட்டுக் குத்துவதுபோன்ற முறைகளால் ஹிம்ஸிப்பதை நிறுத்த வேண்டும். சென்னையில் கன்றுகளைப் பட்டினிபோட்டுப் பால் விடாமல் பரிதவிக்கவிடும் பால்காரர்களின் கொடுமையையும் நிறுத்த வேண்டும். தெருவில் வீணுகச் சுற்றித் திரியும் நாய்கள் பெரிய தொல்லைதான். இருப்பினும் அவற்றை ஜீவகாருணியத்தோடு அப்புறப்படுத்த வேண்டும்.

மிருகங்களிடம் அன்பாக இருக்க வேண்டியதுதான். ஆனால் அவற்றால் மனிதர்களுக்குத் தொந்தரவு ஏற்படாமல் பார்த்துக் கொள்ளவும் வேண்டும். சென்னையில் கவனிப்பாரற்றுத் திரியும் கால்நடைகள், நாய்கள், பன்றிகள், ஆடுகள் இவற்றால் நகர சுகாதாரத்துக்கே கெடுதல். நகரவாசிகளும் சுகாதார அதிகாரிகளும் ஒன்றுபட்டு ஒத்துழைத்துக் கட்டுப்பாடின்றித் திரியும் கால்நடைகளை நகரில் வைக்கவொட்டாது செய்ய வேண்டும்.

எப்படி இருப்பினும் மிருகங்களுக்கும் மனிதர்களுக்கும் சந்தோஷமான தொடர்பு இருக்க வேண்டும். நாம் எல்லோரும் கடவுளின் சிருஷ்டி. நாம் மிருகங்களை வெறுக்கக்கூடாது.

பரமசிவன் ரிஷபத்தை வாகனமாகவும் பாம்புகளை ஆபரணங்களாகவும் ஏற்றுக்கொண்டு அவற்றை அன்பாக நடத்துகிறார். மகா விஷ்ணுவோ கருடாருடராக விளங்குகிறார். சரஸ்வதி, ஹம்ஸத்தை வாகனமாகக் கொண்டவள். யானைகள் லக்ஷ்மியைத் தாமரை மலர்களால் பூசிக்கின்றன. ஸ்ரீ சுப்பிரமண்ய ஸ்வாமி மயிலின்மீது ஏறி வருகிறார். விக்னேசுவரர் மூஞ்சூற்றை வாகனமாக்கிக் கொண்டுள்ளார். தத்தாத்ரேயருக்கு நாய். ஸ்ரீ கண்ணபிரானுக்குக் கோபிகளைப்போல் பசுக்கள். இந்த மிருகங்களிடமெல்லாம் கடவுளின் அநுக்கிரகம் இருப்பதை நாம் உணர்வோமாக. ஆகவே அவற்றை அன்பாக நடத்த வேண்டும்.

## அருமைப் புதல்விக்கு

ஜைனர்கள் இவ் விஷயத்தில் ஒரு படி மேலே போய் இன்னும் தீவிரமாக இருக்கின்றனர். ஈ, எறும்பு, கொசு இவற்றைக்கூட அவர்கள் கொல்லுவதில்லை. இது மிக அதிகம். மனிதர்கள் சுத்தமாக இருந்தால், இந்தப் புழு பூச்சிகள் வரவே வாரா. மிக்க அபாய நிலையில் உள்ள பிராணியைக் கொல்வதா வேண்டாமா? என்று ஒரு பிரச்னையும் உண்டு.

மொத்தத்தில் 'அஹிம்ஸா பரமோ தர்ம (अहिंसा परमो धर्मः)' என்பது சிறந்த சித்தாந்தம். அதை அநுஷ்டித்தால் எல்லாம் நல்லபடியாக இருக்கும்.

21-7-'41.

# பழமொழிகள்

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

பழமொழிகள் எல்லா நாடுகளிலும், எல்லாக் காலத்திலும் வழங்கி வந்திருக்கின்றன. பைபிளில் பழமொழிகள் என்ற ஒரு அத்தியாயமே இருப்பதாக நான் நினைக்கிறேன். உலகத்திலுள்ள நாட்டினரின் அநுபவம், சாதுரியம், விவேகம் இவற்றைத் தாங்கியவை பழமொழிகள். அவற்றில் அடங்கியுள்ள அபிப்பிராயம், சொல் நயம் இவை இரண்டும் மிக்க விசேஷமானவை ஆகும். ஆங்கிலத்தில் பழமொழிகளுக்கே அகராதிகூட இருக்கிறது. நீ அதில் ஒரு பிரதியை வாங்கிக்கொண்டு, உன் ஓய்வு நேரத்தில் படித்துப் பார். இந்தப் பழமொழிகளெல்லாம் நமது சிந்தனையைக் கிளப்பிவிடக் கூடியவை. சில சமயங்களில் அவை தமாஷாகவும் ஒன்று, அவற்றில் நம்பிக்கை ஊட்டக்கூடிய அம்சம் அல்லது அவநம்பிக்கையைக் காட்டும் கருத்து அடங்கியிருக்கும். பழமொழிகளால் உத்ஸாகம் பிறக்கிறது. இவை எல்லாவற்றையும்விட, மனித வர்க்கத்தினிடம் உள்ள ஒருமைப்பாட்டை அவை குறிக்கின்றன.

ஸம்ஸ்கிருதத்திலும் சில பழமொழிகள் இருந்திருக்கத்தான் வேண்டும். ஆனால் அவை இன்று பிராபல்யமாக இல்லை. ஸம்ஸ்கிருதம், பேசும் பாஷையாக இல்லாததே இதற்குக் காரணம். பேசுவதற்காக உபயோகத்தில் இருக்கும் பாஷைகளில் எல்லாம் பழமொழிகள் செழிப்பாக இருக்கின்றன. இப்போதுகூடக் கிரேக்கப் பழமொழிகள் வழங்கி வருகின்றன. அடிக்கடி அவை உபயோகப்படுத்தவும் படுகின்றன. இதேபோல் லத்தீனிலும் பழமொழிகள் உண்டு. ஐரோப்பிய இலக்கியங்களில் அடிக்கடி அவை உபயோகப்படுவதே இதற்குக் காரணம். 'கடவுள்

யாரை அழிக்க விரும்புகிருரோ அவர்கள் முதலில் பித்துப் பிடித்துப் போகிருர்கள் ' என்பது ஒரு பழமொழி.

ஸம்ஸ்கிருதத்தில் இதே கருத்துள்ள பழமொழி ஒன்று உண்டு. விநாசகாலே விபரீத புத்தி : (विनाशकाले विपरीत बुद्धिः). 'இறந்தவரைப்பற்றி இழிவாகப் பேசக்கூடாது'. இது ஒரு பழமொழி. 'சட்டம் தெரியவில்லை என்பது செய்த குற்றத்துக்குப் போதிய முகாந்தரம் அல்ல'. இதைப்போலப் பல பழமொழிகள் உண்டு.

ஆங்கிலத்திலும் தமிழிலும் உள்ள பழமொழிகள்தான் எனக்கு அதிகம் தெரியும். ஆங்கிலப் பழமொழிகள்பற்றி நான் இங்கே உனக்கு எழுதப்போவதில்லை. ஏனெனில் பள்ளிக்கூடத்தில் நீ அவற்றைக் கற்றுக்கொள்ளுவாய்; புத்தகத்திலிருந்தும் அதிகமாகத் தெரிந்துகொள்ளக்கூடும். பல வருஷங்களுக்கு முன்னுல் பம்பாயில் வெளியான, 'ஈஸ்ட் அண்ட் வெஸ்ட்' என்ற சஞ்சிகைக்குத் தமிழ்ப் பழமொழிகள்பற்றி நான் சில கட்டுரைகளை எழுதினேன். என் பாட்டி, தாயார் இவர்களிடமிருந்தே அவற்றை நான் தெரிந்துகொண்டேன்.

இந்தத் தமிழ்ப் பழமொழிகள் நமது விவேகம், கலைப்பண்பு இவற்றை அநுசரித்தவை என்றே நான் எண்ணுகிறேன். சிலவற்றில் அவநம்பிக்கை பிரதிபலிக்கிறதாயினும் மொத்தத்தில் அவை மனிதவர்க்கத்திடம் உள்ள சிறந்த நம்பிக்கையையே காட்டுகின்றன. ஒரு சிறிய கடிதத்துக்குள் பழமொழிகளின் ஜாபிதாவைக் கொடுக்க முடியாது. என்னுடைய கட்டுரைகளை நீ படித்துப் பார். அவை நம் வீட்டில் இருக்கின்றன. நீ அவற்றைப் படித்து ரஸிப்பாய் என்பது நிச்சயம்.

தமிழர்களும் தெலுங்கர்களும் நெருங்கி வாழ்ந்திருக்கின்றனர். இது கீழ்க்கண்ட பழமொழியிலிருந்து புலனுகும்: '**டில்லிக்குப் பாச்சாவானுலும் தல்லிக்குப் பிட்டாதானே!**' ஹிந்துஸ்தானி பதமான, 'பாக்ஷா' என்பது இதில் இடம் பெற்றுளது. 'ஒருவன் டில்லிக்குச் சக்கரவர்த்தியானுல்கூட அவன் தன் தாய்க்குக் குழந்தைதானே' என்பது இதன் பொருள்.

பழமொழிகள்

'தல்லி', 'பிட்டா' இரண்டு பதலுங்கு வார்த்தைகளும், 'தாயும்', 'மகனும்' என்ற பதத்திற்காக வருகின்றன.

இது சாதாரணமான, ஆனால் நல்ல உண்மையைக் குறிக்கும் சொல். இரண்டு பாஷைக்காரர்களது பரிசயத்தையும் இது

தமிழர்கள் நுண்ணறிவுள்ள ஜாதியினர். ஜனங்கள் விரைவில் விஷயங்களைக் கிரகித்துக்கொள்ள வேண்டுமென்று அவர்கள் எதிர்பார்க்கின்றனர். அப்படி இல்லாவிட்டால் அவர்கள் பொறுமை இழந்துவிடுகின்றனர். **'ராத்திரியெல்லாம் மழை பெய்தாலும் ஓட்டாஞ்சல்லி முளைக்குமோ!'** என்பது இதை விளக்கும் ஒரு பழமொழி. உபாத்தியாயர் எவ்வளவு புத்திசாலியாக இருந்தாலும் மாணவன் அதற்கு ஏற்றபடி இல்லாவிட்டால் பயன் ஏதும் இல்லை என்பது இதன் அர்த்தம்.

சகோதரர்களுக்குள் சண்டை வந்துவிடுகிறது. ஆனால் அச் சண்டை சீக்கிரம் தீர்ந்து ஒற்றுமை உண்டாகிவிடுகிறது. **'தண்ணியை என்ன அடி அடித்தாலும் விலகுமா?'** என்பது இக் கருத்துக்கு இசைந்த பழமொழி.

பரம்பரை சித்தாந்தத்தில் நம்மவர்களுக்கு அபார நம்பிக்கை. **'விரையொன்று போட்டால் சுரையொன்று முளைக்குமோ?'** என்ற பழமொழி இதற்குச் சான்று. 'தாயைப்போலப் பிள்ளை; நூலைப் போலச் சேலை' என்பதே இதன் கருத்து.

தமிழர்கள் தருமம் மிக்கவர்கள். ஆகவே தருமம் செய்யாதவர்களைக் கண்டித்து அநேகம் பழமொழிகள் ஏற்பட்டிருக்கின்றன. **'எச்சில் கையால் காக்கை ஓட்டமாட்டான்!'** என்பது இதற்கு ஓர் உதாரணம்.

தமிழர்கள் வீரம் செறிந்தவர்கள். ஒரு காலத்தில் அவர்களெல்லாம் அப்படி இருந்தவர்கள்தான். மீண்டும் அவர்கள் வீர உணர்ச்சி பெற்று வருவதாக நான் எண்ணுகிறேன். அடிபட்டுத் தோல்வியுற்ற பின் நொண்டிச் சமாதானம் சொல்லி வீரம் பேசுவோரைக் கண்டிக்க, **'குப்புற விழுந்தாலும் மீசையிலே மண்**

## அருமைப் புதல்விக்கு

**ஒட்டவில்லை!'** என்று சொல்லும் பழமொழி ச் சிறந்த உதாரணம்.

கோழைகளைக் கண்டால் தமிழர்களுக்கு எரிச்சல். **'கோயி லண்டை முட்டையைப் பறிகொடுத்த நாயக்கருக்குக் குளத் தண்டை போய் மீசை படபடன்னு துடித்ததாம்!'** என்பது கோழையை நையாண்டி செய்யும் பழமொழி.

தமிழர்கள் மதி நுட்பம் உள்ளவர்கள் என்பதுடன் லௌகிக மும் தெரிந்தவர்கள். அவர்களது பழமொழிகளைச் சேகரித்து அர்த்தத்தோடு பிரசுரிக்க வேண்டும். நீயும் இதை ஒப்புக் கொள்வாய். அவகாசம் கிடைப்பின் இதைச் செய்ய வேண்டும் என்பது என் விருப்பம்.

22-7-'41

# விவாதங்கள்

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

பள்ளிக்கூடங்களில் நடைபெறும் விவாதங்களி லெல்லாம் நீ அடிக்கடி பங்கெடுத்துக்கொள்வதை நான் கவனித்து வருகிறேன். இம்மாதிரி செய்வது உனக்கு அநுகூலமானதுதான். பேச்சு வன்மையை வளரச் செய்வதற்கு விவாதங்கள் உதவியானவை. புத்தி கூர்மையாகவும் எப்போதும் துடியாகவும் இருப்பதற்கு அவை பயன்படும். எதிர்த்துப் பேசும் சக்தியைத் தருவதும் விவாதங்கள்தாம். உங்கள் பள்ளிக்கூடத்தில் நடைபெறும் விவாதங்களெல்லாம் மேலே சொன்ன அம்சங்களைக் கொண்டனவாக இருக்குமென்றே நான் நம்புகிறேன். ஆனால் மாதிரியாக ஓர் ஏற்பாட்டைச் செய்து அதன்படி நடத்தும் ங்க ளெல்லாம் இயற்கையாக இல்லை என்பது என் அபிப்பிராயம்.

இதற்கான காரணங்களை நான் உனக்குத் தெரிவிக்கிறேன். விவாதம் என்றால் குறிப்பிட்ட ஒரு விஷயத்தைப்பற்றித் தங்களுடைய அபிப்பிராய பேதங்களைப் பகிரங்கமாகவோ அல்லது வேறு முறையிலோ விவாதித்து அவற்றை அறிவதற்கு வசதி தருவனவாக இருக்க வேண்டும். அதாவது ஒரு சாரார் தெரிவிக்கும் வாதங்களுக்கு மற்றொரு கட்சியார் சமாதானம் தெரிவிப்பதாக இருக்க வேண்டும். இதேபோல் எதிர்க் கட்சியார் சொல்லும் வாதங்களுக்கு இன்னொரு சாரார் பதில் சொல்ல வேண்டும். வாதப் பிரதி வாதங்கள் அடுத்தடுத்து நிகழ வேண்டும். இவை முடிவுற்ற பின்னர் சம்பந்தப்பட்ட இரு கட்சிகளில் எது ஜயித்ததோ அக் கட்சியின் நியாயத்தை எதிர்க் கட்சி ஏற்க வேண்டும். அநேகமாக இது மாதி

# அருமைப் புதல்விக்கு

மனிதன் பிடிவாத சித்தமுள்ளவனாக இருப்பது மட்டும் இதற்குக் காரணம் அல்ல. சரியான விஷயத்தை ஏற்றுக்கொண்டு தவறானவற்றைத் தள்ளிவிட வேண்டுமென்று நிர்ப்பந்திப்பதற்கு அவசியமான காரணமும் இருப்பதில்லை. புத்தி விஷயத்திலும் சரி, உணர்ச்சி விஷயத்திலும் சரி நாம் பொதுவாக அயர்ந்திருக்கிறோம். அத்தியாவசியமாக இருந்தாலன்றி நாம் மனத்தை உறுதி செய்துகொள்வது கிடையாது.

உன்னுடைய பள்ளிக்கூட விவாதங்கள் சம்பந்தப்பட்ட வரையில் அவை எந்தக் கட்சியிலாவது உத்ஸாகம் இருக்கும் வண்ணம் அமையவில்லை. ஜனங்கள் தீவிரமாக எண்ணக்கூடிய பிரச்னையைப்பற்றி விவாதிக்க நீ ஏன் முற்படக் கூடாது? ஒவ்வொரு மாணவியாகப் பொறுக்கி ஏதாவது ஓரு கட்சியில் சேர்த்து, விவாதத்தில் ஈடுபடச் செய்யும் முறை எனக்குப் பிடிக்கவில்லை. இது இயற்கைக்கு விரோதமாகவும் படுகிறது. அடுத்தபடியாக நடக்கும் உன்னுடைய பள்ளிக்கூட விவாதத்தில் எந்த விஷயத்தைப்பற்றி உனக்குத் தீவிரமாகவும் திட்டமாகவும் அபிப்பிராயம் இருக்கிறதோ அந்தக் கட்சியை எடுத்துக்கொள்; இல்லையானால் விவாதத்திலேயே சம்பந்தப்படாமல் இருந்துவிடலாம். இது என்னுடைய யோசனை.

விவாதங்களின் தரத்தை உயர்த்த இன்னொரு யோசனையைக் கூட உனக்குத் தெரிவிக்கிறேன். சில விஷயங்களைப்பற்றிய விவாதத்தை முன்னதாக அறிவிக்காமல் இருக்க வேண்டும். விவாதம் துவங்குவதற்கு ஐந்து நிமிஷங்களுக்கு முன்னதாக விஷயத்தை மாணவிகளிடம் பிரஸ்தாபிக்கட்டும். அப்போது உண்மையான விவாதத்தின் தன்மை துலங்கும். எவ்விதமான விவாதங்களையும் முன்னதாகத் தயாரித்து வைத்துக்கொண்டு நீ போகக்கூடாது. அவகாசம் கொடுக்கப்பட்டிருந்தால் நீ உன்னுடைய விவாத விவரங்களையும் எடுத்துரைக்க வேண்டிய கட்சிகளையும் நிதானித்துச் சிறப்பாகச் சித்திரித்துக்கொள்ளலாம். ஆனால் எதிர்பாராத விதமாகத் திடீரென்று சமயத்தில் உதிக்கும் கேள்விகளுக்குப் பதில் அளிப்பதில் தனியாக ஓர் அழகு இருக்கத்தான் இருக்கிறது.

# விவாதங்கள்

இதைக் குறிப்பிடும்போது சட்ட சபைகளில் நடக்கும் விவாதங்களைப்பற்றி எனக்கு நினைவு வருகிறது. அவற்றில்தானே எனக்குப் பரிசயம்? அங்கே நடக்கும் விவாதங்களில் சம்பந்தப்பட்டவர்கள் பிரச்னைகளின் உண்மை நிலைமையை வெளிக்கொண்டுவந்து அவற்றின் தரத்துக் கேற்றபடி முடிவுகட்டுவது என்பதுதான் உட் கருத்து. ஆனால் இந்தக் காலத்தில் அம் மாதிரி நடப்பது அபூர்வம். சட்ட சபையில் உள்ள கட்சி முறைப்படி அநேகமாக எல்லா அங்கத்தினர்களும் எல்லா விஷயங்களைப் பொறுத்தும் தங்களுடைய மனோபாவத்தைக் கட்டுப்பாட்டுக்கு அடக்கி உறுதி கொண்டுவிடுகின்றனர். பிரஸ்தாப விஷயங்கள் கட்சிக் கூட்டங்களில் விவாதிக்கப்பட்டவை என்பது இதன் கருத்து. சபைமுன் வரும் பிரச்னையில் மெம்பர்கள் எப்படி ஓட்டுச் செய்ய வேண்டும் என்பதைச் சம்பந்தப்பட்ட கட்சி முன்னதாக நிர்ணயிக்கிறது. எனவே திட்டமாக யோசனைகளும் வெளியிடப்படுகின்றன. எனவே விவாதங்களில் உண்மை அம்சம் இருப்பதில்லை. வெளியே உள்ள ஜனங்களைத் திருப்திப்படுத்துவது வேறொரு புறம். கட்சிக்கொறடா இருப்பதால் மேற்கொண்டும் விவாதங்களில் இயற்கைச் சுவை இருப்பதில்லை வெகு முக்கியமான சந்தர்ப்பமாகவோ முக்கியமாக நன்கு பேசக்கூடியவர்கள் பேசுவதாகவோ இருந்தாலன்றி மெம்பர்கள் வருவதில்லை.

சில சமயங்களில் கட்சிக் கொறடா முறை இருப்பதில்லை. மெம்பர்கள் யதேச்சையாகப் பிரச்னையின் தரத்துக்கு ஏற்றபடி ஓட்டுக் கொடுக்கலாம். அத்தகைய சந்தர்ப்பங்களில் விவாதம் இயற்கையாக இருக்கும். ஆனால் இது அபூர்வந்தான்.

சில சமயங்களில் பத்திரிகைகளில் விவாதம் நடத்தப்படுவது உண்டு. ஆனால் உடனுக்குடன் பதில் சொல்வது இதில் முடியாது. எனவே விவாதங்களும் எதிர்வாதங்களும் பக்குவமாகக் கொடுக்கப்பட்டிருக்கும். விவாதங்களால் உடனடியாக மாறுதல்களை ஏற்படுத்துவது சாத்தியம் அல்ல. அப்படி எதிர்பார்ப்பதற்கும் இல்லை. ஆனால் நன்கு நடக்கும் விவாதங்கள் காரணமாகப் பொதுஜன அபிப்பிராயம் விரிவாக உருவடையும்.

## அருமைப் புதல்விக்கு

விவாத பூர்வமாக முடிவு கண்டு நடத்தும் சர்க்கார்தான் ஜனநாயக சர்க்கார். ஜனங்கள் லேசாகத் தங்கள் அபிப்பிராயங்களை மாற்றிக்கொள்ள மாட்டார்கள். ஆனால் பொதுவில் நடக்கும் விவாதங்களால் சமூகத்தில் மாறுதலை உண்டுபண்ண முடியும். அவற்றிற்கு அந்தச் சக்தி உண்டு.

நீ இப்போது விவாதங்களில் ஈடுபடுவது கண்டு நான் சந்தோஷிக்கிறேன்.

அவற்றை இயற்கையாகவும், பயன்தரத் தக்கவையாகவும் நீ செய்துகொள்.

23-7-'41.

# சட்டசபை விவாதம்

என் அன்புள்ள

பந்தய விளையாட்டுகளில் அநுஷ்டிக்கப்படும் நியதிகளுக்கு ஏற்றவாறு பொது விவாதங்களை நடத்த வேண்டுமென்று என்னுடைய சென்ற கடிதத்தில் உனக்கு எழுதியிருந்தேன். இதற்கான அவசியத்தை நீ உணர்ந்துகொண்டிருப்பாய். அம்மாதிரியான விதிகளை விவாதங்களில் அநுஷ்டிக்காமல் போனால் அவை கடுமையான சச்சரவுகளில் முடிவதோடு விளக்கம் ஏற்படுவதற்குப் பதிலாகக் கொதிப்பே அதிகரித்துவிடும். உன்னுடைய பள்ளிக்கூட விவாதங்களில் அம்மாதிரியான விதிகளை அநுஷ்டிக்க வேண்டியதற்கான அவசியத்தைக் கவனித்து அறிந்திருப்பாய். இதற்கான அவசியம் உங்களுக்கு முக்கியமாகத் தோன்றாமல் இருக்கலாம் நீங்களெல்லாம் நாசுக்கான இளம் பெண்கள் என்பதே அதற்குக் காரணம்.

முதியவர்கள், விவாதங்களில் ஈடுபடும்போது சட்ட திட்டங்களை அநுஷ்டிப்பது மிகவும் முக்கியமானதாக இருக்கும். இதற்கு விஷயம் தெரிந்தவர்கள் இருப்பது அவசியம். அந்தமாதிரி சட்ட திட்டங்களை அமுல் நடத்துபவர்கள் நல்ல படிப்பாளியாக இருக்க வேண்டும்; பக்ஷ பாத மனோபாவம் இல்லாதிருப்பதோடு விவாதத்தில் சம்பந்தப்பட்டவர்களும் அவரது மனோபாவத்தை ஒப்புக்கொள்ள வேண்டும். விவாதங்களைக் கூர்ந்து கவனித்து அதை நன்கு நிர்வகிக்க வேண்டும். அதுபோன்ற நபரைச் சாதாரணக் கூட்டங்களானால் 'தலைவர்' என்றும், கார்ப்பொரேஷனானால் 'மேயர்' என்றும், சட்ட சபையானால் 'ஸ்பீக்கர்' அல்லது 'தலைவர்' என்றும் கூறுவது வழக்கம்.

விவாதத்தில் முதல் விதி என்னவெனில், ஒரு சமயத்தில் ஒரு நபர்தான் கூட்டத்தில் பேசலாம்; பேச வேண்டும். இது வெளிப்

படை. பார்வைக்குத் தோன்றுவதைப்போல் இந்த விதி அநுஷ்டானத்தில் அவ்வளவு சுலபம் அல்ல. ஆனால் உண்மையான விவாதத்துக்கு இது அத்தியாவசியம். ஒருவர் பேசிக்கொண்டிருக்கும்போது மற்றவர்கள் குறுக்கிட விரும்புகின்றனர். இடைமறித்துக் கேள்விகள் கேட்கின்றனர். சட்டசபைகளில் ஒரு மெம்பர் பேசிக்கொண்டிருக்கையில் வேறு எந்த மெம்பரும் எழுந்து குறுக்கிடக்கூடாது என்பது பொதுவான விதி. பேசுபவர் மீண்டும் தம் ஆசனத்தில் அமர்ந்து பேச விரும்புபவருக்கு இடம் அளிக்கும் சந்தர்ப்பங்கள் தவிர, இதர சமயங்களில் மேற்படி விதியை அநுஷ்டிக்க வேண்டும் என்பது கருத்து. சில சமயங்களில் மரியாதையை ஒட்டி இங்ஙனம் செய்வது உண்டு. சூடான விவாதத்தில் ஈடுபட்டிருக்கையில் அநேகமாக மெம்பர்கள், 'முடியாது; நான் இடம் கொடுக்கப்போவதில்லை' என்று சொல்லுகிறார்கள். சொந்தப் பொறுப்பில் முகாந்தரம் கூறுவதற்காக ஒரு மெம்பர் இன்னொரு மெம்பர் பேசுகையில் குறுக்கிடலாம்.

இவை யெல்லாம் சாதாரணமான குறுக்கீடுகள். சாதுரியமான குறிப்புகள், பொருத்தமான கேள்விகள், இவைகளை யெல்லாம் சபை நியதிகளுக்கு ஏற்ற பாஷையில் சுருக்கமாகக் கேட்கலாம். ஆனால் சபாநாயகர் இதில் தலையிடாமல் இருக்க வேண்டும்.

சட்டசபை விவாதங்களில் ஈடுபடும் மெம்பர்கள் சபை விதிகளுக்குப் பொருத்தமான பாஷையையே உபயோகிக்க வேண்டும். அதற்கு விரோதமாக எதையும் உபயோகிக்கக் கூடாது.

விவாதங்கள் கண்ணியமான முறையில் நடக்க வேண்டும் என்பதே இதன் நோக்கம். சபையில் உபயோகிக்கத் தகாத வார்த்தைகள் எவை என்பதற்கு உதாரணம் கொடுப்பது சிரமம். இவற்றைத் தொகுத்துச் சேர்க்க முயற்சிகள் செய்யப்பட்டிருக்கின்றன. ஆனால் விரிவான ஜாபிதாவைத் தயாரிப்பது சாத்தியமில்லை. மரியாதையான சொற்களை உபயோகித்துப் பேச வேண்டும். மெம்பர்கள்மீது சொந்த ஹோதாவில் குறைபாடுகளைப் புகுத்திப் பேசக்கூடாது என்பதுதான் இதன் பொதுவான

நோக்கம். ஆனால் ஒரு மெம்பர் கீழ்த்தரமான பாஷையைப் பிரயோகிப்பாரானால் சபைத் தலைவர் சபையின் ஒழுங்கை எடுத்துக் காட்டி அம்மாதிரியான பதங்களை வாபஸ்பெறச் செய்து மன்னிப்புக் கோரச் செய்வார்.

சட்டசபை விவாதங்களில் ஈடுபடும் மெம்பர்கள் பரஸ்பரம் ஒருவரை ஒருவர் நோக்கிப் பேசாமல் சபைத் தலைவரை நோக்கிப் பேச வேண்டும் என்பது இன்னொரு விதி. மெம்பர்கள் ஒருவரை ஒருவர் நோக்கிப் பேச நேர்ந்தால் விரைவில் அவர்கள் தங்களுடைய நிதானத்தை இழந்து, வசை மொழியில் இறங்க நேரிடும். எனவே பேசும் மெம்பர்கள் சபைத் தலைவரை நோக்கியே பேச வேண்டும் என்ற விதி கண்டிப்பாக எல்லாப் பார்லிமென்டுகளிலும் அமுல் நடத்தப்படுகிறது. மெம்பர்கள் இன்னொரு மெம்பரைக் குறிப்பிட்டுப் பேசுகையில், 'கனம்' என்றோ 'மகா கனம்' என்றோ பெயருக்கு முன்னால் சேர்த்துக்கொண்டு பேச வேண்டும். இது முதல் விதியை அநுசரித்ததாகும். டிவிஷனையோ அல்லது தொகுதியைக் குறிப்பிட்டோ சொல்ல வேண்டுமே அன்றி பெயரைக் குறித்துச் சொல்லக் கூடாது.

சட்ட சபைகளில் செய்யும் பிரசங்கத்துக்குச் சாதாரணமாக நேரக் கட்டுப்பாடு உண்டு. விவாதங்கள் மந்தமாக இருக்காமலும் தொண தொணவென்று போகாமலும் இருப்பதற்காகவே இப்படி வைத்திருக்கிறார்கள். விசேஷமான சந்தர்ப்பங்களைத் தவிர இந்த விதியைச் சபைத் தலைவர் கண்டிப்பான முறையில் அமுல் நடத்துவார். நிதி மசோதாக்கள், சட்டங்கள் இவை போன்றவற்றிற்கு நேரக் கட்டுப்பாடு இல்லை. பொதுஜனங்கள் சிரத்தைகொள்ளக் கூடிய விஷயங்கள் அவை என்பதால்தான் அம்மாதிரி. இதனால் மெம்பர்கள் கால வரையறையின்றிப் பேசலாம் என்பது அர்த்தம் அல்ல. மெம்பர்கள் தங்கள் பேச்சை விஷயத்துக்குப் பொருத்தமாக இருக்கும்படி பேசவேண்டும். மற்ற மெம்பர்கள் தெரிவித்த வாதங்களைத் திருப்பிச் சொல்லாமல் இருக்க வேண்டும். இந்த விதிகளை அநுசரித்தே சட்டசபை விவாதங்கள் நடத்தப்படுகின்றன.

24-7-'41.

# இயற்கை அழகு

**என் அன்புள்ள**

**எ**னக்குப் பன்னிரண்டு வயது இருக்கும். அதாவது இப் போதைய உன்னைவிட நான்கு வயது நான் சின்னவனாக இருந்த போது—மூன்றாவது பாரத்தில் வாசித்துக்கொண் டிருந்தேன். அப்போது, **'வீட்டின் மாலை நேரங்கள்;** என்ற ஆங்கிலப் புத்த கத்தைப் படித்தேன். அது எனக்குப் பரிசாக வந்த புத்தகம் என்று நினைக்கிறேன். இங்கிலாந்தில் ஜனங்கள் மாலை வேளைகளில் வீட்டில் இருக்கும்போது எப்படிப் பொழுதைப் போக்குகிறார் கள் என்பதைப்பற்றிய விவரம் கதைகளின் ரூபமாக அப்புத்த கத்தில் கொடுக்கப்பட் டிருந்தது.

அக் கதைத் தொகுதியில் முதலில் உள்ளது, 'கண்களும் கண்கள் இன்மையும்' என்பதாகும். முதலில் இந்தத் தலைப்பின் அர்த்தம் இன்னதென்று எனக்குப் புரியவில்லை. கதையைப் படித்த பின்னர் விஷயம் விளங்குகிறது. கண்களுள்ள ஒரு வர் வயல் பக்கமாகப் போய்ச் சுற்றி அங்கே நடக்கும் விஷ யங்களைப் பதிவு செய்துகொள்ளுகிறார். அந்த அநுபவமே அக் கதை. நமது கண் பார்வையை எப்படி உபயோகிப்பது என் பதை உணர்ந்து அதைச் சரியாகப் பயன் படுத்திக்கொண்டால் அதனால் ஒப்பற்ற லாபம் உண்டு.

வாழ்க்கையில் நாம் பல ஜோலிகளைக் கவனிக்கும்படி இருப் பதால் விஷயங்களை உற்று நோக்குவதில்லை. சில சமயங்களில் கவனிக்காமலேயே விட்டும்விடுகிறோம். எப்போதும், நம் பக்கத் திலுள்ள விஷயங்களைக் கவனித்துக்கொண்டு பொழுதைப் போக்க வேண்டுமென்று நான் சொல்லவில்லை. இது காலத்தை

வீணுக்குவ தாகும். அப்படிச் செய்தால் நாம் சலித்தும் போய் விடுவோம். வேறு வேலைகளையும் நாம் கவனிக்கவேண்டி இருக்கிறது. ஆனால் விசேஷமாகவாவது நாம் அருகேயுள்ள மனித சிருஷ்டி, இயற்கை முதலியவற்றை நன்கு கூர்ந்து கவனிக்க வேண்டும். ஒரு மனிதனை நன்கு அறிவதே மனிதனுக்குள்ள லக்ஷணம் என்பது ஒரு கவிஞனின் வாக்கு.

,, ஆனால் ஒருவர் இன்னொருவரைப்பற்றி ஆராய்ந்து ஆராய்ச்சி செய்வது குறித்து இக் கடிதத்தை நான் எழுதவில்லை.

இயற்கை, அவற்றின் அற்புதம் இவைபற்றி எழுதுகிறேன். இவைபற்றி யெல்லாம் கூறும் ஓர் தனிப் புத்தகமே இருக்கிறது. ஆனால் நேரில் கண்ணால் பார்ப்பதற்குச் சமமாக அவைகளை யெல்லாம் சொல்ல முடியாது.

ஆகாயத்தை எடுத்துக்கொள். அநேக விதங்களில் அற்புதமானது. அதைப் பார்த்து மகிழ்வதிலும் சரி, இரவில் களங்கமில்லாத வானத்தில் நட்சத்திரங்கள் பிரகாசிப்பதைக் கண்டு ஆனந்திப்பதிலும் சரி, நமக்கு அலாதியான ஓர் அநுபவ உணர்ச்சி ஏற்படுகிறது. கிரகங்களைக் காட்டிலும் நட்சத்திரங்கள் மிகவும் பிரகாசமானவை. வான சாஸ்திரிகள் நட்சத்திரங்களின் தூரம் முதலியவைபற்றிச் சொல்லுவார்கள்.

வானத்தின் வனப்பு ஒருபுறம் இருக்க, அதனால் ஏற்படும் ஆச்சரிய உணர்ச்சி மிக்க விசேஷம். கர்த்தாவின் பெருமையும் தன்னடக்கமும் இதைப் பார்ப்பதால் நமக்குத் தெரிகிறது.

வானத்துக்கு அடுத்தபடியாக உள்ளது கடல்கள். கடல் அலைகள் பொங்கி எழுந்து, மோதி, அடிப்பதைக் காண்பது தனியான உணர்ச்சி தரக்கூடியதாகும். பூமியைவிடக் கடல் பகுதியே அதிகம். கடலுக்குள் எத்தனை உலகங்கள்! என்ன அழகான மீன்கள்! என்ன என்ன பவளங்கள்! ஆகா! பெரிய மிருகங்கள்! எப்படி இவை உயிர் வாழ்கின்றன? கடல்களும், அவற்றுள் அடங்கியிருக்கும் விசித்திரங்களும் தனியான பயிற்சி விஷயங்களாகும். கடல் வாழ்வைப்பற்றி ஓரளவு உணரச்

சென்னையிலுள்ள, 'கடல் ஜந்துக்கள் காட்சிச்சாலை' யைப் பார்த்தால் தெரியும்.

அடுத்த படியாக மலைகள். தூரத்திலிருந்து ஹிமயமலையை நாம் கண்டோம். அங்கே ஒரே பனி. பனியால் மூடியிருக்கும் அம்மலையைச் சூரிய வெளிச்சத்தில் பார்ப்பதற்கு எவ்வளவு நேர்த்தியாக இருக்கிறது! டார்ஜிலிங் என்ற இடத்தில் சூரியோதயம் வெகு அற்புதம் என்று சொல்லக் கேட்டிருக்கிறேன். நாம் அங்கே போய்ப் பார்க்க வேண்டும். தெய்வ சங்கல்பம் எப்படியோ? மலையிலுள்ள காடுகள், ஓடைகள், காற்று இவைகள் ஒருபுறம். ஏன்? குற்றாலம் சிறிய இடந்தானே? குற்றாலக் காட்சி உள்ளத்தைக் கொள்ளை கொள்ளுகிறது. பகவத் கிருபையால் கூடிய சீக்கிரம் அம்மாவுடன் நான் அங்கே போக உத்தேசித்திருக்கிறேன். நீயும் அங்கே வந்து கொஞ்ச நாள் இருக்க வேண்டும்.

அடுத்தபடியாக வனங்கள் இருக்கின்றன. அங்கே ஓங்கும் மரங்கள், செடிகள், புஷ்பங்கள் எல்லாம் நிறைந்து குளு குளுவென் றிருக்கிறது.

ரிஷிகள் கடவுளை நாடித் தவம் புரிவதற்கு வனங்களைத் தேர்ந்துகொண்டது சரி என்றே தோன்றுகிறது. காளிதாசன் வரைந்த குமார ஸம்பவத்தில் வனங்களைப்பற்றிய வர்ணனை விசேஷம் என்று சொல்லக் கேட்டிருக்கிறேன். நாம் இருவரும் ஒன்றுசேர்ந்து அதைப் படிக்க வேண்டும்.

சூரியோதயம், அஸ்தமனம் இரண்டும் தினசரி சம்பவிக்கின்றன. வான சாஸ்திரப்படி சூரியன் உதிப்பதும் இல்லை; அஸ்தமிப்பதும் இல்லை. உலகந்தான் சுற்றுகிறது. ஆனால், நமது திருஷ்டியில படும் மேற்படி இரண்டு காட்சிகளும் வெகு அழகாக இருக்கின்றன.

கூடுமானவரை சூரியோதயம், அஸ்தமனம் ஆகிய இரு காட்சிகளையும் அநேகம் தடவை பார்க்க வேண்டும். இதுவே ஞான வளர்ச்சிக்குச் சாதகமாக இருக்கும். சந்திரோதயம் இருக்கிறது,

# இயற்கை அழகு

சந்திரிகையின் அழகை வருணிக்காத கவியே இல்லை. ஆம், அது உண்மைதான். சந்திரன், அதன் கிரணங்கள் இரண்டும் அழகு நிறைந்தவை.

உலகத்தில் முக்கியமாக நம் நாட்டில் எவ்வளவோ நதிகள் இருக்கின்றன. கங்கை, யமுனை சங்கமம் முதலியன தேவர்களும் கண்டு களிக்கக்கூடிய இடம். நீ பிறப்பதற்கு முன் நானும் உன் தாயாரும் அங்கே நீராடியிருக்கிறோம். உன்னோடும் ஒரு தடவை அங்கே போக வேண்டும். கங்கை, பிரம்மபுத்திரா ஆகிய நதிகள் புனிதமானவை. இவைபோல் உலகில் பல நதிகள் உண்டு.

இயற்கைச் சிருஷ்டிகளான இவை ஆச்சரியமானவை. என்றும் மனிதனும் உலகமும் நிலைப்பதற்கு இவைகள் அத்தியாவசியம். சூரியன், சந்திரன், மலைகள், வனங்கள், ஆறுகள் இவையின்றி உலகத்தில் உயிர்வாழ முடியாது. எனவே இயற்கையில் அழகும், அத்துடன் உபயோகமும் கலந்திருக்கின்றன.

25-7-'41.

# கோபம்

**என் அன்புள்ள**

**லக்ஷ்மிக்கு,**

'சுயமரியாதை, சுய உணர்வு, தன்னடக்கம் இவை மூன்றுமே வாழ்க்கையின் உன்னத நிலையை அடைவதற்கான மார்க்கம்' என்று மேனாட்டுக் கவி டென்னிஸன் குறிப்பிட்ட வார்த்தைகளைச் சமீபத்தில் உனக்கு எழுதியதாக எண்ணுகிறேன். இந்த மூன்றில் தன்னடக்கம் என்பது மற்ற இரண்டுக்கும் அஸ்திவாரம்போல். காகிதத்தில் எழுதிப் பார்த்தால் இது வெகு சுலபமாகத் தோன்றுகிறது. அநுஷ்டானத்தில் இது மிகவும் கஷ்டமானது. தன்னடக்கத்தை அநுஷ்டித்து ஒரு காரியத்தை வெற்றிகரமாகச் செய்யும் பட்சத்தில் அதனால் உனக்கு மிகுந்த திருப்தி ஏற்படுகிறது.

இந்த அம்சத்தை நான் ஒரு நாள் ஒரு சின்ன விஷயத்தில்—ஆனால் மிகவும் முக்கியமான கட்டத்தில்—உணர்ந்தேன். தினசரி க்ஷவரம் செய்ய ஒரு நாவிதன் இங்கே வருகிறான். அவன் நற்குணங்கள் பொருந்தியவன். தன்னுடைய வேலையில் அவன் மிகவும் கெட்டிக்காரன் என்று சொல்ல முடியாது. ஆனால் நல்ல ஜாக்கிரதையோடு நடப்பவன். நோயாளிகளுக்கெல்லாம் க்ஷவரம் செய்வான். க்ஷவரம் செய்துகொள்ளுகையில் நான் என் முகத்தைச் சௌகரியம் இல்லாத நிலைமையில் உயர்த்த வேண்டும் என்கிறான். நான் குனிந்தாலும் அவன் என் முகவாயைத் தூக்கி மெதுவாக உயர்த்துகிறான். இதனால் எனக்கு அன்று கோபம் வந்தது. ஆனால் அடக்கிக்கொண்டு விட்டேன். இதில் எனக்குச் சந்தோஷம்.

# கோபம்

கோபம் அடைவதால் ஏற்படக்கூடிய பலாபலன்களை என் வாழ்நாளில் நான் உணர்ந்திருக்கிறேன். கோப உணர்ச்சியோடு நான் போராடியிருக்கிறேன். சில சமயங்களில் வெற்றி அடைந்திருக்கிறேன். ஆனால் நான் விரும்பும் அளவுக்கு வெற்றி அநேகமாகக் கிடைப்பதில்லை. ஒருவருக்குக் கோபம் வந்தால் இரு சாராருக்கு மட்டுந்தான் அதிகக் கஷ்ட நஷ்டம். இதை என் அநுபவத்திலிருந்து சொல்லுகிறேன்: அதாவது கோபித்துக் கொள்பவருக்கும், அவரை அண்டி நிற்பவருக்குமே நஷ்டம். மற்றவர்கள் இது கண்டு அநுதாபப்படலாம்; அல்லது வெறுக்கவும் கூடும்.

எந்த விதத்திலும் கோபித்துக்கொள்வது என்பது நல்லதல்ல. கோபம், குறிப்பிட்ட அந்தச் சமயத்தில் ஏதோ சௌகரியமாக இருப்பதுபோல் தோன்றும். அவ்வளவுதான். ஆனால் இதனால் ஏற்படக்கூடிய விளைவுகளோ வெகு மோசமானவை. தேக ஆரோக்கியத்துக்குக்கூட இதனால் கெடுதி. ஒருவர் வெகு உணர்ச்சியுள்ளவராக இருந்தால் கோபச் சொற்களால் நாள் கணக்கில்கூட வேதனைப்படும்படி இருக்கும். கோபத்தில் நிதானம் போய்விடுகிறது. பிறகு அவமானப்படும்படியான பேச்சுகளிலும் செயல்களிலும் ஈடுபட நேருகிறது. சுந்தர காண்டத்திலே ஸ்ரீ ஹநுமான் கோபக்காரரின் சொல், செயல் இவை இரண்டையும் வெகு பொருத்தமாக விளக்குகிறார். அந்த ஸ்லோகங்களை உனக்கு வாசித்துக் காட்டி ஒரு நாள் விளக்கமாகச் சொல்லு

வெகு கடினமான, எரிச்சல் உண்டாகும்படியான சந்தர்ப்பங்களிலும் நிதானம் இழக்காமல் இருப்பின் அத் தன்மையை மதிப்பிட முடியாத ஓர் வரம் என்றுதான் சொல்ல வேண்டும். இது வெகு கஷ்டமானதுதான். ஆனால் நமது கோபத்தைச் சொல்லிலோ செயலிலோ காட்டாமலாவது இருக்கலாம்.

இதற்காகச் சில அநுபவ பூர்வமான காரியங்கள் இருக்கின்றன. கோபம் வரும்போது, பேசவோ ஏதாவது செய்யவோ

தோன்றினால் ஒரு முறைக்குப் பத்து முறையாக யோசனை செய்ய வேண்டும். சிறிது நேரம் மௌனமாக இருக்க வேண்டும். இருக்கும் இடத்தைவிட்டு வெளியே போய்விடலாம். வேறு ஏதாவது ஒன்றில் யோசனையைச் செலுத்தலாம். இவையெல்லாம் தாறைகச் செய்துகொள்ளும் வெறும் உபாயங்கள். ஆனால் உண்மையான பரிகாரம் வேறு. கோபம் வந்து, நிதானம் இழப்பதற்கான காரணங்கள் எவை என்பதை அமைதியாக ஆலோசனை செய்து, பிறகு நிவர்த்தித்துக்கொள்வதே முறை.

நாம் கோபத்தில் இருக்கையில் நம் செயலே சரிபோலவும் மற்றவர்கள் செயலெல்லாம் தவறுபோலவும் கருதுகிறோம். அநேகமாக இது நேர் விரோதமாகவும் இருக்கும். நாமே தப்பாக நடந்திருக்கலாம்; அல்லது பிறரும் தப்பாக நடந்திருக்கக் கூடும். நாமே தவறாக நடந்திருப்பினும் நாம் கோபமடைந்து, எதிராளி நம்மை ஏதோ அவமானப்படுத்திவிட்டதுபோல் முற்கூட்டி முடிவு செய்துகொண்டு விடுகிறோம். இது நியாய மில்லாத எண்ணம்.

நமது கோபத்தாலும் அதை வெளிக் காட்டுவதாலும் எதிராளியைச் சரிப்படுத்த முடியும் என்று நினைக்கிறோம். எப்போதும் இது பிசகு. பிறர் சரியாக இருக்கையில் அவரைக் கேவலமாக நடத்தினால் அவருக்குத் துக்கமே ஏற்படும். அவர் நல்லவராக இருந்தால் நீங்கள் சொன்னதை மறந்து மன்னித்து விடலாம். அப்படி அல்லாமல் வேறுதினுசாக இருந்தால் அவர் வெகு மோசமாக நடக்கக்கூடும். குழந்தைகளைக்கூட—மிகவும் கெடுதலாக இருந்தாலன்றி—தண்டிக்கக் கூடாது. அப்படியே தண்டித்தாலும் கோப உணர்ச்சியோடு எதையும் செய்யக்கூடாது. நமது வேலைக்காரர்கள் விஷயத்தில் நாம் அடிக்கடி முரட்டுத் தனமாக நடந்துகொள்ளுகிறோம். இது கூடாது. இதனால் யாருக்கும் லாபமில்லை.

இதெல்லாம் தனிப்பட்டவர்களைப் பொறுத்த காரியம். கோபத்தை அடக்கிக்கொள்ளத்தான் வேண்டும். நாட்டுக்கோ

நாட்டினருக்கோ அவமானம் ஏற்படுவது இன்னொரு விஷயம். இதனால் மன வருத்தம் ஏற்படலாம். இந்த இடத்தில்கூடக் கோபத்தால் பயன் ஒன்றும் இல்லை.

1919-ல் அமிர்த சரஸில் நடந்த காங்கிரஸ் எனக்கு ஞாபகம் வருகிறது. விஷயாலோசனைக் கமிட்டி கூடியபோது சில ஐரோப்பியர்கள் நம்மவர்களை இரக்கமில்லாமல் நடத்தியதாக நம்து ஜனங்கள் சில ஐரோப்பியரைத் தாக்கியது சரிதான் என்று நான் கூறினேன். மகாத்மாஜி அப்போது, 'இந்த அட்டூழியங்களைக் கேட்டு ஸ்ரீ சத்தியமூர்த்திக்கு ஆத்திரம் வருவதுபோல் எனக்குந்தான் கோபம் வருகிறது. ஆனால் நமது கோபத்தால், எதிரி இன்னும் அட்டூழியம் புரிய விடக்கூடாது. கோபத்தை அடக்கி எதிர்காலத்தில் இதுபோன்ற அட்டூழியங்கள் நடவாமல் செய்வதற்கான செயல்களில் அதைத் திருப்ப வேண்டும்' என்றார். ஆகவே எந்த விதத்திலும் தன்னடக்கத்தால் சுய உணர்வையும் சுய மதிப்பையும் பெற வழி உண்டாகும்.

இந்த அருங் குணத்தை ஆண்டவன் உனக்கு அருள்வாராக!

26-7-'41

# சுய மரியாதை

**என் அன்புள்ள**

**லக்ஷ்மிக்கு,**

**த**ன்னடக்கம் என்பதுபற்றி என் நேற்றைக் கடிதத்தில் எழுதி யிருக்கிறேன். சுய மரியாதையும் சுய உணர்வும் தன் னடக்கத்தையே அஸ்திவாரமாகக் கொண்டவை என்பதையும் அதில் தெரிவித்திருந்தேன். சுய மரியாதைக்கு விரோதமாக யாரும் எதையும் செய்ய முடியாது.

சிலர் சில காரியங்களைச் செய்யத் தயாரில்லாத நிலைமையே சுய மரியாதையின் முதல் சின்னம் எனலாம். அக் காரியங்களைச் செய்வது தம்முடைய சுய மதிப்புக்குப் பங்கம் என்று அவர்கள் எண்ணுவதே அதற்குக் காரணம். மற்றவர்கள் கேவலமென்றோ தவறென்றோ தடுத்து ஒதுக்கியிருப்பது காரணம் அல்ல.

வெளியில் கண்டு பிடிக்க முடியாததாயினும் சிலர் சொந்த மாகவே சில காரியங்களைத் தவறென்றோ அகௌரவம் என்றோ எண்ணி அவற்றைச் செய்யாதிருக்கக் கூடும். இதில்தான் சுய மதிப்பு என்பது முன்னின்று வேலை செய்கிறது. எந்தக் காரியம் இழிவு என்பது அவரவர்கள் சுய மரியாதைபற்றி அவரவர் கொண்டுள்ள அபிப்பிராயத்தைப் பொறுத்திருக்கிறது. இது கல்வி, பண்பாடு முதலியவற்றை அநுசரித்ததாகும்.

ஆகவே சரியான முறைப்படியுள்ள நல்ல கல்வி ஞானம் இருப்பது அவசியம். நல்ல இலக்கியங்களை வாசிக்க வேண்டும். நல்ல சிநேகிதர்கள் இருப்பது அவசியம். பிரபலஸ்தர்களின் நடத்தையையும் குணத்தையும் அறிய வேண்டும். இதன் மூலம் சுய மதிப்பு உயரும்; சரியாகவும் கண்ணியமாகவும் நடக்கவும் வழி உண்டாகும்.

# சுய மரியாதை

சுய மரியாதை உள்ளவராக இருந்தால் அவர் எங்கேயும் நல்ல காரியங்களுக்கு அசைக்க முடியாத பலமாக இருப்பார். அவரது சொல், செயல், நடத்தை ஆகிய அனைத்தும் அவருடன் பழகுவோரைத் திருப்தி செய்யும். தங்களிடம் விசேஷமான நடத்தை படிந்திருக்கிறது என்பதான எண்ணமே சுய மதிப்பு உள்ளவர்களுக்கு இராது என்பதுதான் தனி விசேஷம். அவர் சாதாரணமாக இயற்கையாக நடக்கிறார். அவரது சுபாவம் சுய மதிப்பு உள்ளதாகும். எனவே அதற்கு ஏற்றவாறு நடக்கிறார்.

பிறர் சொல்வதற்காக இல்லாமல் தானே சுய மதிப்பைப் பிரதானமாக எண்ணி நடப்பது என்பது மிகவும் விசேஷமான தாகும். தானாகவே அறிந்து நடப்பது என்பதால் அக் குணம் எப்போதும் நிலையாக இருக்கும். இரண்டாவதாக இதற்கு வெளியே யிருந்து ஆதாரம் வேண்டும் என்பதும் இல்லை. நீதான் அதற்கு ஆதாரம். ஆங்கிலத்தில் சொல்லுவதுபோல, 'அது செய்யப்படுவதில்லை' ஆகவே நாமெல்லோரும் சுய மதிப்பைப் பெருக்கிக்கொள்ள வேண்டும்.

தன்னடக்கம், சுய மதிப்பு இவை ஏற்பட்டுப்போனால் உன்னை நீயே கண்ணியமாக எண்ணிக்கொள்ள இடம் ஏற்படும். மற்றவர்களின் அபிப்பிராயத்தைவிட உன்னுடைய அபிப்பிராயமே முக்கியமாகும். நீ தைரியமாகவும் சத்தியத்தோடும் இருப்பதாக எண்ணம் உதிக்குமானால் உன்னையே கண்ணியமாகக் கருதும் மனோபாவமும் தானே ஏற்படும். எதுவும் உன்னைத் தடுக்க முடியாது. உன்னைப்பற்றி உனக்கு நல்ல அபிப்பிராயம் போய்விட்டால் வேறு எதுவும் அதற்கு ஈடு செய்ய முடியாது.

தன் மதிப்பிற்குப் பிறகுதான் சுய உணர்வு ஏற்படுகிறது.

'தான்' என்பது என்ன? 'நீ' என்பது யார்? அதன் என்ன? இவையெல்லாம் முக்கியமான பிரச்னைகள். நமது களும் அவதார புருஷர்களும் இவற்றிற்குப் பதில் தெரிவித்திருக் கிறார்கள். நாம் என்பது உடல் அல்ல; புலன்கள் அல்ல; மனமோ, புத்தியோ அல்ல; எல்லாவற்றிற்கும் மேலானது.

# அருமைப் புதல்விக்கு

'தத்வமஸி (तत्वमसि)' என்பது அத்வைதக் கோட்பாடு. நீ சின்னப் பெண். நான் தெரிந்துகொண்ட அளவில்கூட உனக்கு இவைபற்றியெல்லாம் எழுதுவதற்கில்லை. ஆனால் சுய உணர்வு இருக்க வேண்டியதன் அவசியத்தை மட்டும் நீ அறிந்துகொள்ள வேண்டும்.

நீ உன்னைப்பற்றி முடிந்தவரையில் ஆராய்ந்து பார்த்துக் கொள்ள வேண்டும். இதன் மூலம் கிட்டும் சுய உணர்வு, மக்கள் உன்னத லக்ஷ்யத்தை அடைய உதவி செய்வதாக இருக்கும். தன்னடக்கம், சுய மரியாதை, சுய உணர்வு இவையெல்லாம் வெகு சாதாரணமான முடிவுபோலத் தோன்றும். மனித வர்க்கத்தின் முன்னேற்றத்திற்கான முறையிலேயே அம்மூன்று குணங்களைப்பற்றியும் கவி குறிப்பிட்டிருக்கிறார். அக்குணங்களை உனக்கும் பகவான் கொடுப்பாராக.

27-7-'41.

# புத்தகம் படித்தல்

என் அன்புள்ள

லக்ஷ்மிக்கு,

புத்தகங்கள் படிப்பது குறித்து ஏதாவது எழுதும்படி நீ என்னிடம் சொன்னுயல்லவா? இன்று அதுபற்றி எழுதுகிறேன். உனக்குப் புத்தகங்கள் படிப்பதில் மிகவும் ஆசை என்று எனக்குத் தெரியும். இது எனக்கும் உண்டு. சென்ற சில மாதங்களாக எனக்கு அவகாசம் இருந்தது. எனவே கொஞ்சம் வாசித்தேன். அதனுல் எனக்குச் சந்தோஷமே. புத்தகங்களைப்போல் உற்ற தோழன் வேறு இல்லை. இஷ்டம்போல் படிக்கலாம்; இல்லாவிட்டால் சும்மா இருக்கலாம்.

படிக்கும்படி, நன்ருக அச்சிட்ட புத்தகங்கள் விலை அதிகம். சென்னைபோன்ற இடங்களில் தற்கால முறையில் புத்தகசாலைகள் ஏற்பட்டுள்ளன. குறைவான மாதச் சந்தாவில் அநேகமாக ஒவ்வொரு விஷயத்தைப்பற்றியும் புத்தகங்கள் படிப்பதற்குக் கிடைக்கின்றன. சென்னைச் சர்வ கலாசாலைப் புத்தகசாலை இந்தியாவில் சிறந்த புத்தகசாலைகளில் ஒன்ருகும். நீ இதில் சேரலாம். நான் அதில் ஓர் அங்கத்தினர். என் மூலமாக நீ புத்தகங்கள் பெறலாம். சென்னை இலக்கிய சங்கத்திலும் நல்ல புத்தகங்கள் இருக்கின்றன. இரண்டு புத்தகசாலைகளிலிருந்தும் புத்தகங்கள் பெறலாம். கானிமாரா புத்தகசாலை வேறு இருக்கிறது. வேண்டிய விஷயங்களைப் போய்ப் பார்த்துத் தெரிந்து கொள்ள இது உபயோகமானது. அரசியல், பொருளாதாரம், சரித்திரம் முதலியவற்றைப்பற்றிய புத்தகங்களெல்லாம் சென்னைச் சட்டசபைப் புத்தகசாலையில் இருக்கின்றன. சில அங்கத்தினர்கள் தான் இதைப் பயன்படுத்திக்கொள்வதாகத் தெரிகிறது. நீபந்

தளைகளின்மீது இதையும் பொதுமக்கள் உபயோகித்துக் கொள்ளும்படி செய்யலாம்.

புத்தகத்தில் எவ்வளவோ இருக்கின்றன. நல்ல புத்தகங்களைத் தேர்ந்தெடுப்பது முக்கியமாகும். பத்திரிகைகளில் வெளிவரும் விமரிசனங்கள் காரணமாக நல்ல புத்தகங்களைத் தேர்ந்தெடுப்பது சுலபம்.

அச்சுக் கலை சமீபமாக ஏற்பட்டது. அம்முறை வருவதற்கு முன் எழுத்துப் பிரதிகளே இருந்தன. இன்றும் அவை மாதிரிக்குக் கிடைக்கும். பனை ஓலையில் உள்ள சுவடிகள் இருக்கின்றன. எழுத்தாணி கொண்டு அவற்றை எழுதியிருக்கின்றனர். அவைகளை இன்றுகூட நாம் காணலாம்.

எழுத்துப் பிரதியும் இல்லாத காலம் உண்டு. அக்காலத்தில் தங்கள் ஞாபகத்தைக்கொண்டே விஷயங்களைத் தெரிவித்து, அறிவைப் பெருக்கி வந்தனர். நமது வேதங்களெல்லாம் கர்ன பரம்பரையாகவே வந்திருக்கின்றன. ஞாபகத்திலிருந்தே பெருவாரியான விஷயங்கள் பிற்காலத் தலைமுறைக்குக் கிடைத்திருக்கின்றன. இலக்கணம், உச்சரிப்பு முதலியவற்றிற்குக்கூட வாய்மொழியாக விதிகள் அமுல் செய்யப்பட்டன. இன்றுகூட வேதங்களை மனப் பாடத்திலிருந்து சொல்லக்கூடிய பண்டிதர்கள் இருக்கிறார்கள். வேதங்களுக்கு, 'சுருதி' என்றும் பெயர்.

இதிலிருந்து நாம் கற்க வேண்டிய பாடம் ஒன்று உண்டு. எந்த அளவுக்குச் சாதகப்படுத்திக்கொள்ள வேண்டுமோ, அந்த அளவுக்கு ஞாபக சக்தியைத் தயார்ப்படுத்திக்கொள்ளும் வழக்கம் இப்போது இல்லாமல் இருக்கிறது. ஞாபக சக்தி மிகவும் உயர்ந்த புத்தித் திறம். இதை நீ பழக்கப்படுத்திக்கொள்ள வேண்டும். பரீட்சையில் பெருமையோடு தேர்ச்சி பெறுவதற்கானாலும் சரி; வாழ்க்கையை வெற்றியாகவும் சந்தோஷமாகவும் நடத்துவதற்கானாலும் சரி; நல்ல ஞாபக சக்தி இருப்பது உபயோகமானது. இந்தத் திறமையைத் தேடிக்கொள்ளத் தமிழ்,

ஆங்கிலம், ஸம்ஸ்கிருதம் இவற்றிலுள்ள நல்ல கவிதைகளைக் கற்க வேண்டும்.

புத்தகங்கள் படிப்பதற்கு அநேகம் வழிகள் உண்டு. இது, புத்தகங்கள், அவற்றைப் படிப்பவர் இருவரையும் பொறுத்த காரியம். தமிழ், ஸம்ஸ்கிருதம், கிரேக்க பாஷை, லத்தீன், ஆங்கிலம் இவற்றை அக்கறையோடு படித்து உணர வேண்டும். என் அநுபவத்திலிருந்து நான் உனக்கு எழுத முடியும். வால்மீகி ராமாயணத்தை நான் திரும்பத் திரும்பப் பல தடவை படித்திருக்கிறேன். இப்போது முப்பதாவது தடவையாகச் சுந்தர காண்டத்தைப் படிக்கிறேன். இருப்பினும் எனக்கு அலுக்கவில்லை. நிலையான சந்தோஷத்தைத் தரும் அம்சமே நூல்களிலுள்ள விசேஷம்.

ஷேக்ஸ்பியர், கம்பராமாயணம், துளஸிதாஸ் ராமாயணம் முதலிய நூல்களையும் குறிப்பிடலாம். எப்படி இருப்பினும் சில நல்ல நூல்களை நீ தேர்ந்தெடுத்துக்கொண்டு அவற்றை அடிக்கடி முடிந்தவரையில் படிக்க வேண்டும்.

இந்த இலக்கியங்களைப் படிக்கும்போது வியாக்கியானங்களைப் படிக்காமல் இருந்துவிடலாம். சில வியாக்கியானங்கள் வெகு நன்றாக இருக்கின்றன என்றாலும் மூலத்தின் அழகுடன் அவற்றை ஒப்பிட முடியாது.

இந்த இலக்கியங்களிலே கஷ்டமான பகுதி ஏதாவது வருமாயின், அதை உணரப் பன்முறை படிப்பதே மேல். அப்படியும் புரியவில்லை யானால், அப்போது நிறுத்திவிட்டுத் திரும்பவும் பார். கூடிய விரைவில் விஷயம் விளங்க, நல்ல அகராதியை மட்டும் நீ வைத்திருக்க வேண்டும்.

28-7-'41.

## 2

ஞாபக சக்தியைப் பெருக்கிக்கொள்வதற்குக் கவிதைகளை மனப் பாடம் செய்வது சிறந்த மார்க்கம் என்று என்னுடைய

# அருமைப் புதல்விக்கு

சென்ற கடிதத்தில் உனக்கு எழுதினேன். ஞாபக சக்தியில் வைத்துக்கொள்ளத் தக்க உயர்வான வசனப் பகுதிகளும் உண்டு. டெமாஸ்தனிஸ், ஸிஸிரோ, எட்மண்ட் பர்க், ஷெரிடான் முதலியவர்கள் வரைந்தவற்றை நினைவில் இருத்திக்கொள்ளலாம். சார்லஸ் லாம்ப், ஹாஸ்லிட், டிக்வின்ஸி, ராபர்ட் லூயி ஸ்டீவன்ஸன் முதலியவர்களது நடை உன் ஞாபகத்தை விட்டு அகலாது இருக்கக் கூடியது. காதம்பரி என்ற வசன நூல் மிக்க அழகான நடையுடன் கூடியது.

ஒரு பாஷையை அறிய வேண்டுமானால், அதிலுள்ள சிறந்த இலக்கியங்களைப் படிக்க வேண்டும். இதுவே அநுபவத்தில் நான் கண்டுகொண்டது. இலக்கணத்தின் அடிப்படைகளை அறிய வேண்டியது அவசியந்தான். ஆனால் இலக்கணம் என்பது பெயரளவுக்குத்தான். இலக்கியமே பாஷையின் ஜீவன். ஆகவே புத்தகங்களை நீ படிப்பது கண்டு எனக்குச் சந்தோஷம். ஆனால், நீ நல்லதாக இருப்பவற்றைத் தேர்ந்துகொள்ளவேண்டும்.

நாவல் என்பது இலக்கியத்தில் சாதாரணமானதொரு அம்சம். பூர்வ காலத்தைச் சேர்ந்த ஸ்காட், டிக்கன்ஸ், தாக்கரே முதலியவர்களது நாவல்களும், பிற்காலம் வந்த மெரிடித், ஜார்ஜ் எலியட் முதலியவர்கள் எழுதிய நாவல்களும் உண்மையான இலக்கியங்களாகும். தற்கால நாவல்களில் எனக்குப் பிரியம் இல்லை. ஆனால், இதிலும் விலக்கு உண்டு. அவற்றிலுள்ள ஆங்கில நடையும் கருத்தும் விசேஷமாக இல்லை. துப்பறியும் நாவலைக் கண்டால் எனக்குப் பிடிக்கவில்லை; ஸர் ஆர்தர் கானன்டாயில் எழுதிய ஷெர்லக்ஹோம்ஸ் ஒன்று மட்டுமே இதில் விலக்கு.

யாத்திரை, தீவிரச் செயல்களில் அநுபவம் இவற்றைப்பற்றியுள்ள புத்தகங்களைப் படிக்க வேண்டும். யாத்திரை சென்ற அநுபவங்களைப் புத்தகமாக எழுதித் தெரிவிக்கும் ஆசிரியர்கள் இருக்கின்றனர். சீனதேச யாத்திரிகர்களான பாஹியான், ஹின்த் ஸாங் இருவரும் இந்தியாவுக்கு வந்தார்கள். பின்னர் போர்த்து

கீசியர்கள், டச்சுக்காரர்கள், ஆங்கிலேயர்கள் முதலியவர்கள் வந்தார்கள். அவர்களெல்லாம் தங்களது யாத்திரையைப்பற்றிப் புத்தகங்கள் எழுதியிருக்கின்றனர். நமக்கு அவை முதல்தர மான தகவல்களைத் தருகின்றன.

உன்போன்ற சிறு பிராயம் உள்ளவர்களுக்கு வீரச் செயல் கள், வேட்டை, மலைகள்மீதேறி ஆராய்ச்சிகள் செய்வதுபோன்ற விஷயங்கள்பற்றிப் புத்தகங்கள் இருக்கின்றன. புத்தகாசிரியர் கள் நல்ல எழுத்தாளர்களாகவும் விஷயம் அறிந்தவர்களாகவும் இருந்தால் அவர்களது புத்தகங்களால் இன்பம் ஏற்படுவதுடன் நாமும் அவர்களைப்போல் நடக்கவேண்டும் என்ற இச்சையும் பிறக்கும். நீ அத்தகைய புத்தகங்களைப் படிக்கவேண்டும் என்பது என் விருப்பம். சர்வகலாசாலைப் புத்தகசாலை நிர்வாகி யிடம் அப்புத்தகங்களுடைய ஜாபிதா கிடைக்கும்.

அந்நிய பாஷைகளில் புத்தகங்கள் இருக்கின்றன. அவற் றின் மொழிபெயர்ப்புகளையாவது படிப்பது அவசியம். 'டான் க்விக்ஸொட்' என்ற ஸ்பானியப் புத்தகம், ரஷ்ய பாஷையில் சிறந்த டால்ஸ்டாய் நாவல்கள், புகழ்பெற்ற பிரஞ்சுப் புத்த கங்கள் இவற்றின் மொழிபெயர்ப்புகளைப் படிக்க வேண்டும்.

படிப்பதற்குச் செயற்கையில் செய்துகொள்ளக் கூடிய உபா யங்கள் உண்டு. அவற்றை நீ பழகிக்கொள்ள வேண்டும். சரியான தோரணையில் புத்தகங்களை நீ படிக்க வேண்டும். உட் கார்ந்து படிப்பது விசேஷம். நாம் சில சமயங்களில் சோம் பேறித்தனமாக இருக்கும்படி நேருகிறது. அப்போது படுத்துக் கொண்டே வாசிக்கிறோம். அந்த மாதிரியெல்லாம் படிப்பது நல்லதல்ல; கண்ணுக்குக் கெடுதல். அப்படியே படிக்க வேண்டுமானால் வெளிச்சம் கிட்டும்படி நம்மைச் சரி செய்து கொள்ள வேண்டும். இரவில் நாம் அதிக வெளிச்சத்தைத் தரக் கூடிய மின்சார விளக்கு வெளிச்சத்தில் படிக்கிறோம். நான் அப்படிச் செய்கிறேன். நீ போதிய வெளிச்சத்தோடு படிக்க வேண்டும். அதிகமாகவும் வெளிச்சம் கூடாது.

# அருமைப் புதல்விக்கு

காகிதம், எழுத்து, புத்தகங்களின் பைண்டு இவையெல்லாம் சரிவர இருப்பது அவசியம். புத்தகங்கள் படிப்பதை ருசி பெறச் செய்வதற்கு அவை முக்கியம். சமீப காலம் வரையில் மலிவு என்பதற்காகக் கிரந்தம், தமிழ்ப் புத்தகங்கள் இவற்றை ஆபாசமான காகிதங்களில் அச்சிட்டு வந்தனர். அவற்றையெல்லாம் நீ பார்த்திருக்கிருயோ என்னவோ எனக்குத் தெரியாது. அவை விகாரமாகவும் பிடிக்காமலும் இருக்கின்றன. அப்படியே நீ அவற்றைப் படிப்பதானாலும் அவற்றின் தோற்றம், வாசனை இவை காரணமாக நீ தொடர்ச்சியாக அவற்றைப் படிக்க முடியாது. இப்போது ஸம்ஸ்கிருதம், தமிழ் இவற்றிலுள்ள புத்தகங்கள் நல்ல காகிதத்தில் அச்சிட்டுச் செவ்வையாக வைக்கப்படுவது திருப்திகரமான விஷயம். ஸ்ரீரங்கம் ஸ்ரீ வாணி விலாச அச்சுக்கூடம், திருநெல்வேலியில் உள்ளதைப்போன்றுள்ள பிரசுர சங்கங்கள் இவைகள் இந்த வேலையைத் திறம்படச் செய்கின்றன. அவற்றிற்கு ஆதரவு அளிக்க வேண்டும்.

சிலர் நல்ல புத்தகங்களைப் படிக்கும்போது புத்தகத்திலேயோ வேறு காகிதத்திலேயோ குறிப்பு எடுக்கின்றனர். நான் ஒரு போதும் அப்படிச் செய்வதில்லை. இதுபற்றி நீ என்ன நினைக்கிருய் என்று எனக்குத் தெரியாது. புத்தகத்தைப் படிக்கும்போது அதுபற்றிய உன் அபிப்பிராயங்களைத் தனியாக ஒரு நோட் புத்தகத்தில் குறிப்பு எழுதிக்கொள்ளலாம். ஞாபக சக்தியை வளர்த்துக்கொள்ள இது உதவியாக இருப்பதுடன் கையெழுத்தும் நன்கு படியும்.

எனவே படித்துப் பயன் பெறு.

29-7-'41.

# நல்லவர் பழக்கம்

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

உண்மையில் நல்ல முறையில் உள்ள சகவாசத்தின் விசேஷத்தை மிகைப்படுத்தத் தேவையில்லை. மகாபுருஷரான ஸ்ரீ சங்கராச்சாரியார் பின் வருமாறு கூறுகிறார் :

सत्संगत्वे निःसंगत्वं निःसंगत्वे निर्मोहत्वं ।
निर्मोहत्वे निश्चलतत्वं निश्चलतत्वे जीवन्मुक्तिः ॥

நல்ல சகவாசத்தால் பந்தத்திலிருந்து விடுபட முடிகிறது. விடுபட்ட தன்மையிலிருந்து அறியாமை விலகுகிறது. இதனால் சத்தியத்தில் நாட்டம் பிறக்கிறது அதிலிருந்து வாழ்க்கையில் உலக இச்சைகளை விலக்க முடிகிறது. இது மிகவும் உயர்ந்த அத்வைத விஷயம். இப்போது இதை உனக்குப் போதிப்பதற்கில்லை. நல்லவர் சேர்க்கையின் பெருமையைச் சொல்லவே இதை உனக்குத் தெரிவிக்கிறேன்.

நல்லவர்களாகவும் மேதாவிகளாகவும் இருப்பவர்களிடையே இருப்பதால் திருப்திகரமான பலன் கிட்டிவிடுகிறது. ஒருவர் இன்னொருவரின் மகிமையைத் தெரிந்துகொண்டுவிட்டால் அவர் அதன் பயன்களை அநுபவிக்க, நேரிலேயே, சம்பந்தப்பட்ட பெரியாருடன் இருக்க வேண்டும் என்ற அவசியம் இராது.

ஸ்ரீ பரதன் உதாரணத்தை இங்கே குறிப்பிடலாம். ஸ்ரீலக்ஷ்மணன் ஸ்ரீ ராமபிரானிடம் அத்யந்த பக்திகொண்ட சகோதரர். எப்போதும் ஸ்ரீ ராமன்கூடவே இருந்தார். ஸ்ரீ பரதன் இன்னும் ஒரு படி மேலான பக்தன், தன் சகோதரரின் ஆக்ஞைக்குப் படிந்து பதினான்கு வருஷ காலம் நந்திக்கிராமத்தில் தங்கியிருந்தான்.

## அருமைப் புதல்விக்கு

மனித வர்க்கத்தின் முன்னேற்றம் ஸத் புருஷர்களின் உதாரணத்தையே பொருத்திருக்கிறது. கடவுள் ஒருவர் உண்டு என்பதை அறிந்து, நாம் நம்பிக்கை கொள்வதற்கு முனிவர்கள், தவசிரேஷ்டர்கள் இவர்கள்தான் காரணம்.

இதே மாதிரி பால்யப் பருவம் முதல் நமது பழக்க வழக்கங்களெல்லாம் தொடர்ச்சியாக மற்றவர்களைப் பார்த்தே படிந்து வருகின்றன. இயற்கையாக இல்லாமல் வேண்டுமென்றே மற்றொருவரைப்போல் நடப்பது என்று வந்தால் அது தற்கொலைக்கு ஒப்பானதாக இருக்கும். ஆனால் நாம் இயற்கையாகப் பெரிதும் விரும்பிக் கொண்டாடுபவர்களைப்போலவே நடந்து, நமது வாழ்க்கை முறைகளை அமைத்துக்கொள்கிறோம். நல்லவர்களோடு இணங்குவோமானால் நல்லது; அதுதான் அதிருஷ்டம்.

சில சமயங்களில் இதில் தேர்ந்தெடுப்பது சிரமம். உறவினர்கள் இருக்கின்றனர்; இவர்களிடையே இருந்து நாம் தேர்ந்தெடுத்துக்கொள்ள வேண்டும். நண்பர்களைக்கூடப் பொறுக்கியெடுத்துக்கொண்டு விடலாம்.

நல்லவர்கள் யார்? கெட்டவர்கள் யார்? இதற்குத் திட்டமாகப் பதில் சொல்ல முடியாது. யாரையும் முற்றும் நல்லவர் என்றோ கெட்டவர் என்றோ சொல்ல முடியாது என்று ஏற்கனவே நான் ஒரு முறை எழுதியிருக்கிறேன். ஆனால் யார் நல்லவர்கள் என்பது நமக்குத் தெரியும். அவர்களுடைய நல்ல தன்மையின் ரகசியம் என்ன? இது வெளித் தோற்றத்தில் இல்லை. சுத்தமாக நல்ல உடை அணிந்திருப்பது அவசியம் என்பது என் கருத்து என்றாலும் வெளித்தோற்றத்தினால் மட்டும் நல்ல தன்மை புலப்படாது. வாழ்க்கையில் கொள்ளும் மனோபாவம், மற்றவர்களிடம் நடந்துகொள்ளும் முறை, இவற்றிலிருந்தே யார் நல்லவர் என்பதை நிர்ணயம் செய்ய முடியும். குழந்தைகளிடமும் பெண்களிடமும் அவர்கள் அன்போடு நடப்பார்கள். கோபம் மூட்டினால்கூடப் பதட்டமாகப் பேசமாட்டார்கள். அவர்களுக்குக் கோபம் வருவது அபூர்வம். அபாரமான

பொறுமைசாலிகளாகவும் இருப்பார்கள். மற்றவர்களைப்பற்றி நன்கு அறிந்திருப்பார்கள். உன்னதமான அடக்கத்தைப் பெற்றிருப்பார்கள். தெய்வபக்தி உண்டு. சுயநலம் இராது. பிறருக்காகக் கஷ்டப்பட்டுச் சேவை செய்வார்கள். அன்பர்களுக்கு அரும்பணி ஆற்றுவார்கள். விரோதிகளை மன்னித்துவிடும் சுபாவமும் இருக்கும். அந்தமாதிரியான நபர்கள் உண்மையில் நல்லவர்கள்; பெரியவர்கள். அவர்களால் நமக்கு ஓர் உத்வேகம் ஏற்படும்.

நாம் இருக்கும் தோரணைக்கு ஏற்ற அளவிலேயே, நல்லவர்கள் பழக்கத்தால் பயன் கிடைக்கும். இது சுலபமானதல்ல. ஆனால் கஷ்டமென்று சொல்லவும் முடியாது. கெட்டவை சீக்கிரம் பற்றிக்கொள்ளும் என்கிறார்கள். ஆனால் இது வெறும் பிரமை. உறுதி இருக்கும் பக்ஷத்தில் நல்ல உதாரணங்களும் சுலபமாக வந்தடையும். முயற்சி வேண்டும். வெற்றிகரமாக அம்முயற்சி அமைந்தால் அடுத்தபடியாகச் செய்யவேண்டியவை சுலபமாகும்.

இதை டாக்டர் ஜான்ஸன் நனகு வருணித்து உவமை கூறியிருக்கிறார். உனக்குப் பால்யம். எனவே மேலே சொன்னது உனக்குச் சுலபம். ஆகவே நீ எப்போதும் நல்லவர்கள் பழக்கத்தைப் பின்பற்றி நடக்க வேண்டும். நல்ல முறையில், நல்லபடியாக நடக்க முடியாது என்று யாரும் சொல்ல முடியாது. திறமையின் உச்சத்தை அடைய நமது வாழ்நாள் முழுதும் ஒரு முயற்சியாக அமைய வேண்டும். இதில் நீ வெற்றி பெறுவாயாக!

**30-7-'41.**

# பிறந்த நாள்

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

இன்று உனக்குப் பதினாறாவது பிறந்த நாள்.

இதர காரணங்கள் ஒருபுறம் இருப்பினும் நான் இன்று இங்கிருந்து உன்னைச் சந்திக்கும்படியாக இருப்பது எனக்குச் சந்தோஷமே.

உன்னைப் பரிபூர்ணமாக ஆசீர்வதிக்கிறேன்.

சந்தோஷமாகவும் சுயநலம் இல்லாமலும் நல்லறிவோடும் தீர்க்காயுளுடனும் நீ வாழப் பகவான் அருள் புரிவாராக!

மார்க்கண்டேயனைப்போல நீயும் என்றும் பதினாறாக, சிரஞ்சீவியாக இருக்கப் பகவானைப் பிரார்த்திப்போமாக!

நமது பிறந்த நாட்களை வைதிகக் கிரமப்படி நடத்தி, உற்றார் உறவினர்களைச் சந்தித்துக் கொண்டாடுவது மிகச் சிறந்த சம்பிரதாயம். மலையாளத்தில் ஜன்ம தினக் கொண்டாட்டம் தவறாமல் நடைபெறுகின்றது. நம்மவர்கள் குழந்தையின் முதல் ஆண்டு நிறைவைக் கொண்டாடுவதைத் தவிர இதர ஜன்ம தினங்களைக் கொண்டாடுவதில்லை. அறுபது ஆண்டுப் பூர்த்தியை மாத்திரம் கொண்டாடுகிறோம். எல்லாப் பிறந்த நாட்களையும் கொண்டாட வேண்டும் என்பதே என் அபிப்பிராயம், நீ என்ன நினைக்கிறாய்?

ஒவ்வொரு பிறந்த தினம் வரும்போதும் நாம் கடவுளைப் பிரார்த்தித்து வணங்க வேண்டும். நமக்கும் பிறருக்கும் தீர்க்காயுளையும் சந்தோஷத்தையும் அளிக்குமாறு பகவானைத் துதிக்க வேண்டும். ஒவ்வொரு பிறந்த தினமும், 'நாம் ஒரு வருஷத்தைக் கழித்துவிட்டோம், புது வருஷம் ஆரம்பமாகிறது' என்பதை ஞாபகப்படுத்தும்.

# பிறந்த நாள்

நாமெல்லோரும் அனைத்திலும் முழுப் பக்குவம் அடைந்தவர்கள் அல்ல. தவறு இழைக்கக் கூடும்; தவறுகள் செய்கிறோம். வெகு கேவலமாக இருந்தாலன்றி, நாம் விஷயங்களை நன்கு தெரிந்துகொள்கிறோம்; அதே தவறுகளால் நல்வழிப் படுகிறோம்.

தவறு செய்வது சகஜம். அதையே தொடர்ந்து செய்வது மனித வர்க்கத்துக்கு உகந்த தல்ல; எனவே பிறந்த நாளன்று கடவுள் வழிபாடு ஒருபுறம் இருக்க, போன வருஷத்தில் செய்தவற்றைச் சிந்தித்துப் பார்க்க வேண்டும். நல்ல காரியங்கள் செய்திருந்தால் சந்தோஷப்படலாம். கெடுதலானவற்றைச் செய்திருந்தால் வருத்தமும் படலாம். புது வருஷத்தில் நல்ல காரியங்களைச் செய்வது என்று உறுதி செய்துகொள்ளலாம். மனித வர்க்கம் முன்னேறுவது என்பது நிதானமாக நடக்க வேண்டிய விஷயம். உன்னதமான தீர்மானங்களைச் செய்துகொள்வதற்குப் பிறந்த நாட்கள் சிறந்த சந்தர்ப்பங்களாக இருக்கும்.

ஹிந்துக்களாகிய நாம் பிறந்த நாளன்று ஆயுஷ் ஹோமம் செய்கிறோம். இது கடவுளை வழிபடுவதற்கான வழிகளில் ஒன்று. அதைப் பரிசுத்தமான சடங்கு எனலாம். பிராமணர்களுக்குச் சன்மானம் வழங்கி, உணவு அளிக்கிறோம். நல்ல காரியந்தான். கட்டுப்பாடாகவுள்ள தர்ம ஸ்தாபனங்களின் மூலம் ஏழைகளுக்கு அன்னதானம் செய்வது இன்னும் நல்லது என்று நான் எண்ணுகிறேன். அன்று கோயில்களுக்குச் சென்று வழிபடுகிறோம். மொத்தத்தில் நாம் பிறந்த நாளன்று பிரார்த்தனையிலும், கடவுள் வழிபாட்டிலும் ஈடுபடுகிறோம்

வாழ்வில் அவநம்பிக்கை கொண்டு அதில் பற்றில்லாமல் ஓர் ஆங்கிலக் கவி, 'உன் இதயத் துடிப்பு மயானத்திற்குச் செல்லும் வாத்தியத்தின் அடிப்பு' என்று பாடியிருக்கிறார். ஹிந்துக்களாகிய நாம் சாகா வரம் பெற்றவர்களாக நினைந்து வாழ்ந்து வருகிறோம். அந்த நினைப்போடு விஷயங்களை உணர்ந்துகொண்டு, நல்ல கருமங்களை நீ இயற்ற வேண்டும்.

இங்கிலீஷ்ப் பஞ்சாங்கப்படியும், நமது பஞ்சாங்கப்படியும் நமக்குப் பிறந்த நாட்கள் வரும். ஹிந்துக்கள் பஞ்சாங்கத்தை

## அருமைப் புதல்விக்கு

அநுஷ்டிப்பதே சிறந்தது என்று நான் எண்ணுகிறேன். இக் கொண்டாட்டத்தில் தேதி முக்கியம் அல்ல; நக்ஷத்திரமே முக்கியம். ஆகவேதான் நமது ஜன்ம தினங்கள் ஜன்ம நக்ஷத்திரத் தன்று நடைபெறுகின்றன

பிறந்த தினக் கொண்டாட்டத்திலிருந்து ஜோதிடம், அதில் நமக்குள்ள நம்பிக்கை முதலிய கேள்விகள் எழுகின்றன. எனக்கு ஜோதிடத்தில் நம்பிக்கை உண்டு. எனக்கு ஆறேழு வயதிலிருந்தே அந்த நம்பிக்கை ஏற்பட்டது என் அப்பா நல்ல ஜோதிடர். அவர் எனக்கு மூன்று விஷயங்களைச் சொன்னார்:

'நீ ஓர் பிரசங்கியாக இருப்பாய்; நீ அயல் நாடுகளுக்குப் போவாய்; எனக்குக் கயையில் நீ சிரார்த்தம் செய்வாய்.' இவை மூன்றும் எனக்குத் தெளிவாக நினைவிருக்கின்றன. இவை பலித்துவிட்டன.

வெகு சில்லறையான விஷயங்களை யெல்லாம் ஜோதிடர் களிடம் நாம் எதிர்பார்க்கக்கூடாது. அவ்வளவுதான். நன்கு படித்தறிந்த ஜோதிடர்களிடம் நாம் நல்ல காலத்தையும் கெட்ட காலத்தையும் கேட்டறிந்து முன்னெச்சரிக்கையாக இருக்கலாம்.

ியை மனிதன் வெல்ல முடியாதா?' என்ற கேள்வி பிறக்கும். அநுபவத்தில் பார்த்தால் அறிய முடியாத சக்திகளின் வேலைகளிலிருந்து யாரும் தப்ப முடியாதென்று நான் சொல்வேன். சில சமயங்களில் சாதகமாகவும் சில சமயங்களில் பாதகமாகவும் சம்பவங்கள் நிகழும். அறிவைக் கொண்டுதான் அநுகூலம் தேடிக்கொள்ள வேண்டும்.

ஜோதிடத்தில் நம்பிக்கை இருக்கிறதோ இல்லையோ, கடவுளை வழிபட்டு நல்ல வழி அடைவதில் நம்பிக்கை வேண்டும். கடவுளை நினைத்து, நல்வழி கோரிப் பிரார்த்திக்க, பிறந்த நாட்கள் சிறந்த சந்தர்ப்பமாக இருப்பதாகவே நான் சம்பந்தப்பட்டவரை கருது றன். ஆனால் பிரார்த்தனை வெகு பணிவுடன் இருக்க

வேண்டும். நல்லது எதுவென்றே நமக்குத் தெரியவில்லை என்ற தோரணையில் வழிபட வேண்டும்.

இந்தப் பதினாருவது வயதில் உனக்கும் உன் உற்றார், சுற்றத்தாருக்கும் பகவான் நல்லவற்றை அவரவர்கள் தகுதிக்குத் தக்கவாறு வழங்கப் பிரார்த்திப்போமாக.

1-8-'41.

# ஆனந்தம்

**என் அன்புள்ள**
**லக்ஷ்மிக்கு,**

தன் வாழ்நாள் முழுவதும் கற்றுக்கொள்ள வேண்டிய அளவு எவ்வளவோ கலைகள் இருக்கின்றன. ஆனந்தம் என்பது ஒரு தனிக் கலை. அதற்கு உன்னதமான ஸ்தானம் உண்டு. தானும் சந்தோஷமாக இருந்து பிறரையும் சந்தோஷிக்கச் செய்வது என்பது தெய்விக அருள்வாய்ந்த குணம். வாழ்க்கை முழுவதும் சந்தோஷமானது என்பது இல்லை. நெருக்கடியான சந்தர்ப்பங்கள், கஷ்டங்கள், துரதிருஷ்டங்கள் இவையெல்லாம் வாழ்க்கையில் சம்பவிக்கின்றன. இதைச் சமாளிக்க வேண்டும். கஷ்டங்களைக் கண்டு சிலர் வெதுண்டு போகிறார்கள். நல்ல வீரனுக்குள்ள உணர்ச்சியோடு கஷ்ட நிஷ்டூரங்களைச் சமாளிக்க வேண்டும்.

ஒருவருடைய வாழ்க்கையில் சில சம்பவங்கள் வெகு துக்கப் படும்படியாக நேரக்கூடும். அதைத் தவிர்க்க வழி இல்லை. இருப்பினும் அவற்றையெல்லாம் பொறுமையுடன் சகித்துக் கொள்ளவே வேண்டும். முன்னெச்சரிக்கையாக இருந்து அவற்றின் வேகத்தையும் அளவையும் குறைத்துக்கொள்ளலாம்.

இன்னும் சில சங்கடங்கள் இருக்கலாம். அம்மாதிரியான நிலைமைகளில் எதிர்கால நம்பிக்கைகொண்ட மனோபாவத்துடன் தைரியமாகச் சமாளிக்க வேண்டும். 'கரிய வானத்தில் வெள்ளிக் கீறு விழுந்தாற்போல' என்றும் இன்னும் இதைப்போலவே, 'வெகு கஷ்டமான நிலைமையிலும் நல்லதைக் காண முடியும்' என்றும் இன்னொரு பழமொழியும் ஆங்கிலத்தில் உண்டு. இந்தக் கட்டத்தில்தான் சந்தோஷமாக, மனந்தளராமல் இருக்க வேண்டும்.

# ஆனந்தம்

வாழ்க்கையில் நல்ல விஷயங்களில் ஆனந்தப்படுவதிலும் ஓர் தனி அழகு இருக்க வேண்டும். அநுதாபத்தோடும் விஷய உணர்வோடும் இருந்து நல்ல விஷயங்களை ஆனந்திப்பதென்றால் அது அலாதியான சந்தோஷம். உதாரணமாகச் சங்கீதம், நடனம், ஓவியம், நடிப்பு முதலியவற்றை எடுத்துக்கொள்ளலாம். அக் கலைகளிலுள்ள அழகு, கட்டுப்பாடு, பயிற்சி முதலியவற்றை நன்கு உணர்ந்திருந்தால் அக்கலைகளை ரஸித்து ஆனந்தப்பட முடியும்.

'கலையை அநுபவிக்க வேண்டுமானால் அதன் நுணுக்கங்கள் தெரிந்திருக்க வேண்டுமா?' என்ற பிரச்னை இந்தச் சந்தர்ப்பத்தி லும் எழக்கூடும். இதைப்பற்றி உன்னோடும் உன் அம்மாவுட னும் நான் சிற் சில சமயங்களில் விவாதித்திருக்கிறேன். எனக் குச் சங்கீதத்தில் நிறைய அபிமானம். ஆனால் சங்கீத சாஸ்திர லக்ஷணங்கள் எனக்குத் தெரியாது. ஆகவே, ஹாஸ்யமாக, 'நல்ல விருந்துணவை ருசிப்பதற்கு நன்றாகச் சமைக்கத் தெரிய வேண்டும் என்ற அவசியம் இல்லை' என்று நான் சொல்வதுண்டு. உண்மையில் உயர்வாக உள்ள கலை எதுவும் பாமரருக்கும், பண்டிதர்களைப்போலவே சுவை தரும். சம்பந்தப்பட்ட கலை களில், சொற்ப ஞானமும் இருந்துவிட்டால் ரஸாநுபவம் விசே ஷமாக இருக்கும் என்பதில் சந்தேகம் இல்லை.

இன்னோர் அம்சத்தை நான் வற்புறுத்திச் சொல்ல வேண்டும். ஞானபாவம் இருந்தால்தான் வித்வானுக்குள்ள கஷ்டங்கள் தெரியும். சாதாரணமாகவுள்ள ஒருவர் கச்சேரியோ நடனமோ வெகு தரமாக இருக்க வேண்டுமென்று எதிர்பார்க்கிறார். அதற் காக அவர் பணம் கொடுத்திருக்கிறார் அல்லவா? ஆனால் கலையின் ஆழம் அவருக்குத் தெரியாது. (विद्वानेव विजानाति विद्वज्जन परिश्रमम् ।)

எனவே மனத்தில் கலையைப்பற்றி அநுதாபம் தொனிக்க வேண்டுமானால் ஞானம் சிறிது வேண்டும்.

நமது கலைத் தரம் மட்டமாக இருக்க வேண்டுமென்றோ அல்லது சாதாரணப் பேர்வழிகளை எல்லாம் ஆதரிக்க வேண்டு மென்றோ நான் சொல்லவில்லை. உள் விஷயம் அறிந்து, ஞான

பாவத்தோடு உள்ளவர்கள் சபையில் இருப்பதால் வித்வானுக்கும் உத்ஸாகம் ஏற்படும்.

ஆனந்தமடையும் விஷயத்தில் இன்னோர் அம்சமும் உண்டு. ஆனால் இதைப் பலர் கவனிப்பதில்லை. அநேகர் கலையின் நுணுக்கங்களைக் கூர்ந்து கவனித்து அநுபவிப்பதில்லை. அநேகமாக நாம் ஒரே பாட்டையும் ஒரே படத்தையும் கேட்டும் பார்த்தும் திருப்தி அடைந்துவிடுகிறோம். இதனால் கஷ்டமில்லை. ஆனந்தத்தில் இன்னொரு வகை. ஆனால் அது கொஞ்சம் கஷ்டமானது. புதிதாகவும் நேரடாகவும் உள்ள கச்சேரிகளுக்குப் போய் அநுபவிப்பது என்பது ஆனந்தப்பட வேண்டுமென்ற அக்கறை அதிகம் உள்ளவர்களுக்கு உண்டு. அந்த ஆனந்தம் அவர்களுக்குக் கிட்டும்.

ரஸிகத் தன்மை, தாம் இருக்கும் இடத்தில் உள்ளவர்களுக்கும் அபிவிருத்தி அடையும்படி செய்வதும் மகிழ்ச்சிகரமானது தான். சந்தோஷம் என்பது தொடர்ந்து பரவக்கூடியது. சந்தோஷமாக நீ இருக்கிறாய் என்று தெரிந்தால் உன்னை அண்டியிருப்பவருக்கும் ஆனந்தம். சிலர் தங்கள் ஆனந்தத்தை வெளிக்காட்டமாட்டார்கள்; நான் அப்படி அல்ல. நீயும் அல்ல.

நாம் கலைக் காட்சிகளைக் கண்டு ஆனந்திக்க வேண்டும். இதன் மூலம் கலைஞர்களையும் மற்றவர்களையும் ஆதரிக்க வேண்டும்.

2-8-'41

# சீதையின் பெருமை

**என் அன்புள்ள**
**லக்ஷ்மிக்கு,**

இந்த வாரம் உனக்குச் சொந்த விஷயமான கடிதங்களை எழுதிக்கொண்டு வந்தேன். இன்று உனக்கும் எனக்கும் நேரடியாகச் சம்பந்தமில்லாத ஆனால் ருசி தரக்கூடிய விஷயம்பற்றி மறுபடியும் எழுதுகிறேன்.

மிக்க ருசியைத் தரும்படியான ஒரு கதை உண்டு. அநேகம் வருஷங்களாக நான் அக்கதையைப் படித்து வருகிறேன். அதாவது ராமாயணத்தையே குறிப்பிடுகிறேன். வால்மீகி ராமாயணத்தை நீ படிக்க ஆரம்பித்தால் உனக்கும் அத்தகைய ருசி பிறக்கும். இராமனைப்பற்றிக் கூறுவது ராமாயணம் என்றாலும் உண்மையாகப் பார்க்கப்போனால் அது சீதாதேவியின் கதை என்று சொல்ல வேண்டும். 'சீதா தேவியின் பெரிய கதை' **(सीतायाः चरितं महत्)'** என்று கவியே சொல்கிறார்.

ஏன் என்பதை நான் உனக்குச் சொல்கிறேன். நம்மையெல்லாம்போல் ஸ்ரீ ராமசந்திரமூர்த்தி சகோதரர்களுடன் பிறந்தார். ஆனால், சீதை அப்படி அல்ல. கர்ப்ப வாசமின்றி ஜனித்தவள் **(अयोनिजा)**. பூமியிலிருந்து உதித்தவள். இதுதான் அவளது ஜனனத்திலுள்ள தனி விசேஷம். அவளுடைய திருமணம் ஸ்ரீராமனின் தெய்விக சக்தியால் நிர்ணயிக்கப்பட்ட வைபவம். சிவனின் தனுஸை வளைக்கக்கூடிய சக்தி சாமானியமாக எந்த மனிதருக்கும் இருக்காது. ஜனக ராஜா வேறு யாருக்கும் தன் பெண்ணை மணம் முடித்திருக்கமாட்டார். ஸ்ரீ ராமனே சீதா தேவியை மணக்க நேரில் முன்வந்தார். விஸ்வாமித்திர மகரிஷி இவ்விவாகத்துக்கு ஏற்பாடு செய்தார். விஸ்

வாமித்திர முனிவரும் ஜனக மகாராஜாவும் முன் கூட்டியே சீதையைப்பற்றி ராமனிடம் இப்படிக் கூறினர்: 'இவள் பதிவ்ருதை, பெரும் பாக்கியசாலி, உன்னை நிழல்போல் தொடரும் உத்தமி (पतिव्रता महाभागा छायेव अनुगता सती)' என்று. இது உண்மையாகவே முடிந்தது.

சீதை எப்போதும் ராமனுடனேயே இருக்க வேண்டும். ஸ்ரீ ராமன் வனத்துக்குச் செல்ல முற்பட்டபோது சீதையை விட்டுப்போக எண்ணுகிறார். அப்போது சீதை ராமனைப் பார்த்து, 'நீங்கள் ஒரு பெண்' என்று சொல்லிவிட்டு ராமனுக்கு முன்னால் காட்டுக்குப் புறப்படுகிறாள். வனத்தில் ஸ்ரீ ராம லக்ஷ்மணருடன் சுக துக்கங்களைப் பகிர்ந்துகொள்கிறாள்.

ரிஷிகளின் தவத்துக்குப் பங்கம் விளைத்த ராக்ஷஸர்களைத் தண்டிக்க ஸ்ரீ ராமன் தண்டகாரண்யம் சென்றபோது சீதா தேவி தாய் அன்புடன், யாரையும் அநாவசியமாகக் கொல்லக்கூடாது என்று ராமனிடமிருந்து வாக்குறுதி கோருகிறாள். சீதை தன் வாழ்நாளில் ஒரே ஒருமுறை தன்னுடைய நிதானத்தை இழந்து ஸ்ரீ லக்ஷ்மணனைத் தாழ்வான பாஷையில் திட்டுகிறாள். மாரீசன் மான் உருக்கொண்டு வந்த கட்டத்தில் இது நடக்கிறது. ஸ்ரீலக்ஷ்மணன் அந்தச் சொல் தாங்காமல், மனமின்றி அவளைவிட்டுப் போகிறான். அப்போது ராவணன் சீதையைத் தூக்கிச் சென்று விடுகிறான்.

ஹநுமான் அசோக வனத்தில் சீதையைச் சந்தித்தபோது ஸ்ரீ ராமனைப்பற்றி இரண்டு சுலோகங்களுடன் சொல்லி நிறுத்தி விட்டு, எட்டு ஒன்பது சுலோகங்கள் லக்ஷ்மணனைப்பற்றிச் சொல்லுகிறாள். இளைய பெருமாளுடைய பக்தி விசுவாசத்தை அவள் தக்கவாறு புகழ்ந்திருக்கிறாள். உண்மையான ஒரு ஸ்திரீ, மன்னிப்பைத் தெரிவிப்பதற்கு இது ஒரு சான்று. இவற்றை யெல்லாம் ஹநுமான் லக்ஷ்மணனிடம் தெரிவித்தாரா இல்லையா என்பது எனக்குத் தெரியவில்லை. வால்மீகி அப்படிச் சொல்ல வில்லை. ஸ்ரீ லக்ஷ்மணன் அதைக் கேட்டிருந்தால் திருப்திப்பட்டிருப்பார்.

# சீதையின் பெருமை

இலங்கையில் சீதை ராவணனால் சிறைப் பிடிக்கப்பட்டுத் திக்கற்றுத் தவிக்கிறாள். ஸ்திரீயின் பெருமை, தன்னலமற்ற தன்மை, தீரம், பரிசுத்தம் இவையெல்லாம் சீதையிடம் எவ்வளவு உயர்வாக இருந்தன தெரியுமா? ஸ்ரீ ராமனிடம் அழைத்துப் போவதாக ஹநுமான் சீதையிடம் சொல்லுகிறார். இதை வேண்டாமென்று யாராவது சொல்வார்களா? சீதை சொன்னாள்! 'நான் மற்றொருவரைத் தீண்டேன். (ராமன்) என் நாயகன் வரட்டும், ராவணனை முறியடித்து என்னை அழைத்துப் போகட்டும். அதுவே அவருக்கும் பெருமை; எனக்கும் பெருமை' என்று சொல்லிவிட்டாள்.

ராவணனுக்கு நல்லதாகவும் எச்சரிக்கையாகவும் சீதை சொல்லும் கருத்துக்களெல்லாம் அவளுடைய பெருமையை விளக்கக்கூடியவை. அவளுக்கு ராவணனிடம் பயமே இல்லை. ராவணன்கூட அவள் முன்னால் தலை கவிழ்ந்து நின்றான்.

ராவணனை வென்ற பிறகு ராமன் சீதையைச் சந்தேகிக்க நேரிட்டபோதுதான் சீதைக்குப் பெரிய சோதனை ஆரம்பம். ஆதாரமில்லாத சந்தேகத்தின் பயனாகச் சீதையை ஏற்க மறுக்கிறார் ராமன். அப்போது மிகுந்த ஆவேசத்தோடு ஸ்ரீ ராமனை அவள் இப்படிக் கேட்கிறாள்: சாமானியன் ஒரு சாமான்யப் பெண்ணைக் கேட்பதுபோல் கேட்கிறாயே.' (प्राकृतः प्राकृतामिका)' என்று. உடனே அக்கினிப்பிரவேசம் செய்து பரிசுத்தமாக வெளிவருகிறாள். ராமனுக்குச் சமாதானம் ஏற்படுகிறது.

ராமனைப் பலவாறாக நாம் அழைக்கிறோம். ஆனால் சீதாராமன் என்பதே நமக்குப் பொருத்தமாக இருக்கிறது. சீதாதேவி உண்மையில் ஒரு பெரிய ஸ்திரீ ரத்தினம். அவள் சந்தோஷத்தைவிடக் கஷ்டத்தையே அதிகம் அநுபவித்தாள். ஆனால் அவள் நிலையான பெயரைப் பெற்று விளங்குகிறாள்.

நம் அனைவரையும் சீதாராமன் ஆசிர்வதிப்பாராக!

9-8-'41.

# ஸ்ரீ ஹநுமானின் சக்தி

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

ராமாயணத்தில் மிகவும் முக்கியஸ்தராக விளங்கிய மற்றொரு வீரன் ஸ்ரீ ஹநுமான். கவி அவரைப் பின்வருமாறு வர்ணிக்கிறார்:

'ஹநுமான் மனோ வேகத்துக்கும் வாயு வேகத்துக்கும், ஒப்பானவர்; மேதையில் சிறந்தவர். வாயுவின் புத்திரர்; வானர சேனையின் அதிபர்; ஸ்ரீராமபிரானின் தூதன்; அவருக்குத் தலை; வணங்குகிறேன்.

मनोजवं मारुततुल्यवेगं जितेन्द्रियं बुद्धिमतां वरिष्ठम् ।
वातात्मजं वानरयूथमुख्यं श्रीरामदूतं सिरसा नमामि ॥

சுந்தர காண்டத்தை இப்போது நான் தினசரி பாராயணம் செய்கிறேன். அதில் ஹநுமானைப்பற்றி வருகிறது.

கடலை வெகு துரிதமாக, எளிதில் தாண்டித் திரும்பிச் சேர்ந்த மகா ஆச்சரியமான சம்பவத்துக்கு அவர் காரணஸ்தர். அந்தக் காலத்தில் இம்மாதிரி எவரும் செய்திருக்க முடியாது. இந்தக் காலத்திலும் சாத்தியமில்லை. எவ்வளவோ தடைகளெல்லாம் குறுக்கே இருந்தன என்றாலும் இந்த அற்புதமான சம்பவத்தை அவர் வெற்றியாகச் சாதித்துவிட்டார். கடலைத் தாண்டித் திரும்பி வந்தவுடன் ஸ்ரீ ராமபிரான் ஹநுமானுக்கு விசேஷமாக நன்றி தெரிவித்ததில் ஆச்சரியமில்லை.

ஹநுமானை, 'ஜிதேந்திரியன்' என்று கவி நாமஞ் சூட்டி அழைத்திருக்கிறார். அதாவது இந்திரியங்களை வென்றவன் ஹநுமான் என்பது பொருள். சுந்தர காண்டத்திலே இந்த அம்சமும் இடம் பெற்றிருக்கிறது. பரிமளம் மிகுந்து, அலங்காரங்கள் செய்யப்பட்டிருக்கும் ராவணனின் சயன அறையில் ஹநுமான் அங்குமிங்கும் சஞ்சரிக்கிறார். இவற்றால் தன் மனநிலை சபலமடைகிறதா என்று சிந்திக்கிறார். இப்படி ஒரு நிமிஷந்தான்;

ஆனால் அவைகளை லட்சியம் செய்யாமல் அவர் இந்திரியங்களை வென்றுவிட்டார்.

சீதா தேவியினுடைய துக்ககரமான நிலைமையை நினைந்து தனக்குத் தானே, 'இந்த மாதிரியான காட்சிகளைக் கண்டு மன வேறுபாடு அடையக்கூடாது' என்று அவர் கூறிக்கொள்கிறார்.

'விவேகிகளில் ஹநுமான் சிரேஷ்டர்' என்று கவி சொல்லுகிறார். வானமண்டலத்தில் எழும்பிக் கடலைக் கடக்கையில் நேர்ந்த தடைகளை அவர் சமாளித்தது; லங்காதேவியை முறியடித்தது; சீதா தேவியுடன் சம்பாஷணை; ராவணனுடன் பேசிய முறை இவைகளெல்லாம் அவருடைய அறிவுத் திறனைக் காட்டக் கூடிய அம்சங்கள். ராவணன் சீதையைப் பயமுறுத்தி ராக்ஷஸிகளைக் காவல் போட்டுவிட்டுப் போனபின்னர் அசோகவனத்தில் ஹநுமான் பிரவேசிக்கிறார். அப்போது அவருடைய நிலைமை வெகு கஷ்டமாக இருக்கிறது. தான் தோற்றத்தில் வெறும் குரங்குமாதிரி இருக்கையில் சீதாதேவியிடம் சென்று தாம் ராமனின் தூதன் என்று அறிமுகப்படுத்திக்கொள்ள வேண்டியிருக்கிறது. அதோடு ராக்ஷஸிகளைப் பயமுறுத்தாமல் எச்சரிக்கையோடு நடந்துகொள்ளவும் வேண்டும்! ஆகையால் ஸ்ரீராமன், சீதா இவர்களுடைய கதையைச் சொல்ல ஆரம்பிக்கிறார். அதன் மூலம் அவர் நோக்கம் வெற்றி பெறுகிறது.

ஒரு சந்தர்ப்பத்தில் சீதாதேவி ஹநுமானைப் பின் வருமாறு கேட்கிறாள்: 'மனிதர்களுக்கும், குரங்குகளுக்கும் எங்ஙனம் தொடர்பு இருக்க முடியும்? **(वानराणां नराणां तु कथमासीत्-मागमः।)**' என்று.

ஹநுமான் பதில் கூறுகிறார். நிலைமையை விளக்கிச் சீதாதேவியைத் திருப்தி செய்யவேண்டி வந்தது. இதை அவர் வெகு அபூர்வமாகச் செய்திருக்கிறார். தம்முடைய பிறப்பு விசேஷத்தையும் சக்தியின் பெருமையையும் விளக்குகிறார். உடனே தம்முடைய அடக்கத்தையும் காட்டுகிறார். 'இதையெல்லாம் தேவிக்கு உறுதி ஏற்படுவதற்காகச் சொல்லுகிறேன் **(तव प्रत्ययकारणात् ।)**'

# அருமைப் புதல்விக்கு

ராமனிடம் மற்ெருருவர் உதவியோடு திரும்பிப் போகச் சீதாதேவி மறுத்ததை என்னுடைய சென்ற கடிதத்தில் உனக்கு எழுதியிருக்கிறேன். ஹநுமான் சீதாதேவியை அப்போது பாராட்டிப் புகழ்கிருர். 'இம்மாதிரி தாங்கள் கூறுவது தங்களுக்கும் தங்கள் பர்த்தாவுக்கும் உள்ள பெருமைக்கு உகந்ததாகும்' என்கிருர்.

ராவணனின் தர்பாரில் ஹநுமானின் பேச்சு வன்மை உச்சத்தை அடைகிறது. ராமாயணத்திலேயே ஹநுமானே நாவன்மை படைத்தவர் என்று நான் கருதுகிறேன். ராவணனின் தவறுகளை எடுத்துக் காட்டி, சீதையை ராமனிடம் திருப்பி அனுப்பும்படி எவ்வளவோ அவர் தூண்டிப் பேசுகிருர். ராவணன் கேட்கவில்லை. பதில் சொல்ல முடியாதபடி ஹநுமான் தெரிவித்த வாதங்களுக்கு ராவணன் பதில் சொல்ல முயலவில்லை. அப்படியே செய்திருந்தாலும் முடிந்திராது.

ஹநுமான் ஏன் இலங்கையைத் தீயிட்டு அழித்திருக்க வேண்டுமென்று நான் சிந்தித்தது உண்டு. இதற்கு ஹநுமானே காரணம் சொல்லியிருக்கிருர். ராவணனும் ராக்ஷஸர்களும் சீதையை நடத்திய முறை கண்டு, தமக்குக் கோபம் ஏற்பட்டதால் அங்ஙனம் செய்ததாகப் பின்ருல் ஓர் இடத்தில் அவர் தெரிவிக்கிருர்.

சுந்தர காண்டத்தில் இரண்டு இடங்களில் ஹநுமான் தாம் கண்டவற்றைத் தெரிவிக்கிருர். தமது நண்பர்களிடம் ஒரு முறை அதைச் சொல்லுகிருர். ஸ்ரீராமனிடம் வேறு தெரிவிக்கிருர் இந்தக் கட்டம் இரண்டும் இலக்கிய ரத்தினங்கள். அதில் முக்கியமான எதுவும் விடப்படவில்லை; அவசியமற்றவையும் இல்லை. சுற்றி வளைத்து எதுவும் கூறவில்லை; சொன்னதையே திருப்பிச் சொல்லவும் இல்லை. இரண்டு இடங்களிலும் ஹநுமான் தம் அடக்கத்தைக் காட்டுகிருர்.

**(मत्तः प्रत्यवरः कश्चित् नास्ति सुग्रीवसन्निधौ ।)**

ஹநுமான் நம்மை ஆசீர்வதிப்பாராக!

10-8-'41.

# பகவத் கீதை

என் அன்புள்ள
லக்ஷ்மிக்கு,

ராமாயணத்துக்கு அடுத்தபடியாகப் பகவத் கீதை. அதையும் நான் தினசரி பாராயணம் செய்துவருகிறேன். பகவத் கீதையில் உபதேசம் செய்யப்பட்டிருக்கும் கருத்துக்களுக்கு இணங்க லோகமான்ய பால கங்காதர திலகர் தமது அரசியல் வாழ்க்கையை அமைத்துக்கொண்டார். அவர் கீதைக்கு வெகு அற்புதமாக வியாக்கியானம் எழுதியிருக்கிறார். இந்திய தேசீய இயக்கத்தில் ஈடுபட்டிருக்கும் அநேக ஹிந்துத் தலைவர்கள் பகவத் கீதையைத் தழுவி நடப்பவர்கள்தான். (स्थितप्रज्ञः) என்று பகவத் கீதையில் இரண்டாம் அத்தியாயத்தில் கூறியுள்ளபடி மகாத்மாஜி தமது வாழ்க்கையை அமைத்துக்கொள்ள முயன்று வருகிறார்.

அவரை வருணிப்பதாகக் காணப்படும் கீதையின் இரண்டாவது அத்தியாயத்தின் ஸ்லோகங்கள் அவரது தினசரிப் பிரார்த்தனையின்போது சொல்லப்படுகின்றன.

'சொந்த விஷயமாயினும் சரி, சமூகம், குடும்பம், வகுப்பு, தேசம், சர்வதேசம் ஆகிய பொது விவகாரங்களாயினும் சரி, 'அஹிம்ஸா தர்மமே பரிகாரம்' என்று மகாத்மாஜி நம்புகிறார். இந்த நம்பிக்கை அவருக்குக் கீதையிலிருந்து பிறந்ததாகும். பல இடங்களில் அஹிம்ஸையின் மேன்மைபற்றிக் கீதையில் பிரஸ்தாபிக்கப்படுகிறதென்பதில் ஆக்ஷேபமில்லை. வேறு வகையில் வியாக்கியானத்தைத் திரித்தாலல்லது கீதை நியாயமான போரைப்பற்றி உபதேசிக்கிறது என்றே முடிவு செய்யும்படி இருக்கும்.

(धर्म्याद्धि युद्धाच्छ्रेयः अन्यत् क्षत्रियस्य न विद्यते ।)

ஆத்மிக சம்பந்தமான போராட்டத்தைப்பற்றிச் சொல்வதாகக் கூறும் வியாக்கியானத்தை நான் ஏற்கவில்லை.

## அருமைப் புதல்விக்கு

பகவத் கீதை வாக்கியத்தை நாம் சந்தர்ப்பத்துக்கு உகந்த மாதிரியில் கொள்ள வேண்டும். கௌரவர்களும் பாண்டவர்களும் இரு பிரிவிலும் யுத்த சன்னத்தமாக இருக்கின்றனர். திடீரென்று அர்ஜுனனுக்குச் சந்தேகங்களும் சங்கடங்களும் ஏற்பட்டுவிடுகின்றன; போராட அவன் விரும்பவில்லை. ஸ்ரீ கிருஷ்ணபரமாத்மா அப்போது அவனுக்குக் கீதையை உபதேசிக்கிறார்; பிறகு அர்ச்சுனன் போராடிக் கௌரவர்களை முறியடிக்கிறான்.

இது தர்ம யுத்தம். ஸ்ரீ கண்ணபிரானே நேரே கௌரவர்களிடம் தூது சென்று பாண்டவர்களுக்கு ஐந்து சிறிய கிராமங்களையாவது கொடுக்கும்படி கேட்கிறார். இதையும் கொடுக்க அவர்கள் மறுத்துவிட்டனர். எனவே பாண்டவர்கள் போராட வேண்டி வந்தது. யுத்தமுறை சம்பந்தப்பட்ட வரையில்கூட அது தர்ம யுத்தமாகவே இருந்தது. போர், க்ஷத்திரியர்களுக்குள் மட்டுமே நடந்தது. சாதாரண ஜனங்கள் பத்திரமாக, பாதிக்கப்படாமல் இருந்தனர். ஜன சஞ்சாரமே இல்லாத ஓர் இடத்தில் குரு க்ஷேத்திரத்தில் இந்த யுத்தம் நடந்தது. நகரத்தின்மீது குண்டுகள் வீசுவதே அப்போது வழக்கம் இல்லை. மகாபாரத யுத்தம் பாண்டவர்களுக்குப் பெயரளவில் வெற்றி கொடுத்ததேயன்றி அந்த யுத்தத்தால் எந்தப் பிரச்னையும் தீரவில்லை. க்ஷத்திரிய வம்சமே அழிந்துவிட்டது. ஆகவே கீதை தற்கால யுத்தத்தை ஆதரிப்பதாகச் சொல்வதற்கில்லை.

கீதையின் முக்கியமான உபதேசம் என்னவெனில் மனிதன் பற்றில்லாமல், தன்னுடைய கடமையை உணர்ந்து, அதை நிறைவேற்ற வேண்டும் என்பதே ஆகும். இதை ஒப்புக்கொண்டுவிட்டால் தற்கால யுத்தத்துக்கு நியாயம் இல்லை என்று ஆகிவிடும். ஒரு நாடு இன்னொரு நாட்டை ஆள வேண்டும் என்பது; மற்ற நாடுகளின் சாதனங்களைச் சுரண்ட வேண்டும் என்ற எண்ணம்; உலகில் மிகப் பெரிய பணக்கார நாடாக விளங்க வேண்டும் என்ற பேராவல் இவைதாம் தற்கால யுத்தத்துக்குக் காரணம். போன்ற யுத்தங்களைக் கீதை நியாயமாகக் காட்டவில்லை.

அதர்மத்தை அடக்கக் (विनाशाय च दुष्कृतां) குறைந்தபக்ஷ ஹிம்ஸா முறையைத்தன்னலத்துக்காக இன்றி உலக நலத்துக்காக அநுமதித்தால் இன்று அநுஷ்டிக்கப்படும் அநேகம் ஹிம்ஸா முறைகளுக்கு நியாயமே இல்லை; எனவே மகாத்மாஜி அஹிம்ஸா தர்மத்தைத் தமது கோட்பாடுக்கு ஆதாரமாகக் காட்டுவது தவறு?

சத்தியம், கடவுள், நல்வாழ்வு இவற்றை நம்புபவர்களுக்குக் கீதையில் அநேகம் உபதேசங்கள் இருக்கின்றன.

**न मे भक्तः प्रणश्यति ।**

என் பக்தன் அழிவதில்லை.

**न हि कल्याणकृत्कश्चित् दुर्गतिं तात गच्छति ।**

நன்மை செய்வோன் எவனும் தாழ்நிலை அடைவதில்லை.

இந்த உணர்ச்சி மிகுந்த பதங்கள் எனக்கு அடிக்கடி துணை நிற்கின்றன. உனக்கும் அவ்வாக்கியங்கள் துணையாக நிற்கட்டும். நமது வேதாந்த முறையிலுள்ள உன்னதமான உண்மையைக் கீதை ரத்னச் சுருக்கமாக எடுத்துக் கொடுக்கிறது.

விளக்கத்தையும் விமோசனத்தையும் நாடும் சாதாரண பக்தனுக்குக் கீதையில் மூன்று சுலோகங்கள் தக்க அமைதி அளிப்பவையாக அமைந்திருக்கின்றன.

'நான் தங்களைச் சரணமடைந்தேன்; என்னை ரட்சிப்பீராக'

'அர்ஜுனா நீ நிமித்த மாத்திரமாக இரு'.

'நான் தங்கள் கட்டளையை நிறைவேற்றுகிறேன்'

**शाधि मां त्वां प्रपन्नम् ।**

**निमित्तमात्रं भव सव्यसाचिन् ।**

**करिष्य वचनं तव ।**

நாம் எல்லோரும் அங்ஙனமே நடப்போமாக!

-'41.

சுபம்

**முற்றும்.**